சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

# சிவஞான பூஜா மலர்

குரோதன ஆண்டு (1985)




பிரசுரம் :

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

மேலமாம்பலம், சென்னை-600 033.


சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

## கைவசமுள்ள நமது சில அரிய பிரசுரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | சிவநாம மகிமை | .... | 0-60 |
| 2. | ஸ்கந்த லஹரீ | .... | 1-00 |
| 3. | கிராதார்ஜுனீயம் (வேடனும் விசயனும்) | .... | 1-00 |
| 4. | ஸ்ரீ நடராஜ தத்துவம் | .... | 0-50 |
| 5. | சிவாலய வழிபாட்டு விளக்கம் | .... | 0-40 |
| 6. | காரியசித்தி தரும் கணபதி ஸ்தோத்ரம் | | 0-15 |
| 7. | ஸ்தோத்ர கமலாகரம்—1 ம் பாகம் | .... | 1-50 |
| 8. | ஷை —4 ம் பாகம் | .... | 2-50 |
| 9. | ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் திவ்யசரித ஸங்க்ரஹம் | | 4-00 |
| 10. | சிவஞானபூஜா மலர்—1981 | .... | 5-50 |
| 11. | ஷை 1982 | .... | 6-50 |
| 12. | ஷை 1983—84 | .... | 10-00 |
| 13. | சிவஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் | .... | 8-50 |
| 14. | புள்ளிருக்கு வேளூர் | .... | 1-25 |
| 15. | ஸ்ரீ சிதம்பரம் நடேச ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் | .... | 11-00 |
| 16. | தில்லைத் திருநடனம் | ... | 3-50 |
| 17. | மூவர் தமிழ் மாலை 1—18 | .... | 40-00 |

மேற்படி நூல்களை ஒரே சமயத்தில் வாங்கினால் தபால் செலவு இலவசம். விவரங்கட்கு எழுதுக. சலுகையும் பெறலாம்.

பதிப்பாசிரியர் :

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு

மேல மாம்பலம், சென்னை-600 033.

உ

சிவமயம்

# ஆங்கீரஸ சர்மாவின் ஆறு வேண்டுகோள்

முழு முதற் கடவுளான பரமேச்வரனின் செந்நெறியிற் சார்ந்த நாமனைவரும் செய்ய வேண்டியவைகளாவன.



1. விபூதி ருத்திராட்சம் தவருது அணிதல் வேண்டும்

2. சிவாலய தர்சனம், சிவ நாமம் 'திருவைந்தெழுத்து ஜபம் முதலியவைகளை முறையே செய்ய வேண்டும்

3. திருமுறைகளை ஏதேனும் ஒரு முறையில் தினசரி பாராயணம் செய்யும் வழக்கத்தை மேற்கொள்ள வேண்டும்.

4. சற்பனைக் கதைகள் நவீனங்கள் வார மாதப் பத்திரிகைகள் இவைகளைப் படிப்பதை படிப்படியாகக் குறைத்து சைவ ஞான நூல்கள் சிவபுராணங்கள் ஆகியவற்றைப் படிக்க நேரம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

5. பெரிய புராணம், ஸ்காந்த புராணம், திருவிளையாடற் புராணம் ஆகிய புராணப் பிரசங்கங்கள் எங்கு நடந்தாலும் அவைகளை ஆர்வத்துடனும் பக்தியுடனும் சிரவணம் செய்ய வேண்டும்.

6. பல அன்பர்கள் ஒன்று சேர்ந்து கூட்டு வழிபாடுகள் சமயச் சொற்பொழிவுகள், மகாநாடுகள், புராணப் பிரசங்கங்கள் ஆகியவற்றை நடத்த வேண்டும்.

இம்மாதிரியான காரியங்களில் ஈடுபடுவதைச் சிறந்த சிவ புண்ணியமாக அன்பர்கள் எண்ணி ஆர்வத்துடன் செயல்படுமாறு வேண்டுகின்றேன்.

சிவம்



சிவபுராண ஞான பூஜகர், சாஸ்த்ரப்ரசாரபூஷணம்,
சிவபுராணச்சக்ரவர்த்தி, சிவபுராணக்காவலர்,

## ஆங்கிரஸ S. வேங்கடேச சர்மா

(சங்கரனடிமை)

---

பதிப்பாசிரியர், நூலாசிரியர், உரையாசிரியர்
சைவ பௌராணிகர், சைவசமய இலக்கியச்
சொற்பொழிவாளர்

---

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# சிவ ஞான பூஜா மலர்

குரோதன ஆண்டு (1985)

என்னை நன்கு படைத்தனன் இறைவன்
தன்னை ஞான பூசைசெய் திடவே.

பதிப்பாசிரியர் :

சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ரப்ரசார பூஷணம்,
சிவபுராணச் சக்கரவர்த்தி, சிவபுராணக் காவலர்,

ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
(சங்கரனடிமை)



பிரசுரம் :

ஆங்கிரஸ S. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-600 033.

[விலை ரூ. 12-00

 27-12-1985

# சிவஞான பூஜா மலர்

(குரோதன—1985)

27-12-1985 வெள்ளிக்கிழமை திருவாதிரைத் திருநாள் இரவு 7 மணிக்கு இராயபுரம் அருள்மிகு அங்காள பரமேச்வரி அம்மன் ஆலயத்தில் சென்னை இராயபுரம் இந்து சமய மன்றத்தினரால் வெளியிடப்பட்டது.

துணைத்தலைவர் திரு K. ராமச்சந்திர நாயக்கர் தலைமையில் அம்பாளின் மகன் தவத்திரு P. வெங்கடாசலபதி B.A.,B L. நூலை வெளியிட, மன்றத்தலைவர் சிவத்திரு V. S. வாசீச்வர சிவாசாரியார் அவர்கள் முதற் பிரதியினைப் பெற்றுக் கொண்டார்கள்.

பண்டிட் V. நடேசனார், ஆஸ்திகமணி A. சுப்பிரமணிய ஐயர், M.A , B.L. பாராட்டுரை வழங்கினர்.

மன்ற ஆலோசகர் திரு ME. C. ஜயராஜ் வரவேற்புரையும், செயலாளர் V. அரங்கநாதன் நன்றியுரையும் கூறினார்கள்.

சிவம்

உ

## விநாயகர் துதி



திருச்சிற்றம்பலம்

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே.

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்தர்

உ

## சைவ சமயாசாரியர்

## நால்வர் துதி






திருஞான சம்பந்தர் திருநாவுக் கரசர் சுந்தர மூர்த்திகள் மாணிக்க வாசகர்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் நம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே.

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்



ஓம் ஸ்ரீ கல்யாணசுந்தர மூர்த்தயே நம:

## ஸமர்ப்பணம்

பார்வதீ—பரமேச்வரர் திருமண வைபவம் தரிசிக்க எல்லா உலக வாஸிகளும் இமயமலையில் திரண்டு கூட, வடபால், பாரம் தாங்காது தாழ, அனைவருமஞ்சி 'சிவனே, சிவனே' என்று அரற்ற, அவரது துன்பங்கண்டிரங்கிய இறைவர் உலகைச் சமனுக்க அகஸ்தியரைத் தென் திசைக்கு அனுப்பியருளினர். திருமணக் காட்சி தரிசிக்க இயலாது போயிற்றே என்று வருந்திய அகஸ்தியருக்குத் தென்னுட்டில் திருமணக் கோலம் காட்டியருள்வதாக இறைவர் திருவாய் மலர்ந்தருள, அகஸ்தியரும் மகிழ்ச்சியுடன் தென்னுடு போந்தார். அங்ஙனம் அகஸ்தியருக்குத் திருமணக் கோலம் காட்டி அருளிய ஐதிகம் இவ்வாண்டு மலர் அட்டைப் படமாக காட்சி அளிக்கிறது.

போக மூர்த்தியாகி அனைத்து உயிர்களுக்கும் போக மளிக்கும் ஸ்ரீகல்யாண சுந்தரமூர்த்தியின் திருவடிகளில் இந்த புத்தக மலரைப் பக்தியுடன் ஸமர்ப்பணம் செய்கின்றோம்.

—பதிப்பாசிரியர்.

சிவம்

# பொருளடக்கம்

## ஒருசொற் கேளீர்!

சிவஞான பூஜாமலர் உங்களைத்தேடி வருகின்றது. இதன் மூலம் கிடைக்கும் தொகை மூவர் தமிழ்மாலைக்கும், ஆசிரியரது சிவபுராண ஞானபூஜைக்கும் பயன்படுத்தப்படும். எனவே இந்த மலரைப்பெறும் பெரியோர்கள் இதற்கெனத் தனியாக நன்கொடை ஏதும் இதுவரை அனுப்பவில்லை என்றால், இம் மலரின் விலையான ரூ. 12-00 மட்டும் உடனடியாக அனுப்பி ஆதரித்தருள வேண்டுகிறோம். விரும்பினால் விலைக்கு மேல் நன்கொடையாக ஏதேனும் தொகை சேர்த்து அனுப்பலாம். ரூ. 15/=ம் அதற்கு மேலும் அனுப்புபவர்கள் பெயர்களை மட்டும் தொகைகளுடன் அடுத்த ஆண்டுமலரில் பிரசுரிக்கப் படும்.

—பதிப்பாசிரியர்



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு, பரமாசாரியாள்
ஸ்ரீமத் சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள்
(68-வது பீடாதிபதிகள்)

சிவ : 85.A



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீமத் ஜயேந்திர ஸரஸ்வதி
ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள்



ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடம்

ஸ்ரீமத் ஜகத்குரு

சங்கரவிஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள்



புதுக்கோட்டை ஜட்ஜ் ஸ்வாமிகள்
அதிஷ்டானம், சேலம் ஸ்கந்தாச்ரமம்
ஸத்குரு ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமிகள்

உ

ஸ்ரீ சந்த்ர மௌளீச்வராய நம:

ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்ய பரம்பரை

## ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
## ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள்
## ஸ்ரீமடம் ஸமஸ்தானம்

காஞ்சிபுரம்-631502

# ஸ்ரீமுகம்

முகாம் : பைதான்

தேதி : 11-9-1985

ஆண்டுதோறும் சிவஞான பூஜா மலர் வெளியிடப்பட்டு அதில் பல நல்ல விஷயங்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. இந்த ஆண்டும் சிவசம்பந்தமான ஸ்தோத்திரங்கள் மற்றும் காவியங்களிலிருந்து சிவபரத்துவமான விஷயங்கள் இவற்றைத் திரட்டி வெளியிடுவது கேட்டு சந்தோஷிக்கின்ரேம். இந்த மலரிலிருந்து கிடைக்கும் பொருளை மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை என்று மூவர் பாடல்களை வெளியிடுவதற்கு உபயோகப்படும் என்பது கேட்டும் சந்தோஷிக்கிரேம்.

எல்லா ஆஸ்திக அன்பர்களும் இதுபோன்ற நல்ல பணிக்கு தாராளமாக உதவி செய்து இறைவன் திருவருளுக்குப் பாத்திரமாகும்படி ஆசீர்வதிக்கிரேம்.

நாராயணஸ்ம்ருதி

## நன்றி கூறுகிறோம்

1. மூவர் தமிழ் மாலை வளர்ச்சிக்காக மாதந்தோறும் திரு. A. T. A. ஈச்வரனார் அவர்கள் ரூ. 5-00 நன்கொடை வழங்குகிறார்.
2. சென்னை-1 திரு. கச்சபேசனடிமை என்னும் பெரியார் ஒவ்வொரு தமிழ் மாலை வெளியீட்டின் போதும் ரூ. 10-00 அளித்து வருகிறார்.
3. கலயம்புத்தூர் அன்பர் திரு. R. C. கதிர்வேலர், B.A., மூவர் தமிழ் மாலை-17 வெளியீட்டுக்கு ரூ. 1500-00 அளித்துள்ளார்.
4. சென்னை விருகம்பாக்கம் நேயர் திரு. P. K. வேங்கடராகவன், B.A., மூவர் தமிழ் மாலை–18க்கு ரூ. 250/– அளித்தார்.
5. சென்னை தவத்திரு அம்பாளின் மகன் அவர்கள் ஷை தமிழ் மாலை-18க்கு ரூ. 50-00 அளித்தார்.
6. மதுரை அன்பர் திரு. T. நாகரத்தினம் அவர்கள் மூவர் தமிழ் மாலை-19க்கு ரூ. 900-00 நன்கொடை வழங்கியுள்ளார்.
7. பெங்களூர் கொடையாளர் திரு. ம.வே. ஜயராமன், M.A., அவர்கள் மூவர் தமிழ் மாலை 20, 21, 22 ஆக மூன்று மாலைகள் வெளியீட்டுக்கான முழுத் தொகையையும் நன்கொடையாக வழங்கியுள்ளார்.

அனைவருக்கும் நமது மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சிவம்

குருபாதம்

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம்
26-வது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அருளிய வாழ்த்துரை



தருமபுரம்
மயிலாடுதுறை (அஞ்சல்) 609 001.
7—12—1985

''ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே''

எல்லாம் வல்ல பரம் பொருளாகிய சிவபெருமானின் புகழையே அனைத்து நூல்களும் விரித்துக் கூறுகின்றன. அவர் ஒருவரே ஆதியும் அந்தமும் இல்லாத அருட்பெருஞ்ஜோதியாக விளங்குபவர். 'இறைவன்' 'கடவுள்' போன்ற சொற்கள் முடிவாக அவரையே குறிக்கும். இக்கருத்தை மக்கள் அனைவரும் உணர்வது அவசியமாகும். பல்வேறு தெய்வ வழிபாடுகளையும் திருக்கோயில்களையும் குறித்துப் பாடியுள்ள இளங்கோவடிகள் தம் சிலப்பதிகாரத்தில் சிவபெருமானை ''பிறவா யாக்கைப் பெரியோன்'' எனும் தொடரில் குறிப்பது

இங்குச் சிந்திக்கத்தக்கது. அத்தகைய பரம்பொருளின் சிவ பரத்துவத்தைத் தமிழ் மொழியிலும், வடமொழியிலும் உள்ள நூல்கள் சிறப்பாக விரித்துக் கூறுகின்றன. அக்கருத்துக்களைத் தொகுத்துக் கட்டுரை வடிவில் வெளியிடுவது காலம் கருதிச் செய்யும் அரிய பணியாகும். அப்பணியினை நம் அன்பர் ஆங்கிரஸ எஸ். வெங்கடேச சர்மா செய்திருப்பது பாராட்டு தற்குரியது.

இந்நூலினை அன்பர்கள் அனைவரும் கற்றுத்தெரிந்து பயன் பெறுவார்களாக. நூலினை ஆக்கிய அன்பரும் நூலினைப் பயிலும் மக்களும் எல்லா நலன்களும் பெற்று நீடு வாழவும் நூல் எண்ணிய எண்ணியாங்கு பயன் தந்து சிறக்கவும் எல்லாம் வல்ல ஸ்ரீசெந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

உ

சிவ சிவ

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

## அருளிய வாழ்த்துரை



திருப்பனந்தாள்-612504
(தஞ்சை மாவட்டம்)
தேதி: 2-9-1985

ஞான நூல்தனை ஓதல், ஓதுவித்தல், நற்பொருளைத்தான் கேட்டல், பிறர் கேட்பித்தல் ஆகிய இவை இறைவனடி எய்துவிக்கும் எழில் ஞான பூஜை என்று அருள் நூல்கள் சாற்றும். இவ்வாக்கைத் தாரக மந்திரமாகக் கைக்கொண்டு ஞான பூஜை நடத்தி வருகின்ற நல்லன்பர் சென்னை, ஆங்கீரஸ வேங்கடேச சர்மா வழக்கம் போல் இவ்வாண்டும் 'சிவஞான பூஜா மலர்' வெளியிடவிருப்பதறிந்து மகிழ்கின்றோம்.

காலக் கழிப்பிற்கு உதவும் இக்கால நவீன இதழ்களிலிருந்த போதிலும் இம்மலருக்கு, தேர்ந்தெடுக்கப்பட்ட இலக்கியவுள்ளம் கொண்ட வாசகர்கள் இருக்கிறார்கள் என்பது உண்மை.

தமிழில் மட்டுமேயன்றி ஆங்கிலம், சமஸ்கிருதம் முதலான பிறமொழிகளில் உள்ள சிவபரத்துவம், சைவ சமயக் கருத்தொப்புமை ஆகியவை இம்மலரில், கொண்டெடுத்து மொழியப்படுவது மிகவும் சிறப்புடையதாகும்.

பயன் தரும் வடமொழிச் சுலோகம் மற்றும் தோத்திரப் பாக்களுக்கு இயைந்த தமிழ் மொழி பெயர்ப்பு இடம் பெறுவது மிகவும் அவசியமான ஒன்றாகும்.

"உதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து"—இது வள்ளுவம். அதே போல ஒரு செயலின் மேன்மையும் அதன் விளைவைப் பொருத்ததே. அவ்வகையில், தேவாரப் பாக்களுக்கு உரை நூல் அமைக்கும் முயற்சிக்கு இந்நூலின் விற்பனைத் தொகை உதவுமென்பதாலும் இந்நூற் பயன் முழுமையுறுகிறது; மேன்மையடைகிறது.

மலர் தெய்வீக, இலக்கிய மணங்கமழும் பொன்மலரெனப் பொலிவுற செந்திற்கந்தன் சேவடிகளை சிந்தித்து வாழ்த்து கிறோம்.

சிவ சிவ.

சுபம்.

உ
சிவ சிவ

கயிலை மாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்
அவர்கள், ஸ்ரீ காசிமடம் அதிபர்,
பெங்களூர் மஹான் ஒடுக்கத்தூர் சுவாமிகள்
திருமடத்தில் நடைபெற்ற ஆசிரியரது கந்தபுராணப்
பிரவசன பூர்த்திக்கு அருளிய வாழ்த்துரை



திருப்பனந்தாள்—612 504
(தஞ்சை மாவட்டம்)
தேதி 20-11-1985

நமது அன்பிற்குரியவரும், சிறந்த பக்தி இலக்கியப் பேச்சாளரும் ஆகிய ஆங்கீரச திரு சு. வெங்கடேச சர்மா அவர்கள். பெங்களூர் ஸ்ரீ ஜோதி மன்றத்தின் சார்பில் கந்தபுராண விரிவுரை நிகழ்த்தி வருவதறிந்து மகிழ்ச்சி.

அருள் நூல்களை ஓதுதலும், அதனை வல்லார் வாய்க் கேட்டுணர்ந்தின்புறலும் இறைவனடி எய்துவிக்கும் எழில் ஞானபூசையாகும்

உலகியல் சிந்தனையுள் ஊறியிருப்பார்க்கு, இத்தகு விரிவுரைகள் அவர்தம் பக்திப்புலம் தழைக்கவும், மனம் சென்ற

விடத்தால் செலவிடா தீதொரீஇ நன்றின்பால் உய்க்கப் பெற வும் நல்வழிகாட்டல்களாக அமையும் என்பது ஒருதலை.

திருமுறை முதலான தமிழ்த்திருநூல்களை ஓதி, உணர்ந்து பிறர்க்குரைத்தும் வருகின்ற அன்பர் சர்மா அவர்களின்வழி இப்பணி நிகழ்வது சாலச்சிறப்புடையது.

விரிவுரை நிகழ்ச்சி, இனிதே நிறைவு பெற்று எண்ணிய விழுமிய பயனை நல்கிடவும், செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந் தித்து வாழ்த்துகின்றோம்.

சுபம்.

சிவ சிவ

உ
சிவமயம்

ஸ்ரீஸத்குரு ஸதாசிவ ப்ரம்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் அதிஷ்டானம்.

கீழ 7ம் வீதி, புதுக்கோட்டை—622 001. (தமிழ்நாடு)

தேதி 19—12—85



பிரும்மஸ்ரீ ஆங்கிரஸ வேங்கடேச சர்மா அவர்களுக்கு ஸகல மங்களங்களும் மேலும் மேலும் பெருகி சதுர்வித புருஷார்த்தங்களும் ஸித்திக்க ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள் பரிபூர்ணமாக ஆசிகள் வழங்குவதை மிகவும் வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

தாங்கள் வெளியிடவிருக்கும் 'சிவஞான பூஜாமலர்' சிறப்பாக வெளிவரவும், தங்கள் பணிகளைப் பாராட்டியும் ஸ்ரீ ஸ்ரீஸ்வாமிகளின் ஆசியுரைகளைக் கவிதை மூலமாக அனுப்ப ஸ்ரீ ஸ்ரீஸ்வாமிகள் ஆக்ஞையிட்ட வண்ணம் அனுப்பியுள்ளோம்.

ஸ்ரீ ஸ்ரீஸ்வாமிகள் அவர்களின் ஸ்ரீமுகத்துடன் (கவிதை) ஸ்ரீமாதாபுவனேச்வரி தேவியின் குங்கும ப்ரஸாதமும், ஸ்ரீமத் ஸத்குருநாதரின் விபூதி ப்ரஸாதமும் அனுப்பியிருக்கிறோம்.

ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள்
அவர்கள் அருளாணைக்கிணங்க

புலவர் ப. சிகாகிரீசன்

சிவமயம்

# ஸ்ரீமத் ஸத்குரு ஸதாசிவப்பிரும்மேந்திர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் அதிஷ்டானம்

புதுக்கோட்டை

புதுக்கோட்டை அதிஷ்டானம், சேலம் ஸ்கந்தகிரி
ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள்
மனமுவந்து அளிக்கும் ஆசியுரை

சிந்தையில் சிவமே நிறையச் சீரிய செயலே புரிந்து
பந்தமே பரமன் அடியில் பாங்குடன் வைத்து வாழும்
வந்தனைக் குரிய வள்ளல் வான்புகழ் வேங்க டேசன்
விந்தையே புரிவார் நாளும் வீறுடன் பேச வல்லார்.

தவமிகு சாந்தா னந்தர் தண்ணருள் சாலவே பெற்று
சிவமிகு பூஜா மலரைச் சிறப்புடன் தொகுத்துத் தருவார்
நவமிகு முறையில் நாளும் நன்மலர் ஒக்கும் நூலை
பவமிகு கடலைக் கடக்கப் பாரினில் புணையாய்த் தருவார்.

அறம்பல தாங்கி நிற்கும் ஆன்றநன்னூல்கள் தொகுத்து
திறமுடன் வெளியே கொணரத் தீரமா யென்றும் உழைப்பார்
. றநெறி போகா தென்றும் புனிதன் சிவன்பால் வைத்த
உறமிகு நெஞ்சா லென்றும் உவப்புடன் பணிகள் புரிவார்.

சிவனார் பூசை தன்னில் சிந்தையைச் செலுத்தி வாழும்
அவமிலாக் குணத்து நல்லான் ஆங்கிரஸ கோத்திரத் துதித்தான்
பவக்கடல் கடக்கும் புணையாய்ப் பதமலர் பற்றி நிற்பான்
உவப்புடன் நூல்கள் தொகுத்தே உலகம் உவப்பத் தருவான்

ஆலமர் செல்வ னருளால் ஆரவே ஞான மெய்தி
கோலமார் குலத்து தித்தக் கோமகன் வேங்க டேசன்

நீலமார் மிடற்ரு ஞெக்கும் நீள்புகழ்ச் சாந்தா னந்தன்
சீலமார் கருணை பொங்கச் சிறப்புடன் என்றும் வாழ்க.

வந்தனைக் குரிய வள்ளல் வான்முகி லொப்பப் பொழியும்
கந்தனைக் கிரியல் அமர்த்திக் கவின்மிகு ஆலயம் தந்த
சிந்தனை உலகம் உய்யச் சந்ததம் செய்யும் தொண்டர்
உந்தனை வாழ்த்தி மகிழ்வார் உயர்புகழ்ச் சாந்தா னந்தர்.

குருவருள் மிகவே பெற்றுக் கூடிடும் பேறுகள் யாவும்
மருவிலா வகையில் எய்தி மன்பதை போற்ற நிற்பாய்
திருவளர் செல்வம் கல்வித் தீங்கிலா வகையில் எய்தி
உருவளர் புவனே யருளால் உத்தமன் எனவே வாழி.

ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள்
அவர்கள் அருளாணைக்கிணங்க

புலவர். ப. சிகாகிரீசன்



ஓம் தத் ஸத்

சென்னை-அம்பத்தூர் ஸ்ரீ புவநேச்வரி
பீடாதிபதி ஜகத்குரு ஓம் சாந்தி
ஸ்ரீஸ்ரீஸ்ரீ மௌனானந்ததீர்த்த மஹாஸ்வாமிகளின்

# அருள்வாக்கு

## ஸ்ரீ விச்வமங்கள விநாயகர்

ஏகதந்தாய வித்மஹே வக்ரதுண்டாய தீமஹி
தந்நோ தந்தி ப்ரசோதயாத்

இங்குள்ள (அம்பத்தூர் மௌன மடத்தில்) விநாயகருக்கு விச்வமங்கள விநாயகர் என்று பெயர். ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ர நாமத்திலும் விச்வம் விஷ்ணு என்று தான் ஆரம்பிக்கிறது. ஆகவே விச்வம் முழுக்க மங்கள விநாயகரிடம் பிரகாசிக்கிறது. விச்வத்திடமும் பரந்து அகண்டமாகப் பிரகாசித்துக் கொண்டும் அருள் பாலித்துக் கொண்டும் இருப்பதால் ஸ்ரீ விச்வ மங்கள விநாயகராகப் பிரகாசிக்கிறார்.

நமோ ஹிரண்யபாஹவே நம:

தினசரி ருத்ர மஹாமந்த்ரத்திலே வருகிறது. எல்லோருக்கும் தெரியும் சொல்கிறோம். தங்கக்கை உடையவருக்கு நமஸ்காரம் என்று அர்த்தம். இந்த மந்த்ரம் ஈச்வரனைக் குறிப்பதாலே ஈச்வரமயமான பெரியவாள், சாதுக்கள் ஹஸ்தமும் தங்கக் கைதான். அருளை வாரி வழங்கும் கை யாரிடம் பிரகாசிக்கிறதோ அவையாவும் ஈச்வர ஸமமான ஹஸ்தம் உடையவர்கள்.

ஸ்ரீ பாகவதத்திலே ஸ்ரீ கிருஷ்ணன் எலந்தப் பழக் கூடைக்காரிக்குத் தனக்கு வேண்டிய பழங்களை எடுத்துக் கொண்டு கை நிறைய தான்யத்தை அந்தக் கூடையில் போடவே எல்லாம் தங்கமாகிறது என்று கூறுவர்.

ஆதிசங்கர பகவத் பாதாளும் ஏழ்மையான ஒரு அம்மாள் இடமிருந்து நெல்லிக்கனியைப் பெற்றுக் கொண்டு கனகதாரா ஸ்தோத்ரம் பாடி அந்தம்மாளுடைய தரித்திர தசையைப் போக்கினுர். ஏதேது பெருமையுடன் அனுக்ரஹ ப்ரதமான அம்ருத ஹஸ்தமாக விளங்குகிறதோ அவையெல்லாம் ஈச்வர சம்பந்தம் பெற்ற கையேயாகும்.

சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ சந்த்ரசேகர பாரதி ஸ்வாமிகள் மதுரைக்கு விஜயம் செய்த போது அன்னக்கொடி கட்டுவது வழக்கம்போலக் கட்டி விடுவார்கள். வந்தவர்கள் அத்தனே பேருக்கும் போஜனம் உண்டு. ஒரு நாள் 5000 பேர்களுக்குத் தான் சமையல் ரெடியாக இருந்தது. 10,000 பேர்களுக்கும் மேற்பட்டவர்கள் வந்து விட்டார்கள். ஹெட்குக், பரிசாரகத் தலைவர் ஸாமி அய்யர், சந்நிதானத்துக்கு வந்து விழுந்து இதை எப்படியாவது ஸமாளிக்க அனுக்ரஹம் வேண்டி நின்ருர். அப்போது மஹா சந்நிதானம் "நான் வருகிறேன், போ" ஏன்று உத்தரவு வந்தது. அவ்வளவு தான், சமைத்து வைத்துள்ள பந்தல் கூடாரத்துக்கு வந்து, அன்னம், பால் பாயஸத்தைத் தம் அம்ருதஹஸ்தத்தாலே தடவி விட்டுப் பிக்ஷைக்குச் சென்ருர்கள். அக்ஷய பாத்திரம் போல் வளர்ந்து கொண்டே இருந்தது என்பதை ஸாமி அய்யர் புளகாங்கிதராகச் சொன்ஞர். வந்துள்ள பக்தர்கள் அனேவருக்கும் த்ருப்தியாக அன்னமிடப்பட்டது. எல்லோரும் அடைந்த ஆனந்தத்திற்கு அளவே கிடையாது.

நமோஹிரண்ய பாஹவே என்பதற்கு இதைவிட வேறு என்ன உதாரணம் கூறமுடியும்? நமோ ஹிரண்ய பாஹவே என்ற இந்த ஒரு மந்திரத்துக்கே அர்த்தம் எவ்வளவு வேண்டுமானுலும் சொல்லிக் கொண்டே இருக்கலாம். அதனுலே பெரியவா கையினுலே, அம்ருத ஹஸ்தத்தாலே தொட்டுக் கொடுத்தாலே போதும் சிரேயஸ் உண்டாகும் என்பது விளங்கும்.

ஓம் சாந்தி



திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமை ஆதீனம்

௨௬-வது குருமஹா சந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த

பரமாசாரிய சுவாமிகள்



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்
கயிலைமாமுனிவர் காசிவாசி
ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமித்தம்பிரான்
சுவாமிகள்



சென்னை அம்பத்தூர்

ஸ்ரீ புவனேச்வரி பீடாதிபதி ஜகத்குரு

ஸ்ரீமத் மௌனானந்ததீர்த்த மஹாஸ்வாமிகள்



நாட்டின் நன்மைக்காக எட்டுவகை
வேள்விகள் செய்த
ஸ்ரீ காயத்திரி அருள்சித்தர்
ஸ்ரீலஸ்ரீ காயத்ரி சுவாமிகள்

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# சிவஞான பூஜா மலர்

குரோதன ஆண்டு (1985)

ஞானநூல் தனையோதல் ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல்நன்கு
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல்ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில்ஞானபூசை.

## சிறப்பு

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கரா சாரிய சுவாமிகள், திருக்கைலாய பரம்பரைத் திருத்தருமையா தீனம் ஸ்ரீலஸ்ரீ குருமஹா சந்நிதானம், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகள், அம்பத்தூர் ஸ்ரீமத் ஜகத்குரு மௌனானந்த தீர்த்த மஹாசுவாமிகள், ஸ்ரீ காயத்ரி சுவாமிகள், புதுக்கோட்டை ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த சுவாமிகள் ஆகியோரது பரிபூரண அனுக்கிரஹம் பெற்றது.

## நோக்கங்கள்

1. "ஞாலம் நின்புகழே மிக வேண்டும் தென், ஆல வாயில் உறையும் எம் ஆதியே" என்ற ஆளுடையபிள்ளையா ரின் அருமைத் திருவாக்கின்படி சிவபெருமானின் பொருள் சேர் புகழை ஞாலமெங்கிலும் பரப்பும் ஒரு இயக்கமாக இம் மலர் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இது ஒரு பத்திரிகையோ அல்லது சாதாரண புத்தகமோ அல்ல.

2. தென் தமிழும், வடகலையும் தேசிகமும் பேசுவன மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக என்ற சேக்கிழார் பெருமானின் வாக்குப்படி தமிழ், வடமொழி நூல்களில் உள்ள சிவபெருமானது பெருமைகளையும் முழுமுதல் தன்மையினையும் தொகுத்து ஆண்டுதோறும் இந்த மலர் வெளியிடப்படுகிறது.

3. இந்த மலர் மூலம் மூவர் தமிழ் மாலைப் பதிப்புக்கும் சிவஞான பூசைக்கும் பொருள் உதவி தேடுவது.

## நன்கொடையாளர்கள்

1. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
   ஜகத்குரு ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகள். ரூ 100-00
2. ஸ்ரீலஸ்ரீ காயத்ரி சுவாமிகள், சென்னை-1. ... 501-00
3. கயிலை மாமுனிவர், காசிவாசி ஸ்ரீலஸ்ரீ முத்துக்
   குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள், காசிமடம்
   அதிபர், திருப்பனந்தாள். ... 100-00
4. ஸ்ரீமத் மௌனானந்ததீர்த்த சுவாமிகள்,
   அம்பத்தூர், சென்னை-53. .... 51-00
5. சிவஸ்ரீ V. S. வாசீச்வர சிவாசாரியார் அவர்கள்
   அங்காள பரமேச்வரியம்மன் ஆலயம்,
   சென்னை-13. ... 150-00
6. சிவாசார்ய குலபூஷணம், சிவாகம சாஸ்த்ர நிபுண,
   சிவஸ்ரீ T. S. சாம்பமூர்த்தி சிவாசாரியார்
   ஸ்ரீகாளிகாம்பாள் கோயில், சென்னை-1. ... 150-00
7. மாங்காடு தபஸ்காமாக்ஷி உபாசகர், தர்ம
   ரக்ஷாமணி, சிவஸ்ரீ V. D. ஏகாம்பரசிவா
   சாரியார் அவர்கள், மாங்காடு. ... 100-00
8. P. V. ஸ்ரீதரன், B.Com., F. C. A.,
   தியாகராயநகர், சென்னை-17. ... 100-00
9. ஆஸ்திகமணி A. சுப்ரமணிய ஐயர், M.A., B.L.,
   ஸுப்ரீம் கோர்ட் அட்வொகேட், சென்னை-1.... 150-00

10. S. ராமமூர்த்தி, B. Com., A. C. A.,
மேலமாம்பலம், சென்னை-33. ... 100-00
11. ME.C. ஜயராஜ், ஆலோசகர், இந்து சமய மன்றம், இராயபுரம், சென்னை-13. ... 100-00
12. K. R. விச்வநாதய்யர், நாதன்ஸ் லாட்ஜிங், சென்னை-17. ... 50-00
13. அறச்சுடர் கயப்பாக்கம் முத்துலிங்கரெட்டியார், சென்னை-31. ... 50-00
14. R. மாத்ருபூதம் ஐயர், B. A., B. L., அட்வொகேட், சென்னை-33. ... 50-00
15. Dr. ராணி L. ஹனுமந்தன், M.D., ராணி க்ளினிக், மதுரை-1. ... 50-00
16. C. கிருஷ்ணநாராயணன், பீளமேடு, கோயம்புத்தூர்-4. ... 50-00
17. T. S. வேதகிரி, B. E., F. I. E. ஸ்ரீநகர் காலனி, சென்னை-15. ... 100-00
18. K. V. மூர்த்திநாராயணச் செட்டியார், பாப்பாரப்பட்டி. ... 25-00
19. T. விச்வநாதன், HAL., பெங்களூர்-75. ... 25-00
20. சிவஸ்ரீ கணேச சிவாசாரியார், ஸ்ரீ கச்சபேச்வர ஸ்வாமி தேவஸ்தானம், சென்னை-1. ... 25-00
21. A. சாம்பசிவம் ஐயர், மேலமாம்பலம், சென்னை-33. ... 25-00
22. V. N. கணேசன், B. Com, மெர்கண்டைல் கிரெடிட் கார்ப்பொரேஷன், சென்னை-2. ... 25-00
23. ஆஸ்திகரக்ஷாமணி ஸ்ரீமான் V. சின்னஸ்வாமி ஐயர், தி. நகர், சென்னை-17. ... 50-00
24. V. மனோஹரன், B. Sc., உத்தமபாளையம். ... 20-00
25. சண்டமாருத பிரசங்கரத்னகரம் A. T. A. ஈச்வரனர், சென்னை-63. ... 20-00
26. K. ராமச்சந்திரன், நாராயண இன்ஜினியரிங் ஒர்க்ஸ், ராயபுரம், சென்னை-13. ... 50-00

27. P. S. கச்சீச்வரன், பெங்களூர்-1. .... 25-00
28. திருமதி பிரேமா சௌந்தர்ராஜ், கோவை. ... 16-50
29. T. K. நடராஜ சர்மா, பாட்டைபுலியூர். ... 25-00
30. S. விஸ்வநாதன் 6, சக்ரபாணி தெரு
எக்ஸ்டென்ஷன், சென்னை-33. ... 15-00
31. P. ராஜப்பன் பிள்ளை, ஏலங்குளம், கொச்சி-20 ... 15-00
32. T. R. அருணாசலம், ஸ்ரீ மீனாக்ஷிஜுவல்லரி,
தியாகராயநகர் சென்னை-17. ... 25-00
33. ஸ்ரீமத் அய்யா புவா ராமதாஸி, ஸஜ்ஜன்கட். ... 25-00
34. R. C. கதிர்வேல், B. A., கலயம்புத்தூர். ... 25-00
35. V. நீராத்திலிங்கம், பழையபாளையம்,
இராஜபாளையம். ... 22-50
36. சிவ. து. தயானந்தன், ஆற்காடு. (வ.ஆ.) ... 15-00

சிவம்

# சிவஞான பூஜா மலர், 1983-84

(மலர் வெளியீட்டுக்குப் பிறகு புத்தக விலை உள்பட ரூ. 15-00ம் அதற்கு மேலும் கொடுத்தவர்கள் பெயர் விவரம்)

ஸ்ரீமான்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீமத் சாது தங்கவேல் சுவாமிகள், பழநி | ரூ. | 25-00 |
| 2. | ஸ்ரீமத் சுவாமி ஹம்ஸானந்தா, பரோடா | ரூ. | 21-00 |
| 3. | T. M. வெங்கடசுப்பிரமணியன், தன்பாட் | ரூ. | 15-00 |
| 4. | V. H. சுப்பிரமணியன், பம்பாய் | ரூ. | 20-00 |
| 5. | V. E. கிருஷ்ணமூர்த்தி, சென்னை-1 | ரூ. | 15-00 |
| 6. | Y. சாம்பமூர்த்தி, B.A., சென்னை-28 | ரூ. | 20-00 |
| 7. | K. மதியன், B.A., சின்னபிக்கட்டி, அரவங்காடு | ரூ. | 15-00 |
| 8. | S. லிங்கேசுவரன், கும்பகோணம் | ரூ. | 15-00 |
| 9. | A. R. S. ரத்னம், பம்பாய் | ரூ. | 20-00 |
| 10. | ஸ்வாமி தேவீ தயானந்தா, உதகமண்டலம் | ரூ. | 15-00 |
| 11. | ஸ்ரீ லக்ஷ்மணன் ஐயர், பெங்களூர் | ரூ. | 20-00 |
| 12. | R. M. பழநியப்பன், காரைக்குடி | ரூ. | 15-00 |
| 13. | O. R. R. கிருஷ்ணன், சக்கர்நகர் | ரூ. | 15-00 |
| 14. | S. நடராஜய்யர், ஜவஹர்நகர், சென்னை-82 | ரூ. | 20-00 |
| 15. | R. C. கதிர்வேல் B.A., கலயம்புத்தூர் | ரூ. | 35-00 |
| 16. | Dr. ராணி L. ஹனுமந்தன், M.D., மதுரை | ரூ. | 40-00 |
| 17. | C. சந்திரபோஸ், அட்வொகேட், சென்னை-21 | ரூ. | 40-00 |
| 18. | P. தியாகராஜன், தாணா | ரூ. | 15-00 |
| 19. | S. R. பசுபதி, சங்கரன்கோவில் | ரூ. | 50-00 |
| 20. | M. T. ராஜாபஹதூர், பம்பாய் | ரூ. | 20-00 |
| 21. | P. K. சுப்பிரமணியன், B.A., கோயம்புத்தூர் | ரூ. | 15-00 |

22. C. நாகராஜராவ், அம்பத்தூர், சென்னை-53 ரூ. 15-00
23. S. P. லக்ஷ்மணன் செட்டியார், சென்னை-17 ரூ. 15-00
24. S. கருணாகரன், சென்னை-28 ரூ. 25-00
25. V. K. கணபதி (L I.C.) சென்னை-14 ரூ. 25-00
26. T.S. சாம்பமூர்த்தி சிவாசாரியார், சென்னை-1 ரூ. 101-00
27. A. சுப்ரமணியோம், கயத்தார் ரூ. 40-00
28. V. N. P. R. A. சந்திரமோகன், தூத்துக்குடி ரூ. 50-00
29. P. S. S. கிருஷ்ணமூர்த்தி நாடார் தூத்துக்குடி ரூ. 25-00
30. M. S. ராமையாபிள்ளை தூத்துக்குடி ரூ. 25-00
31. A. திருச்சிற்றம்பலம்பிள்ளை, தூத்துக்குடி ரூ. 25-00
32. P. செந்தில் ஆறுமுகம்பிள்ளை, தூத்துக்குடி ரூ. 25-00
33. A. P. C. V. சொக்கலிங்கம், தூத்துக்குடி ரூ. 25-00
34. S. P. R. முத்துப்பாண்டியன் தூத்துக்குடி ரூ. 20-00
35. ரத்ன சுப்பிரமணியஞ்செட்டியார், தூத்துக்குடி ரூ. 15-00
36. பரமேச்வரன் (SPIC), தூத்துக்குடி ரூ. 15-00
37. A. சண்முகவேலு, தூத்துக்குடி ரூ. 15-00
38. சரோஜா M. சுப்பிரமணியம், தூத்துக்குடி ரூ. 15-00
39. லாலா K. கருப்பசாமிபிள்ளை, தூத்துக்குடி ரூ. 15-00
40. G. லக்ஷ்மணன், தூத்துக்குடி ரூ. 15-00
41. R. சோமசுந்தரம், தூத்துக்குடி ரூ. 15-00
42. சின்னசாமி நாடார், தூத்துக்குடி ரூ. 15-00
43. A. சங்கரன்பிள்ளை, தூத்துக்குடி ரூ. 15-00
44. N. குருசாமி, தூத்துக்குடி ரூ. 15-00
45. S. மாரியப்பன், தூத்துக்குடி ரூ. 15-00
46. ஐயம்பெருமாள் (LIC), தூத்துக்குடி ரூ. 15-00
47. S. சொரிமுத்துப்பிள்ளை, தூத்துக்குடி ரூ. 15-00
48. K. S. அனந்தன், கொள்ளேகால் ரூ. 20-00

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

# மொழிக்கு மொழி தித்திக்கும்
# மூவர் தமிழ் மாலை

(பதிப்பாசிரியர்)

தேவரெல்லாந் தொழச்சிவந்த செந்தாள்முக்கட்
செங்கரும்பே மொழிக்கு மொழிதித்திப்பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்கும் திருச்செவிக்கே
மூடனேன் புலம்பியசொல் முற்றுமோதான்.

—தாயுமானவ சுவாமிகள்

மேலே கொடுத்துள்ள தாயுமானவ சுவாமிகளின் பாடலில் உள்ள ''மொழிக்கு மொழி தித்திப்பாக மூவர் சொலுந் தமிழ்'' என்ற சொற்றொடரை அடியொற்றி ''மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை'' வெளியீடு பற்றிய விவரங்களைச் சென்ற ஆண்டு மலர்களில் விரிவாகக் கொடுத்துள்ளேன். திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியோர் அருளிச்செய்த தேவாரத் திருப்பதிகங்கட்கு அவர்கள் யாத்திரை செய்த முறையினைப் பின்பற்றிப் பதிக அமைப்பு, பொழிப்புரை, விசேடவுரை, பதிக வரலாறு, தல வரலாறு, புராண வரலாறு ஆகியவற்றுடன் 108 தமிழ் மாலைகள் பதிப்பிக்க உறுதி கொண்டு இதுவரை 18 தமிழ் மாலைகள் வெளிவந்துள்ளன. முதலில் திருஞானசம்பந்தர் தேவார உரை வெளியிடப்பட்டு வருகிறது. ஆதரவுக் குறைவினால் தாமதப்பட்டு மாலைகள் வெளிவருகின்றன. சிவஞான பூஜா மலர் வெளியீட்டின் நோக்கங்களுள் இத்தமிழ் மாலைப் பதிப்புக்கு உதவுவதே

முக்கியமானதாகும். மேலும் மேலும் சந்தா சேர்ந்து சைவ மெய்யன்பர்கள் உதவி செய்தால் விரைவாகத் தமிழ் மாலைகள் வெளிவர உதவியாக இருக்கும்.

## மூவர் தமிழ் மாலை சந்தா விகிதங்கள்

முதல் ஆறு தமிழ் மாலைகள் :

| | |
|---|---|
| ஒவ்வொரு தமிழ் மாலையும் தனிப்பிரதி | ரூ. 2-00 |
| 1 முதல் 6 வரை தமிழ் மாலைகள் சேர்த்து | ரூ. 10-00 |

ஏழாவது தமிழ் மாலை முதல் 18வது தமிழ் மாலை வரை :

| | |
|---|---|
| ஒவ்வொரு தமிழ் மாலையும் தனிப்பிரதி | ரூ. 3-00 |
| 7 முதல் 18 வரை சேர்த்து சலுகை விலை | ரூ. 30-00 |

19வது தமிழ் மாலை முதல் :

| | |
|---|---|
| ஒவ்வொரு தமிழ் மாலையும் தனிப்பிரதி | ரூ. 4-00 |
| ஒவ்வொரு ஆறு மாலையும் சேர்த்து | ரூ. 20-00 |
| 108 தமிழ் மாலைகளுக்கும் முன் பணம் உதவிச் சலுகை விலை | ரூ. 225-00 |

முன்பண உதவிச் சலுகை விலை மொத்தமாகவும், தவணைகளில் ஓராண்டுக் காலத்திலும் செலுத்தலாம். முன்பணம் கிடைத்தவுடன் இதுவரை பிரசுரமான தமிழ் மாலைகள் உடனடியாக அனுப்பப்பட்டு, மற்றவை பிரசுரமானதும் உடனுக்குடன் அனுப்பி வைக்கப்படும்.

சென்ற மலர்களில் முன்பண உதவிச் சலுகை விலை அளித்தவர்கள் 101 பெயர்களைப் பிரசுரித்திருந்தோம். அதற்குப் பின் சேர்ந்த சந்தாதாரர்களின் பெயர்களைக் கீழே கொடுத்துள்ளோம்.

திருவாளர்கள் :

1. R. H. பிரமீளா, மதுரை-625 001.
2. T. அமிர்தம், ஆனந்தா ஸ்டோர்ஸ், மதுரை-1.
3. சிவ. து. தயானந்தன், ஆற்காடு. (வ. ஆ. மாவட்டம்,)

4. C. சந்திரபோஸ், B.Sc., B.L., அட்வொகேட், சென்னை-21.
5. N. கிருஷ்ணன், B.E., (Chem.) சென்னை-34.
6. S. K. சுப்பிரமணியன், B.A., L.L B,, அட்வொகேட், குகை, சேலம்-636 006.
7. குஹஸ்ரீ S. பால்சாமி நாடார், இந்து சபைப் பிரசாரகர் இராமநாதபுரம்.
8. ஸ்ரீமத் சாது தங்கவேல் சுவாமிகள், திருச்செந்தூர்.
9. S. வெங்கடாசலம் செட்டியார், மயில் மார்க் நிலயம், சென்னை-21.
10. தே. ச. குருநாதன், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.
11. C. A. ஆறுமுகம், போஸ்டல் காலனி 3வது தெரு, சென்னை-33.
12. S. மஹாதேவ ஐயர், ஆடிட்டர், பொள்ளாச்சி.
13. புலவர் சு. முத்தையா, M.A., B.Ed., 'சிவ-சிவ இல்லம் மதுரை-10.
14. ஸ்ரீமத் சிவப்பிரகாச சுவாமிகள், வேலப்பநாயக்கன் பாளையம். (கோவை மாவட்டம்.)
15. A. கிருஷ்ணஸ்வாமி, அறப்பணிச் செம்மல், ஸ்ரீ முருக விலாஸ் ஹோட்டல், இராமநாதபுரம், கோவை.
16. A. R. பொன்னம்பலம் பிள்ளை, அக்காரமங்கலம் P.O. சிதம்பரம் தாலுகா.
17. S. கருணாகரன், முதல் மெயின் ரோடு, இராஜா அண்ணாமலைபுரம், சென்னை-28.
18, P. V. ஸ்ரீதரன், B.Com., F.C.A., சார்ட்டர்ட் அக்கவுண்டண்ட், சென்னை-17.

மற்றும் சிலர் ஆறு புத்தகங்கட்குரிய தொகை செலுத்தியும் சிலர் அவ்வப்பொழுது தனிப்பிரதியாகவும் பெற்று ஆதரிக்கிறார்கள். ஆதரவு நல்கும் அனைவருக்கும் அடியேனது மனப்பூர்வமான நன்றிகள் உரித்தாகுக.

சிவம்

உ

ஸ்ரீ காயத்ரீ தேவ்யை நம:

## ஸ்ரீலஸ்ரீ காயத்ரி சுவாமிகள் நடத்திய 24வது சண்டி ஹோமம்

ஸர்வ மங்கள மாங்கல்யே சிவே ஸர்வார்த்தஸாதிகே!
சரண்யே த்ரியம்பகே கௌரி நாராயணி நமோஸ்துதே ||

இன்றைய இக்கட்டான நிலையிலிருந்து நாம் விடுபட்டு முன்னேற வேண்டும் என்ற விருப்பம் இல்லாதவர்கள் எவருமே நம்மிடையே இருக்க முடியாது. நம்மை இக்கட்டிலிருந்து விடுத்து ஒளி மிகுந்த பாதையில் செலுத்தக்கூடிய சக்தி ஜகன்மாதாவான சகல அண்ட சராசர புவனங்களையும் தனது இச்சையால் காரிய காரணமாய்க் காட்சியளிக்கிற பராபட்டாரிகா என்று அன்புடன் சொல்லப்படுபவளாகிய பராசக்தியாவாள். அவளைத்தான் ஸ்ரீ ஆதிசங்கரர் "சிவ:சக்த்யா யுக்த:" என்று தியானிக்கிறுர். இந்தப் பராசக்தியான ஸ்ரீ சண்டிகா தேவி த்ரிகுணாத்ம ஸ்வரூபமானவள். சண்டிகா தேவிக்கு யக்ஞம் செய்வதால் அன்னை மகிழ்ந்து நமக்குப் பூரண நலனைத் தருகிருள்.

வாழ்ந்து காட்டிய அருள் வள்ளல்களான ஸ்ரீ சுவாமி சிவானந்தர், ஸ்ரீராமக்ருஷ்ண பரமஹம்ஸர் போன்ற மகான்கள் வழியில் அருட்பாதை காட்டிவரும் சித்தர் ஸ்ரீலஸ்ரீ காயத்திரி சுவாமிகள் அவர்கள் உலகக்ஷேமத்தை முன்னிட்டு காயத்திரி அம்மனின் பூரண அருளுடன் இதுவரை கன்னியாகுமரி முதல் நேபாளம் வரை சென்று இருபத்துநான்கு சண்டிகா மஹாயக்ஞங்கள் நடத்தியுள்ளார்.

இந்த 24-வது சண்டிகா ஹோமம் 'அனுக்கிரஹா' 16A, I Main Road, Jaya Nagar, Sanatorium, Madras-47 என்ற விலாசத்தில் நடந்தது. தேவி மாஹாத்மியம் படித்து விஜய தசமி அன்று ஸ்ரீ சண்டி மஹாயக்ஞம் இனிது நடந்தது. சரஸ்வதி பூஜை அன்று 'சங்கீத பூஷணம்' என்று அன்புடன் அழைக்கப்படும் தேரழுந்தூர் ஸ்ரீசிவாசாரியார் அவர்களின் சங்கீத கச்சேரியும், விஜயதசமி அன்று ஸ்ரீசந்தோஷ் குமார் தம்பதியரின் வீணைக்கச்சேரியுடன் இனிது தொடங்கி கணபதி ஹோமம் முதல் காயத்ரீ ஹோமம் வரை செய்து கடைசியில் ஸ்ரீ சண்டி மஹாயக்ஞம் இனிது நடந்தேறியது. அத்துடன் ஸ்ரீ சுவாசினி பூஜை, கன்னிகா பூஜை, வடுக பூஜை, லக்ஷ்மி பூஜை, தீப பூஜை, கோ பூஜை, கஜ பூஜை முதலியன செய்து பூரண நலனைத்தரும் ஸ்ரீ சண்டி மஹாயக்ஞம் சிறப்புற நடந்தது.

உலகத்தையே ரக்ஷிக்கக் கூடிய சக்தி இது போன்ற யக்ஞங்களுக்குத்தான் உள்ளது. இக்கலியுகத்தில் இது போன்ற யக்ஞங்களைச் செய்து வரும் தவச்சித்தர் ஸ்ரீலஸ்ரீ காயத்ரீ ஸ்வாமிகளின் அறச்செயல் பக்த கோடிகளுக்கு கிடைத்தற்கரிய வாய்ப்பாகும். மேன்மேலும் அவர் செய்யும் யக்ஞங்களில் கலந்து கொண்டு ஸ்ரீ அம்பாளின் திருவருளையும் ஸ்ரீலஸ்ரீ காயத்திரி சுவாமிகளின் அருளாசிகளையும் பெற்று, மேன்மேலும் ஸ்ரீ ஸ்வாமிகள் இது போன்று யக்ஞங்கள் நடத்த அவற்றில் பங்கு கொண்டு உலக க்ஷேமத்தைப் பிரார்த்திப்போமாக.

சுபம்.

---

உ

சிவாப்யாம் நம:

# இறைவனின் இருபெருஞ்செயல்கள்

தர்மக்ஞ, சிரோமணி, வித்யாவாசஸ்பதி
பிரம்மஸ்ரீ மாயூரம் ராமநாத தீக்ஷிதர்

[பதிப்பாசிரியர் குறிப்பு: — சுமார் 400 ஆண்டுகளுக்கு முன் வடாற்காடு மாவட்டம் அடையப்பலம் என்ற கிராமத்தில் பிறந்தவர் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் அவர்கள். இவர் 104 நூல்களை இயற்றி 'சதுரதிக சதகிரந்த கர்த்தா' என அவரது காலத்திலேயே போற்றப்பட்டார். இவரது காலத்தில் வைஷ்ணவர்களது ஆதிக்கம் ஓங்கி, சைவப்பிரசாரம் நலிவுற்றது. எனவே, ஸ்ரீமத் தீக்ஷிதேந்திரர் ஆதாரபூர்வமான பல நூல்களை இயற்றி அவைகளின் மூலம் சிவபெருமானே பரம்பொருள் என நிலைநாட்டினர். அவைகளில் ஒன்று பிரம்ம தர்க்கஸ்தவம் என்ற நூலாகும். இந்த நூலிலிருந்து ஒரு ச்லோகத்துக்கு ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் வம்சத்தில் 12வது தலைமுறையில் தோன்றிய பிரம்மஸ்ரீ மாயூரம் ராமநாத தீக்ஷிதர் அவர்கள் விளக்கம் தருகிறார்கள். இந்த நூல் முழுவதையுமே தமிழ் உரையுடன் வெளியிடும் முயற்சியை மேற்கொண்டுள்ளோம் என்பதையும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

—ஆங்கிரஸ சர்மா]

கங்கா த்ருதா ந பவதா சிவ பாவநீதி
நாஸ்வாதிதோ மதுர இத்யபிகாலகூட: |
ஸம்ரக்ஷணாய ஜகதாம் கருணாதிரேகாத்
கர்மத்வயம் கலிதமேததனன்ய ஸாத்யம் ||

இது பிரம்மதர்க்க ஸ்தவத்தில் 35வது ச்லோகமாகும். இதன் பொருள்: ஓ சிவபிரானே! புனிதமானது என்று

கங்கை உம்மால் தரிக்கப்படவில்லை. இனிப்பானது என்று காலகூடம் என்னும் நஞ்சும் உம்மால் சுவை பார்க்கப்படவில்லை. கருணை மேம்பட்டமையால் உலகைக் காக்கும் பொருட்டு மற்ற எவராலும் செய்ய முடியாத இந்த இரண்டு செயல்களும் உம்மால் மேற்கொள்ளப்பட்டன.

பகீரதனது தவத்துக்கு இணங்கி பூவுலகம் வரும் பொழுது மற்றெந்தத் தேவராலும் தாங்க முடியாத அந்தப் பிரவாஹத்தைப் பரமேச்வரனே தாங்கினர். இதை ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் பலவிதப் பிரமாணங்களைக் கொண்டு விளக்கியுள்ளார்கள். மஹாபாரதம், பாகவதம் போன்ற நூல்களிலும் இந்த விஷயம் கூறப்படுகிறது. மஹாபாரதத்தில் பகீரதனிடம் கங்கை கூறுவதாக, "ஆகாயத்திலிருந்து விழும் எனது வேகத்தைத் தேவர்களில் மிகச்சிறந்தவரான மஹேச்வரரான நீலகண்டன் ஒருவரைத் தவிர்த்து மூவுலகிலும் வேறுயாராலும் முடியாது. (அவரே செய்ய முடியும் என்பதாம்)," என்று கூறப்பட்டுள்ளது.

வால்மீகி இராமாயணத்தில் பகீரதனிடம் பிரம்மா கூறுவதாக, "ஏ அரசே! கங்கை விழும் வேகத்தை பூமி பொறுக்க முடியாது. அதைத் தாங்குவதற்குச் சூலபாணியான பரமேச்வரனைத் தவிர யாராலும் முடியாது என்பதை அறிவேன்" என்று கூறப்பட்டுள்ளது.

வைஷ்ணவ புராணங்கள் நான்கினுள் ஒன்று என்று கருதப்படுகிற பாகவதத்தில் "எனது வேகத்தை யாராவது தாங்காவிட்டால் பூமியைப் பிளந்து கொண்டு பாதாளம் செல்வேன்" என்று கங்கை பகீரதனிடம் கூறப் பகீரதன் பதிலளிக்கிறன். "உனது வேகத்தைப் பிராணிகள் அனைத்திற்கும் ஆத்மாவாயும், ஆடைக்கு ஆதாரமான நூல்கள் போல உலகம் முழுவதையும் தாங்குபவராயும் உள்ள ருத்திரன் (பரமசிவன்) தாங்குவார்" என்று கூறுகிறன்.

இதே போல் திருப்பாற்கடலைக் கடையும்பொழுது முதலில் காலகூடம் என்ற விஷம் வெளிவந்தது. அதைக் கண்ட

வுடன் தேவர்கள் அசுரர்கள் அனைவரும் மூர்ச்சையடைந்தனர். வேறு எந்த தேவராலும் அதனையழிக்க முடியாமல் பரமசிவனே அதனை விழுங்கினர். அதனால் நீலகண்டன் என்ற பெயரும் ஏற்பட்டது. இச்செய்தியையும் பாகவதத்தில் காணலாம். இராமாயணத்திலும் தேவர்களெல்லாம் நடுக்கமடைந்து சிவபிரானை அடைக்கலம் புகுந்து, "எல்லாம் வல்ல பெருமானே! எம்மைக் காத்தருள்வீராக" என்று குறையிரந்தமையும், அங்ஙனமே மஹாவிஷ்ணுவும் சிவபிரானை நோக்கி, "தேவரீரே எல்லாத் தேவர்கட்கும் முன் உள்ளீர், நீரே எல்லாத் தேவருள்ளும் சிறந்த தலைவராயினீர், ஆதலால், பிரபுவே, எல்லோர்க்கும் வருவதில் முதற்பங்கு தேவரீரையே சாரற்பாலதாகலின் முதலில் வந்ததாகிய இந்த விஷத்தை ஏற்றருளும்" என வேண்டினதும், அவர்களது கலக்கத்தைக் கண்டு சிவபிரான் இரக்கங் கொண்டு அந்த விஷத்தையே அமிர்தமாகப் பருகி தேவர்களது துயரத்தைப் போக்கியருளினமையும் நன்ருக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

இங்ஙனம் கங்கையைத் தாங்கியதால் சிவபிரானுக்கு கங்காதரன் என்றும், விஷத்தை உண்டு அதனைக் கழுத்தில் நிறுத்த அது அங்கு நீலநிறத்துடன் தங்கியமையால் நீலகண்டன் என்றும் பெயர்கள் உண்டாயின. இவ்விரு செயல்களும் பிறரால் செய்ய இயலாதவை—அனன்யசாத்யம்— என்று ஸ்ரீமத் தீக்ஷிதேந்திரர் இந்த ச்லோகத்தில் கூறியுள்ளார் என்று அறிவோமாக. [சிவபுராணங்களிலிருந்து ஆதாரம் காட்டாது, வைஷ்ணவம் எனக்கருதப்படும் நூல்களின் மூலமாகவே இவ்விரு பெருஞ்செயல்களை விளக்கிய கட்டுரையாசிரியரின் திறம் போற்றற்குரியது. —பதிப்பாசிரியர்)





ஆசிரியர் ஆங்கிரஸசர்மா அவர்களின்
ஷஷ்ட்யப்தபூர்த்தி விழா 16—6—1985
ஞாயிறு சிறப்பாக நடந்தேறியது.

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

# ஸ்கந்தாச்ரம தரிசனம்

(ஆங்கிரஸ சர்மா)

இந்த வருஷம் ஜூன் மாதம் முதல் வாரம் 3ம் தேதி உமையுடனே ஒன்றியுறும் சிவனது சோமவாரம். அது ஒரு நல்ல நாள். அந்த நாளிலே கிடைத்தது ஒரு அரிய தரிசனம். ஆம், பொன்னிறத் திருமேனி, அதன் மேல் காவியுடை, சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை புரையும் திருமுகம், கருணை பொழியும் திருக்கண்கள், விசாலமான நெற்றி, நெற்றியில் திருநீறு, நடுவிலே மூன்ருவது திருக்கண்ணோ என்று ஐயுறும் வண்ணம் குங்குமப் பொட்டு, சிரத்திலே தூக்கிக்கட்டிய சடைமுடி — இது என்ன காட்சி? ஸாக்ஷாத் சிவபிரானே இங்கு வீற்றிருக்கின்றனனோ என்று பிரமிக்கத்தக்க திருக்கோலம் கொண்ட ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்களைத் தரிசித்தேன். சென்னை அசோக் நகர்ப்பகுதியில் உள்ள ஓய்வு பெற்ற இன்ஜினீயர் ஸ்ரீமான் K. S. கிருஷ்ணய்யர் என்பவரது திருமாளிகையில் தான் இந்த அபூர்வதரிசனம் எனக்குக் கிட்டியது. ஸ்ரீ சாந்தானந்தப் பேரொளியைக் கண்ட ஆனந்தம் ''கண்டேன் அவர் திருப்பாதம், கண்டறியாதன கண்டேன்'' என்ற அப்பரடிகளின் அருள் வாக்கின் அனுபவத்தை உண்டாக்கியது. ஒரு சில ஆண்டுகளாகவே ஸ்ரீ ஸத்குரு ஸ்வாமிகளைப் பற்றி அறிவேனுயினும், அவர்களது ஆசி ஸ்ரீமுகமும் உருவப் படமும் எனது 1978-வது ஆண்டு புத்தகமலர் வெளியீட்டில் பிரசுரித்திருந்தேனுயினும், அவர்களை நேரில்

தரிசித்து அருள் பெறும்நற்பேறு இன்று தான் இந்த நல்ல நாளிலே, நல்லவர் ஒருவர் இல்லத்திலேதான் கிடைத்தது. அந்த நல்லவர், ஸ்ரீமான் K. S. கிருஷ்ணய்யர் அவர்கள் ஸ்ரீமத் ஸத்குரு ஸ்வாமிகளவர்களிடம் அடியேனை அறிமுகப் படுத்தினார்கள். எனது சமயப் பணி, சைவப்பணி, செந்தமிழ்ப் பணி ஆகியவற்றை நிரந்து இனிது கூறினார்கள். எனது நல்லகாலம், நல்லவர் அறிமுகப்படுத்திய நன்னலம், ஸ்ரீமத் ஸத்குரு ஸ்வாமிகளவர்களின் பெருங்கருணைக்குப் பாத்திர னானேன்.

ஸ்வாமிகளவர்களிடம் "இறைவன் திருவருளால் அடி யேனுக்குக் குடும்பக் குறைகள், கவலைகள் ஏதுமில்லை. ஆயி னும் நான் எடுத்துள்ள "மூவர் தமிழ்மாலை" என்ற தெய்வத் தமிழ்ப்பணி என் ஆயுள் காலத்துக்குள்ளே நிறைவுற வேண்டுமே என்ற கவலைதான் என்னைப் பீடித்து வாட்டு கின்றது" என விண்ணப்பித்தேன். ஸ்ரீமத் ஸத்குரு அவர்கள் புன்னகை பூத்தார்கள். விபூதி குங்குமப்பிரசாதம் அளித்தார் கள். "கவலை வேண்டாம், எண்ணம் பூர்த்தியாகும்" என்று திருவாய் மலர்ந்தருளினார்கள். குருபக்தியின் சின்னமான அந்த ஸத்குருநாதரை, அன்னை புவநேச்வரியாகவே பக்தர் களால் போற்றப்படும் அந்தத் தவச்சீலரை, அடியேன் கண் களுக்குச் சிவபரம்பொருளாகவே காட்சியளித்த அந்த மஹ ரிஷியைத் தரிசித்து மன்நிறைவு பெற்றேன்.

இந்த ஆண்டிலேயே ஜூன் மாதம் 16ம் தேதி, (ஆனி மாதம் கிருத்திகை நாள்) அடியேனது அறுபது வயது பூர்த்திக் காக அதன் பத்திரிகையைத் தபாலில் அனுப்பினேன். ஸ்ரீ ஸ்வாமிகளின் முதல் தரிசனத்திலேயே அவர்களது பெருங் கருணைக்குப் பாத்திரனாகி விட்டேன் என்பதையும் தெரிந்து கொண்டேன், புதுக்கோட்டை அதிஷ்டானம் ஆஸ்தான வித்து வான் புலவர் ஸ்ரீ ப.சிகாகிரீசன் அவர்கள் மூலம் வாழ்த்துப்பா, திருவருட்பிரசாதம் ஸ்ரீ புவனேச்வரீ, கவசப் பட்டாடை முதலியவைகளை ஸ்வாமிகள் அனுப்பியருளியது "இத்தனை

யும் எம்பரமோ, எம்பெருமான் திருக்கருணை இருந்தவாறே'' என்ற ஆன்றோர் வாக்கினைச் சிந்திக்கச் செய்தது.

ஜூலை மாதக் கடைசியில் 27, 28 தேதிகளில் ஸ்கந்தாசிரமம் வருமாறு ஸ்வாமிகளின் அருளழைப்பு வந்தது. இங்கு நடைபெற்றுக்கொண்டிருந்த அடியேனது தொடர் சொற்பொழிவு நிகழ்ச்சி காரணமாக அடியேன் உடனே செல்ல இயலாதவனாயினேன். ஆயினும் அவர்களது கருணை விடவில்லை. மீண்டும் ஆகஸ்டு மாதம் 2ம் தேதி வரும்படி அருள் பிறந்தது. 1ம் தேதியே புறப்பட்டுச் சென்றேன். அன்று சேரன் எக்ஸ்பிரஸ் மூலம் மாலை 6மணிக்கு சேலம் சந்திப்பு சென்றடைந்தேன். இது வரையில் அடியவன் சேலம் சென்றது இல்லை. ஸ்கந்தாச்ரமம் செல்வது எப்படியென்றும் அறியேன். ஆனால் எனது சேலம் நண்பர் ஸ்ரீமான் V.R. ராகவன் அவர்கள் என் கடிதம் பார்த்து இரயில் நிலையத்துக்கு என்னை அழைத்துச் செல்ல வந்திருந்தார். ''ஸ்கந்தாசிரமத்துக்கு நேரே செல்லும் 'பஸ்' இனிக்கிடைக்காது. உடையாப்பட்டி என்னுமிடத்துக்குச் சென்றால் (சேலத்திலிருந்து சுமார் 8 கி. மீ. தூரத்தில் உள்ளது) அங்கிருந்து சுமார் 1½ கிலோ மீட்டர் நடந்தே சென்றுவிடலாம்'' என்றார். அப்படியே சேலம்-ஆத்தூர் செல்லும் பஸ்ஸில் ஏறி உடையாப்பட்டியில் இறங்கினோம். ஸ்ரீமான் ராகவன் பலமுறை ஆசிரமம் சென்று ஸ்வாமிகளைத் தரிசித்தவர். வழிநெடுக ஆசிரமம் பற்றிய செய்திகளையெல்லாம் கூறிக்கொண்டே வந்தார். நடந்து செல்லும் சிரமம் தெரியாது ஸ்வாமிகளின் திருவடிச் சிந்தனையுடன் வந்தோம். சிறிது தூரம் சென்றதும் ஆசிரமம் செல்லும் 'பஸ்'ஸும் பின்னால் வரக்கண்டோம். இதுவும் ஸ்வாமிகளின் அருளே எனக்கொண்டு, அதில் சென்று இரவு சுமார் 8-30 மணிக்கு ஆசிரமம் சென்றடைந்தோம். ஒரு சிறு தடை ஏற்பட்டது. ஆசிரம வாயிற்கதவு பூட்டப்பட்டிருந்தது. எவ்வளவோ விரைந்து வந்தும் உரிய காலங்கடந்துவிட்டது. ஆசிரமத்துள் எப்படிச் செல்வது? வேலியின் பக்கமாகச் சென்றோம். தூரத்தில் ஒரு பணியாளர் நின்றுகொண்டிருந்தார். அவரை

யழைத்து கதவைத் திறக்குமாறு கேட்டுக்கொண்டோம். கதவு திறக்கப்பட்டது. உள்ளே சென்ருேம். சில இடையூறுகளை யாவது அனுபவித்தால்தான் ஆனந்தம் ஏற்படும் என்பது போன்ற உணர்வை இந்த ஸ்காந்தாசிரமப் பயணம் உணர்த் தியது.

அந்த இரவு நேரத்தில் எங்களை முதலில் வரவேற்று ஸ்வாமிகளிடம் அழைத்துச் சென்றவர் ஆசிரமப் பூஜை கைங்கரியம் பிரம்மஸ்ரீ கணபதிராம சாஸ்திரிகளாவர். ஸ்ரீமத் ஸத்குரு ஸ்வாமிகளிடம் சென்று எட்டு உறுப்புகளும் நிலம் தோய (ஸாஷ்டாங்க நமஸ்காரங்கள்)விழுந்து வணங்கினேம். அன்று பார்த்த அதே கருணை விழிகள் "ஓ" வந்து விட்டீர் களா! நேரமாகி விட்டதால் ஒரு வேளை சேலத்திலேயே இரவு தங்கி காலையில் வரக்கூடுமென நினைத்தேன்" என்று அருளிச் செய்து கொண்டே வரவேற்ருர்கள். என் மெய்சிலிர்த்தது. இந்த எளியவன் வருகையை அந்தத் தவப்பெருமான் எதிர் பார்த்திருக்கிருர். நினைந்து இருக்கிருர். இதுவல்லவோ கருணை! இதுவல்லவோ ஸௌலப்யம்!! இப்படிப் பல சிந்தனை கள். அன்று காலை சுமார் 10 மணிக்குச் சாப்பிட்டது நல்ல பசி, ஸ்வாமிகளின் கருணையுள்ளம் இதனை உணராதிருக் குமா? அந்த நேரத்திலும் எனக்கும் உடன் வந்தவர்க்கும் உணவளிக்கப்பட்டது. உடன் வந்த அன்பர் ஸ்ரீமான் ராகவன் மறுநாள் காலையில் வருவதாகச் சொல்லி விடைபெற்றுக் கொண்டு சேலம் திரும்பினுர். நானும் எனக்காக விடப்பட்ட ஒரு விடுதியில் அன்று இரவு நன்ருக தூங்கினேன்.

மறுநாள் ஆகஸ்டு 2ம் தேதி, ஆடிப்பதினெட்டு. பதி னெட்டாம் பெருக்கு என்று விமரிசையாகக் கொண்டாடப் படும் நல்ல நாள். ஆசிரமத்திலும் இது மிகவும் விமரிசை யாகக் கொண்டாடப்படுவதாக அறிந்தேன். அதிகாலையி லேயே எழுந்து ஸ்நான, சந்தியா, ஜப அனுஷ்டானங்கள் யாவற்றையும் முடித்துக்கொண்டு ஸ்ரீமத் ஸத்குரு ஸ்வாமி களின் தரிசனத்தை எதிர்பார்த்து இருந்தேன். வந்தது

அழைப்பு. 9 மணிக்கு மேல் அகண்ட நாம பஜனை ஆரம்பிக்கப்படும். அதற்கு முன் சிறிது நேரம் அம்பாளைப்பற்றியும் முருகன் பெருமை பற்றியும் பேசலாம் என்பது ஸ்வாமிகளின் அருளாணை எனத்தெரிவிக்கப்பட்டது. அதற்கு முன் நல்ல சூடான 'காபி'யும் கிடைத்தது. அங்குப் பணிபுரிவோர்க்கும் வரும் விருந்தினர்க்கும் இரண்டு வேளை காபி, இரண்டு வேளை உணவு, காலைச் சிற்றுண்டி இவை அளிக்கப்படுவதாக அறிந்தேன்.

ஸ்ரீமத் ஸத்குரு ஸ்வாமிகளவர்களின் திருமுன்பு சிறிது நேரம் அம்பிகை பற்றியும் கந்தன் கதையமுதம் பற்றியும் பேசினேன். மாலையிலும் சிறிது பேசலாம் என்ருர்கள் பின்னர் நாமசங்கீர்த்தனம் ஆரம்பமாகியது. ஓம் சக்தி ஓம் சக்தி ஓம், ஓம் ஓம் முருகா ஓம் முருகா ஓம் ஓம் என்ற நாம கோஷம் வானையெட்டியது. பிரார்த்தனை மண்டபத்தை விட்டுச் சிறிது வெளியே வந்தேன். ஸ்வாமிகளவர்கள் தாம் வழக்கமாக அமர்ந்து தரிசனம் கொடுக்குமிடத்தில் ஒரு ஆசனத்தே அமர்ந்திருந்தார்கள். அவர்களது திருவடிப் பக்கத்திலே கீழே அடியேனும் உட்கார்ந்தேன். உட்கார்ந்து கொண்டே பார்க்கிறேன். ஆஆ! இது என்ன ஆச்சரியம்! இப்படித் திரண்டு வருவது வங்காள விரிகடலின் அலை வரிசைகளா? அல்லது இந்து'மஹா சமுத்திரமா? இப்படிப் பெருக்கெடுத்து வருகிறதே! இல்லை, இல்லை, இது கடல் அலைகளின் பெருக்கம் அல்ல. ஆடிப்பதினெட்டில் ஸ்ரீமத் ஸ்வாமிகளைத் தரிசித்து அருள் பெற வந்து கொண்டிருக்கும் மக்கள் கூட்டம் தான். இது ஜனமஹா சமுத்திரம் என்று அறிந்தேன். ஆசிரமம் மலை மீதுள்ளது. அடிவாரத்தில் உடையாப்பட்டி என்னும் ஊர், மற்றும் சுற்றுப்புறத்துக் கிராமங்கள். இவை அப்படியே திரண்டு வந்தது போல் மக்கள் வெள்ளம். ஆண்களும், பெண்களும் குழந்தைகளும், பிரார்த்தனை மண்டபத்தில் சிலாரூபமான கடவுளர்களைத் தரிசித்துப் பின் நடமாடும் கடவுளாகத் தாம் மதித்துப் போற்றும் ஸத்குரு ஸ்வாமிகளையும் வணங்கிச் செல்லுகிருர்கள். அனைவரும் கீழே

விழுந்து வணங்குகிறார்கள். ஸ்வாமிகளும் தம் கை அசைப்பால், கண்பார்வையால், மோகனப் புன்முறுவலால், வாய் மொழியால் தக்கபடி அருளை வாரி வாரி வழங்குகின்றார்கள். அன்று சுமார் எத்தனை பேர் வந்து தரிசித்திருக்கலாம்? ஐந் நூறு, இல்லை ஆயிரமா? இல்லவே இல்லை ஐயாயிரம் பேர் இருக்கலாம். அப்படியில்லை, இன்று வந்த கூட்டம் பத்தாயிரத்துக்கும் மேற்பட்டு இருக்கும் என்று இப்படி ஒருவர் மாற்றி ஒருவர் பேசும் அளவுக்குப் பெருங்கூட்டம். வந்த பிரமுகர்களிடம் ஸ்வாமிகள் சிறிதும் சோர்வின்றி, ஓய்வுமின்றி உரையாடுகின்றார்கள். வந்த மக்கள் பல திறப்பட்டவர்கள். கிராமத்து விவசாயிகள் முதல் பட்டணத்துப் பிரமுகர்கள் வரையில் வந்திருந்தார்கள். அனைவருக்கும் ஸ்கந்த குருநாதனின் ஸ்கந்தமாதாவின் பிரதிநிதியாக ஸ்வாமிகள் அருளை வழங்குகின்றார்கள். இத்தகைய ஜனத்திரளை அடியேன் இதற்கு முன் கண்டதில்லை. இவ்வளவு மாபெருங்கூட்டத்தில் ஒரு சிறு குழப்பமாவது இருந்திருக்குமா? அல்லது பட்டணத்துப் பேருந்துகளில் நடக்கும் 'பிக்-பாக்கெட்' இப்படி ஏதாவது? ஊஹூம் பேசக்கூடாது. இத்தனைக்கும் ஏதாவது போலீஸ் பாதுகாப்பிருந்ததா? ஒன்றுமே இல்லையே. இது என்ன விந்தை? தேவசேனாபதியான ஸ்கந்த குருநாதனின் சொந்தப் பாதுகாப்பா?

ஸ்வாமிகளவர்களின் திருவருளாணைப்படி அன்று ஆசிரமத்தில் பெருமளவுக்கு அன்னதானம் செய்யப்பட்டது. ஆசிரமத்துக்கு வெளியிலும் ஆஸ்திகப்பிரமுகர்களால் பெரும் அன்னதானங்கள் செய்யப்பட்டன, அன்று காலை மாலை இரு வேளைகளிலும் ஸ்வாமிகளின் திருவடிப் பக்கத்திலேயே உட்கார்ந்து கொண்டு அனைத்தையும் பார்த்து வியப்புக் கடலில் மூழ்கியவாறு இருந்தேன். மாலை சுமார் 6 மணியளவில் ஓம் சக்தி, ஓம் முருகா என்ற அகண்டநாம பஜனை முடிவுற்றது. பின்னர் ஸ்வாமிகளவர்கள் கூடியிருந்த அன்பர்கள் மத்தியில் நாம சங்கீர்த்தன மஹிமை பற்றிய அருமையான கருத்துக்களை வழங்கியருளினார்கள். ஸ்வாமிகளது சொற்பெருக்

கின் வன்மையை அன்று சிறிது நேரப் பேச்சிலேயே அறிந்து கொள்ள முடிந்தது. பின்னர் அருகிலே நின்று கொண்டிருந்த அடியவனையும் கூட்டத்தினருக்கு அறிமுகப்படுத்தி சிவ மஹிமை பற்றிச் சிறிது நேரம் பேசுமாறு பணித்தருளினார்கள். அடியேனைச் செம்மை நெறியாம் சிவநெறியிற் செலுத்தி அப் பெருமானுக்கே மீளா ஆளாக்கிய பெருமை "சிவானந்த லஹரீ" என்ற ஆதிசங்கரர் அருளிய நூலினையே சாருமாத லால் அந்நூலின் சில சுலோகங்களையும், ஒத்த கருத்துடைய சில தேவாரத் திருப்பாடல்களையும் கூறி சிறிது நேரம் பேசி னேன். அவ்வாறு பேசியது சுமார் 45 நிமிடங்கள் என நண்பர் இராகவன் பிறகு கூறினார். 'மொழிக்கு மொழி தித்திப்பாக மூவர் சொலும் தமிழ் கேட்கும் திருச்செவிக்கு மூட னேன் புலம்பல் முற்றுமோ தான்" எனத் தாயுமானவ சுவாமி கள் திருவாய் மலர்ந்தருளியபடி எத்தனையோ பேருரை களையெல்லாம் கேட்டிருக்கும் ஸ்வாமிகளுக்கு எனது சிற்றுரை யும் இனித்திருக்குமோ? இஃது யானறியேன்.

இனி ஸ்கந்தாசிரம வரலாறு பற்றி நான் அறிந்து கொண்ட சிலவற்றை இங்குக் கூற விரும்புகிறேன். ஆசிரமம் பூஜைக் கைங்கரியம் பார்க்கும் பிரம்மஸ்ரீ கணபதிராம சாஸ்திரிகளைப் பற்றி முன்னரே குறிப்பிட்டேனல்லவா? இவரே அடியேனுக்கு அங்கு ஆசிரமத்தில் பிரதிஷ்டை செய் வித்துள்ள எல்லா தெய்வ மூர்த்தங்களையும் விளக்கிக் கூறி யவர். மிக்க உற்சாகமும் சுறு சுறுப்புமுடைய இளைஞர். சொற்சாதுரியம் மிக்கவர். பிரஸானுப்பிராஸமாகப் பேசுவதில் வல்லவர். அங்கு வருபவர்களுக்கெல்லாம் இவரே மூர்த்தி களைத் தரிசனம் செய்து வைப்பதில் பெரும்பங்கு கொள்கின் றார். ஆசிரம வேத பாடசாலையிலேயே பிரமசாரியாய் வேதாத் தியயனஞ் செய்து கிரஹஸ்தராகி இங்கேயே பணிபுரிகின்றார். ஸ்ரீமத் ஸ்வாமிகளின் கருணைகடாக்ஷமே இவருக்கு இத்தகைய வாக்கு வன்மையை அளித்தது என்றால் மிகையாகாது. இவர் கூறியபடி ஆசிரம வரலாறுகளைத் தொகுத்துக் கீழே தருகி

றேன். இது வரையில் ஸ்கந்தாசிரமத்தைத் தரிசனம் செய்யாதவர்களுக்கும் இவ்வரலாறு பயன்படும் அல்லவா?

ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் தமது குருநாதராகிய சேந்தமங்கலம் சுவாமிகள் எனப் பிரசித்தி பெற்ற ஸ்ரீமத் ஸ்வயம்பிரகாச ப்ரம்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகளின் அருளாணையின்வண்ணம் புதுக்கோட்டை ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் என்ற ஜட்ஜ் ஸ்வாமிகளின் அதிஷ்டான கைங்கரியத்தை மேற்கொண்டு புதுக்கோட்டையில் தங்கியிருந்தார்கள். ஜட்ஜ் ஸ்வாமிகள் நமது ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளுக்குப் பரம குருவும், சேந்தமங்கலம் ஸ்வாமிகளுக்குக் குருவும் ஆவார்கள். தமது குருநாதர் கட்டளையிட்டபடி பரமகுருநாதரின் அதிஷ்டானத்தை மஹோந்நத நிலைக்குக் கொணரும் பணியில் ஈடுபட்டிருந்த நம் ஸ்வாமிகளுக்கு 1965-ம் ஆண்டு ஒரு அதிசயமான கனவு ஏற்பட்டது. ''உனது குருநாதர் ஜில்லாவில் (சேந்தமங்கலம் சேலம் ஜில்லாவைச் சேர்ந்தது) நாலைந்து மலைகளுக்கு நடுவில் ஒரு ஓடையின் கரையில் ஒரு குன்றில் இருக்கிறேன், வா'' என்று ஸ்கந்த குருநாதனின் குரல் ஒலித்தது. மலைகளுக்கு நடுவில், ஓடையின் கரையில், ஒரு குன்று, ஓஹோ! குன்றுதோருடும் குமரப்பெருமான் அச்சிறிய குன்றினையும் தனது இருப்பிடமாகக் கொண்டானோ? தனது அதிசயக் கனவினை அன்பர்கள் அறியக் கூறினார்கள். சேலம் ஜில்லாவில் அத்தகைய இடம் எங்கே உளது என்று தேடினார்கள், தேடவைத்தார்கள். அப்பொழுது சேலம் பகுதியில் ரெவின்யூ டிவிஷனல் ஆபீசராக இருந்த ஸ்ரீ ஜகந்நாதன் (தற்பொழுது ஓய்வு பெற்று விட்ட திரு. ஜகந்நாதன் அவர்களையும் நான் ஆசிரமத்தில் பார்த்தேன்) என்பவர் ஸ்வாமிகளிடம் மிகவும் பக்தி கொண்டவர். மிகவும் சிரத்தையுடன் தேடி தற்பொழுதைய உடையாப்பட்டி அருகே உள்ள மலைப் பிரதேசத்தைக் கண்டு பிடித்தார்கள். என்ன ஆச்சரியம்? ஸ்வாமிகள் கண்ட கனவு அப்படியே நனவாயிற்று. குன்றின் மீது அமர்ந்து ஸ்வாமிகள் தியானத்திலமர்ந்தார்கள். ஜோதி வடிவாகக்

காட்சியளித்தான் குமரன். அந்த ஆண்டு கார்த்திகை தீபம். அண்ணுமலை தீபம்போல அந்தக் குன்றின் உச்சியில் ஏற்றினுர்கள். தொடர்ந்து ஆண்டுதோறும் கார்த்திகைப் பௌர்ணமி நன்ளுளில் ஸ்கந்தஜோதியை பல்லாயிரக்கணக்கான மக்கள் தரிசனம் செய்கிருர்கள்.

அந்த மலைப்பிரதேசத்துக்கு ஸ்கந்தகிரி என்றும் அதன் நடுவில் ஸ்கந்தாச்ரமம் என்றும், ஆசிரமப் பணியாளர்கள் விடுதிகள் அமைக்கப்பட வேண்டிய இடம் ஸ்கந்தபுரி என்றும் பெயரிடப்பட்டது. இந்த இடம் கண்டுபிடிக்கப்பட்டது 1967 ஆண்டு செப்டம்பர் மாதத்தில் என்று கூறப்படுகிறது. ஒரே வாரத்தில் இந்த இடம் ஸ்வாமிகளுக்கு அரசினரால் உரிமை வழங்கப்பட்டது என்பதும் ஆச்சரியமாகவே இருக்கிறது. இதற்கு முன்பேயே 1966 இறுதியில் ஸ்கந்தாசிரமத்தில் தான் எப்படிக் கோலங்கொள்ள விரும்புகின்ருன் என்பதை ஸ்வாமிகளுக்குக் கனவில் உணர்த்துகின்ருன். ''நாளை ஒரு விக்ரஹம் ஒரு பக்தனுல் உன்னிடம் ஒப்படைக்கப்படும். அதன்படி குன்றின் மேல் என்னைப் பிரதிஷ்டை செய்திடுக'' என்ற குரல் ஒலித்தது. அதன்படி மறுநாள் புதுக்கோட்டை மாருதி கபே உரிமையாளர் ஒரு பஞ்சலோக ஞானதண்டாயுதபாணியின் விக்கிரஹத்தைச் சமர்ப்பித்தார். தனக்குக் கனவில் உத்தரவானதாகக் கூறினுர். அதிசயங்கள் கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகத்தில் மட்டும் அல்ல, இந்தக் கலியுகத்திலும் நடந்து கொண்டுதான் இருக்கின்றன.

ஸ்கந்தாச்ரமக் கட்டிடங்கள் கட்டத் திட்டமிடப்பட்டன. ஞானஸ்கந்த மூர்த்திக்கு அந்த பஞ்சலோக விக்ரஹத்தை மாதிரியாகக் கொண்டு பெரியதொரு சிலையினை அமைக்கத் திட்டமிட்டார்கள் ஸ்வாமிகள். அந்த சமயம் புதுக்கோட்டை வந்திருந்த சரவணு பிலிம்ஸ் உரிமையாளர் திரு. G. M. வேலுமணிஅவர்கள் ஞானஸ்கந்தனின் சிலா விக்ரஹத்தை அமைக்கும் பொறுப்பினைத் தாமே ஏற்றுக்கொண்டார். 1968ம் ஆண்டு ஸ்வாமிகள் ஸ்கந்த குருநாதனின் சிலையுட

னும், பஞ்சலோக விக்ரஹத்துடனும் ஸ்கந்தகிரிக்கு எழுந்தருளினார்கள். உடையாப்பட்டி மஹாஜனங்கள் நல்லவழி வகுத்துக்கொடுத்து ஒரு சிறு குடிலும் அமைத்துக் கொடுத்தார்கள். முருகனைப் பிரதிஷ்டை செய்து ஒரு கிருஷ்ண யஜுர்வேத பாடசாலையையும் ஒரு சாம வேத பாடசாலையையும் நிறுவப்பட்டது. இது 1969ம் ஆண்டில் நிகழ்ந்தது. பிறகு ஞான பண்டிதனாகிய முருகனின் எதிரில் 18 திருக்கரங்களுடன் கூடிய அஷ்டாதசபுஜ மஹாலக்ஷ்மி துர்க்கா தேவியின் திருவுருப் பிரதிஷ்டை செய்யத் திருவருள் ஆணை பிறந்தது. அதன் சின்னமாகச் சில அடையாளங்களும் தோன்றின. பக்த மஹாஜனங்களின் ஒத்துழைப்புடன் அம்பாளது பஞ்சலோக விக்ரஹமும் தயார் செய்யப்பட்டு 1971ம் ஆண்டு ஸ்கந்த குருநாதன், ஸ்கந்த மாதா (அஷ்டாதசபுஜ மஹாலக்ஷ்மி துர்க்கைக்கு இங்குச் சுவாமிகள் சூட்டிய பெயர்)ஆகிய இரு சந்நிதிகளுக்கும் கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற்றது. ஸ்கந்தகுருநாதன் 5½ அடி உயரமுள்ள சிலா விக்ரஹமாகவும், ஸ்கந்த மாதா 5½ அடி உயரமுள்ள பஞ்சலோக விக்ரஹமாகவும் அமைந்து தரிசிக்க வரும் பக்தர்களுக்கு அருளை வாரி வழங்கிக் கொண்டிருக்கின்றனர். இந்த இரண்டு சந்நிதிகளும் எதிர் எதிராக அமைந்துள்ள பிரார்த்தனை மண்டபம் மிக அழகாகவும் விசாலமாகவும் காண்போர் கண்ணையும் கருத்தையும் கவரும் பல தெய்வ மூர்த்தங்களின் சிலைகளுடன் விளங்குகிறது. மாதாவின் விக்ரஹம் அமைக்க ஈரோடு டாக்டர் நல்லுசாமி என்பவர் மிகவும் உதவி செய்ததாகக் கூறப்பட்டது. அம்பாள் விக்ரஹத்தின் மேல் உள்ள திருவாசியில் நவதுர்க்கைகள் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளனர். தேவீமாஹாத்மிய கவசத்தில் கூறப்பட்டபடி இந்த நவ துர்க்கைகளின் பெயர்கள் வருமாறு.

ப்ரதமம் சைலபுத்ரீச த்விதீயம் ப்ரஹ்மசாரிணீ |
த்ருதீயம் சந்த்ரகண்டேதி கூஷ்மாண்டேதி சதுர்த்தகம் ||
பஞ்சமம் ஸ்கந்தமாதேதி ஷஷ்டம் காத்யாயனீதிச |
ஸப்தமம் காலராத்ரீதி மஹாகௌரீதி சாஷ்டமம் ||

நவமம் ஸித்திதா ப்ரோக்தா நவதுர்கா: ப்ரகீர்த்திதா: |
உக்தான்யே தானி நாமானி ப்ரஹ்மணைவ மஹாத்மனு ||

பொருள்:- (முதலாவது சைலபுத்ரீ, இரண்டாவது பிரம்ம சாரிணி, மூன்ருவது சந்திரகண்டா, நான்காவது கூஷ் மாண்டா, ஐந்தாவது ஸ்கந்தமாதா, ஆருவது காத்தியாயனி, ஏழாவது காலராத்ரி, எட்டாவது மஹா கௌரீ, ஒன்பதாவது சித்திப்ரதா என்று இவ்வாறு துர்க்கையின் ஒன்பது வடிவங் கள் எடுத்துரைக்கப்பட்டன. இந்த நாமங்கள் பெருமை மிக்க வேதபுருஷனுலேயே கூறப்பட்டவை)

ஸ்கந்த குருநாதனின் சந்நிதிச் சுற்றுச் சுவர்களில் நவக் கிரஹங்கள் தங்கள் பத்தினிகளுடனும் வாகனங்களுடனும் அமைக்கப்பட்டுள்ளனர். ஸ்கந்த சந்நிதிக்கு வலப்புறம் தனிச் சந்நிதியில் வல்லபா கணபதியும், இடதுபுறத்தில் தனிச்சந்நிதி யில் ஸோமாஸ்கந்த மூர்த்தத்தையும் நினைவுபடுத்தும் வகை யில் ஸ்ரீநடராஜர், சிவகாமி அம்பாள், நடுவில் ஐயப்பன் ஆகிய உருவங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. ஸ்கந்தமாதா வின் சந்நிதியின் வலதுபுறம் தனிசந்நிதியில் ஸ்ரீமத் சாந்தா நந்த ஸ்வாமிகளின் பரமகுருவான ஜட்ஜ் ஸ்வாமிகளும், இடது புறம் தனிச் சந்நிதியில் குருநாதரான ஸ்ரீமத் ஸ்வயம்பிரகாச பிரம்மேந்திர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகளும் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளனர். மேலும் மண்டபத்தில் அருணகிரி நாதர், வேதவியாஸர், தத்தாத்ரேயர், ஆதிசங்கரர், அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் முதலிய அருளாளர்களின் தெய்வப் படிமங்களும் அமைக்கப்பட்டுள்ளன. மண்டபத்துச் சுவர்களில் எல்லாம் ஸ்ரீமத் ஸ்வாமிகளின் அருளுரைகள் பொறிக்கப்பட்டுள்ளன. இங்குள்ள எல்லாச் சந்நிதிகளுக்கும் வைதிகமான முறையில் தினசரி பூஜைகள் மிகவும் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. அம்பாள் சந்நிதியில் தினசரி தேவீ மாஹாத்மியம் பாராயணம் நடை பெறுகிறது. தினசரி அதி காலையில் கணபதிஹோமமும் ஸர்வலோக க்ஷேமத்துக்காக நடைபெறுகிறது. இங்கு ஒரு விசேடம் என்னவென்ருல் எந்த

பாராயணமும் ஹோமமும் ஒரு தனிப்பட்ட மனிதருக்காக சங்கல்பம் செய்து நடத்தாமல் 27 நட்சத்திரங்கள் அடங்கிய 12 ராசிகளில் ஜனித்த அனைத்து உலக மக்களின் க்ஷேமத்தைக் கோரி ஸங்கல்பம் செய்து கொண்டு நிகழ்த்தப் பெறுகின்றது. இவ்வரிய செயல் இந்த ஒரு இடத்தில்தான் நடைபெறுவதாக நினைக்கிறேன். இந்த எல்லா பூஜை, பாராயண, ஹோம கைங்கரியங்களையெல்லாம் ஸ்வாமிகளவர்களின் உத்தரவுப்படி, வேதபாடசாலை மாணவர்கள் உதவியுடன் பிரம்மஸ்ரீ கணபதிராம சாஸ்திரிகளால் யதோக்தமாக நடைபெற்று வருகின்றன. வேதபாடசாலை பிரம்மஸ்ரீ G. ராமலிங்க கனபாடிகள் அவர்களை அத்தியக்ஷகராகக் கொண்டு நல்ல முறையில் வித்தியார்த்திகளை உருவாக்கி வருகிறது என்பதையும் இங்குக் குறிப்பிட விரும்புகிறேன்.

பிரார்த்தனை மண்டபத்துக்கு வெளிப்புறத்தில் 16 அடி உயரமுள்ள பஞ்சமுக ஆஞ்சநேயர் சிலை 1964-ல் பிரதிஷ்டை செய்யப்பட்டது. ஒன்று ஆஞ்சநேயர் முகம், இரண்டாவது நரசிம்ம முகம், மூன்றுவது கருடர், நான்காவது வராஹ முகம், ஐந்தாவது ஹயக்கிரீவர் என்ற குதிரை முகம் என்று ஐந்து முகங்கள் கொண்டவர் இந்த பஞ்சமுக ஆஞ்சநேயர். இந்த ஐந்து முகங்களும் முறையே வீர்யம், பயம் போக்குதல், விஷப்பாதுகாப்பு, பூரக்ஷணம், வித்தை ஆகியவற்றை அளிக்கும் என்று கூறப்படுகிறது. இந்த பஞ்சமுக ஆஞ்சநேயருக்குத் தனியாக தியான ஸ்லோகம் இருப்பதாகக் கூறப்படுகிறது. பஞ்சமுக ஆஞ்சநேயரின் கீழே நாரதர், ராகவேந்திரர் ஆகியோர்களின் சிலைகளும் உள்ளன.

1975-ம் ஆண்டு இதே 16 அடி உயரத்தில் ஐந்து முகங்களும் பத்துத் திருக்கரங்களும் கொண்ட பஞ்சமுக விநாயகர் பிரதிஷ்டை நடைபெற்றது. விநாயகர் சிலைக்குக் கீழே அகஸ்தியர், லோபாமுத்திரை, சைவ சமயாசாரியர் நால்வர், மங்கையர்க்கரசியார் ஆகியோரது படிமங்களையும் காணலாம். 1976-ம் ஆண்டு மும்மூர்த்தி ஸ்வரூபமான தத்தாத்ரேயர்

சிலையும் அதன் கீழ் அத்திரி முனிவர் - அனுசூயா தேவி ஆகியோரது சிலைகளும் அமைக்கப்பட்டன. தினசரி பூஜை முடிவில் இந்த சிலைகளுக்கும், வெளிவாயிற்புறத்தில் இருக்கும் 14 அடி உயரமுள்ள இடும்பன், சங்கடஹர கணபதி ஆகிய மூர்த்திகளின் உருவங்களுக்கும் தீபாராதனை காட்டப்படுகிறது,

இந்தச் சிலைகளையும் மற்றச் சிலா விக்ரஹங்களையும் ஏன் இவ்வளவு பெரியனவாக நிர்மாணித்துள்ளார்? மிகச்சிறு அளவில் உருவங்கள் இருந்தால் மனம் எளிதில் பற்ருது. பெரிய அளவில் இருந்தால் உடனே கண்களைக் கவர்ந்து மனதையும் கவர்ந்து நன்கு மனத்தில் பதியும் என்பதே ஸ்வாமிகளின் திருவுள்ளக்கிடக்கை என்பதை அறிந்து கொண்டேன்.

ஸ்கந்த குருநாதன் – ஸ்கந்தமாதா சந்நிதிகள் அமைந்துள்ள முக்கிய ஆசிரமப் பகுதியான பிரார்த்தனை மண்டபத்துக்கு எதிர்ப்புறம் ஆசிரம காரியாலயம், வேதபாடசாலை, உணவுக் கூடம் முதலியன உள்ளன. காரியாலய முகப்புப் பகுதியில் ஸ்வாமிகள் அமர்ந்து பக்தர்களுக்கு தரிசனம் அளிக்கின்ருர்கள். அனைவரையும் விசாரித்து அருள்மழை பொழிகின்ருர்கள். அங்ஙனம் ஸ்வாமிகள் அமர்ந்து தரிசனம் கொடுக்குமிடத்தைத் தொடர்ந்து நீண்ட தாழ்வாரம் (Veranda) போன்ற பகுதியில் அருளாளர்களின் சிலைகள் வைக்கப்பட்டுள்ளதையும், பக்தர்கள் அவைகளைத் தொட்டு வணங்குவதையும் கண்டேன். பிரம்மஸ்ரீ கணபதிராம சாஸ்திரிகளிடம் இதைப்பற்றிக் கேட்ட போது, "மக்கள் தம் அன்ருட வாழ்வில் கண்டவர்களையெல்லாம் (அதாவது யார் யாரையோ விரும்பத்தகாதவர் உள்பட) பார்க்க வேண்டி உள்ளது. ஆனல் இங்கு வந்தால் அவர்கள் தெய்வத்தைக் கண்டவர்களையே பார்க்கவேண்டும் என்ற குறிப்புடன் ஸ்வாமிகள் இத்தெய்வப் படிமங்களை இங்குப் பிரதிஷ்டை செய்துள்ளார்கள்" என்பது அவர் கூறிய விளக்கம். இந்த முறையில் அமைக்கப்பட்ட உருவச்சிலைகளின் பெயர்களை வரிசையாக இங்கு கொடுத்துள்ளேன். 1) ஆதிசங்கரர் 2) இராமானுஜர்

3) மத்வர் 4) சிருங்கேரி சந்த்ரசேகர பாரதி ஸ்வாமிகள் 5) காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி சுவாமிகள் 6) வேதாந்ததேசிகர் 7) இராமகிருஷ்ணபரமஹம்ஸர் 8) ஸ்வாமி விவேகானந்தர் 9) ஆண்டாள் 10) மங்கையர்க்கரசியார் 11) இராமலிங்க ஸ்வாமிகள் 12) அருணகிரிநாதர் 13) வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகள் 14) சேஷாத்திரி ஸ்வாமிகள் 15) ஸ்ரீ வித்யா பிரவர்த்தகர் பாஸ்கரராயர் 16) பகவான் ரமண மஹரிஷிகள் 17) பட்டினத்தடிகள் 18) புரந்தரதாஸர் 19) சிருங்கேரி நரசிம்மபாரதி ஸ்வாமிகள். இன்னும் 60க்கு மேல் தெய்வ அருள்பெற்ற பெரியோர்களின் சிலைகள் வரவுள்ளன என்றும் கூறப்படுகிறது.

ஆசிரமத்தின் அடிவாரத்தில் கன்னிமார் ஓடை என்ற நீரோடையும் அதன் கரையில் கன்னிமார் தெய்வச்சிலையும் உள்ளன. இந்த தெய்வத்தை வழிபடும் கன்னிப் பெண்களுக்கு நல்ல கணவர்களும், திருமணம் ஆன பெண்களுக்கு மகிழ்ச்சியான இல்லறமும் அமைகின்றன என்று கூறப்படுகிறது.

இத்தகைய அருமை பெருமைகளும் தெய்வீகமும் நிறைந்த ஸ்கந்தாசிரமத்தையும், இதனை உருவாக்கிய தவப்பெரியார் ஸ்ரீமத் சாந்தானந்த ஸ்வாமிகளையும், இவர்களது குருநாதரான ஸ்ரீ சேந்தமங்கலம் ஸ்வாமிகளைப் பற்றியும் என்னால் முழுமையாக எழுத முடியுமா? அங்ஙனம் எழுதும் ஆற்றலும் எனக்கு உண்டோ? எனவே, கவியோகி மஹரிஷி சுத்தானந்த பாரதியார் அவர்கள் எழுதியுள்ளதையும் கீழே கொடுத்துள்ளேன்.

## சாந்தானந்த விஜயம்

"சாந்தா மஹாந்தா நிவஸந்து ஸந்த:
வஸந்தவத் லோகஹிதம் ப்ரசாந்த:"

என்பது சங்கரபகவான்வாக்கு. சாந்தர்களான மஹான்கள் இளவேனில் போல உலகநலம் புரிகின்றனர். இதற்கு எடுத்துக்காட்டாக இன்று நம்முன் பொலியும் தூய துறவி மஹான்

சாந்தானந்தர். காலைக்கதிர்முகம், கருணைக்கடலகம், மெல்லிய புன்னகை, ஒன்றிய திருவிழிப்பார்வை, இனிய அமுதமொழி, ஜடாமகுட கம்பீரம், படாடோபமில்லாத அமைதி, நோக்கம் எல்லாம் ஆக்கப்பணி, நெஞ்சமெல்லாம் கருணை நிறைவு, நினைத்ததெல்லாம் செயற்சிற்பம், அளவற்றற அன்பு, களவற்ற நேர்மை, அறிவெல்லாம் அருட்பணி, இவையே சாந்தானந்தர். அவர் வேத தர்மத்தின் ஜோதி வடிவம், அவரது சத்குரு ஸ்வயம்பிரகாசருடன் எனக்கு மிக நெருங்கிய பழக்கம் உண்டு. ஒரு நாள் அறப்பளீசர் மலைமேல் இரு வரும் தியானத்தில் ஆழ்ந்தோம். உச்சிக்கதிரவன் பச்சைப் பலா மரங்களோடு கதிர்களை விரித்துப் புன்னகைக்கிறான். ஒரு குரங்கு பெரிய பலாப்பழத்தைக் கடித்துக் கீழே தள்ளியது. நான் அதை உரித்துச் சுளையெடுத்து சுயம்பிரகாசருக்கு அளித்தேன். அதை அந்த அன்புருவம் என் வாயிலே திணித்து ''நீயும் சாப்பிடு, நான் கொட்டை சுட்டுண்பேன்'' என்றார். சருகு மூட்டி சுமார் 50 கொட்டைகளைச் சுட்டு இரு வரும் உண்டு நீர்பருகிப் பசியாறினோம். ''பார் சுத்தானந்தம்'' சுளை இனிக்கும் ஆனால் முளைக்காது. கொட்டையை ஊன்றி னாலே பலாமரம் வரும். கனிகள் பழுக்கும். அதுபோல எவ் வளவு இனிமையாகப் பேசினாலும் ஞானம் வராது. உள்ளே ''நான்'' என்ற கொட்டை உள்ளது. அதைத் தியானத்தில் ஊன்றினாலே, முளைத்துப் பலாமரமாகி, காயாகிக் கனியாகும்' என்றார்.

நமது சாந்தானந்தர் சக்திக் கொட்டை, கொட்டை போட்ட பேர்வழி. அது ஸதாசிவ-புவநேச்வரி அதிஷ்டானத் தில் ஊன்றியது. ஸ்கந்தகிரியில் கிளை விரிந்தது எத்தனையோ அற்புதங்களைச் செய்தது, செய்கிறது. அவருடன் ஸ்கந்தகிரி யிலே சாந்த நிஷ்டை செய்து என் ஆத்மா பரமானந்தம் அடைந்தது, ''இங்கேயே இருக்கலாமே. எல்லாம் உங்க ளுக்குத்தான்'' என்று சாந்தக் குயில் அகவும். அப்போது நான் புவனேசுவரியின் திருமுகத்தையும், முருகன் வீரக்கனலையும் காண்பேன். இரண்டுபெரிய சந்நிதானங்களும் சாந்தானந்தர்

தவசக்தியிலிருந்து சிற்பச் செல்வமாகக் கிளம்பின. நான் உலகம் முழுவதும் ஏழுதரம் சுற்றி எத்தனையோ அற்புதங்களைக் கண்டேன். அற்புதத்தில் அற்புதம் கந்தகிரிக்கோயில் அழகு. நாளுக்கொரு அழகு, அலங்காரம். உள்ளஞ் சிலிர்க்கும் கலை விளக்கம். சுற்றிலும் உலக முனிவரின் சிலைகள் உயிர்ப் பொலிவுடன் விளங்குகின்றன. கன்னிமார் ஓடை கந்தகிரிப் புகழைப்பாடி, அலை வீசி நடனமாடுகிறது. ரோமில் நான் கண்ட வாடிகன் காட்சி என் முன் நிற்கிறது. சாந்தானந்தரின் அற்புதச் சிற்ப விளக்கம் உலகுக்கே புதுமை. அவர் செய்து வரும் வேள்வி வழிபாடுகளெல்லாம் இன்று நமது ஸநாதன தருமத்துக்குப் பெரும் பாதுகாப்பு விளக்கமாகப் பொலிகின்றது. வேத தர்மச் சிற்பி என்றே ஏற்றுகிறேன். நூற்றுக்கு நூறு அவர் செய்யும் திருப்பணிகளைப் போற்றுகிறேன். இந்தியாவையே அவரிடம் தந்துவிட்டால் அற்புதச் சிற்பச் செல்வமாக்கி விடுவார்.

உள்ளங்குளிர வாருங்கள்
உண்மை யன்புச்செல்வர்காள்
அள்ளியள்ளித் தாருங்கள்
அத்தனையும் கோயிலாம்
உள்ளங்குளிரக் காணுவீர்
உலகசக்தி உருவமே
வள்ளல்சாந்த சித்தரின்
வண்ணம் உண்மைவாழ்கவே!

—சுத்தானந்த பாரதி

[புதுக்கோட்டை அதிஷ்டானம் 25ம் ஆண்டு ஹோம ஆராதனை சிறப்பு மலரிலிருந்து எடுத்துப் பிரசுரிக்கப்பட்டது]

இங்ஙனமாக ஸ்கந்தாச்ரமப் பெருமை ஓரளவு இங்குக் கூறப்பட்டது. இன்னும் சிறிது காலத்தில் இந்த ஆசிரமம் அகில இந்தியப் புகழ் பெறும் யாத்திரை ஸ்தலமாக, ஏன் அகில உலகப்புகழ் பெறும் யாத்திரை ஸ்தலமாக ஆகப் போவது உறுதி. குருநாதரின் திருவடித் தியானபலத்தினுல்

எதையும் சாதிக்க முடியும் என்பதைப் புதுக்கோட்டை அதிஷ்டானமும் ஸ்கந்தகிரியும் நிரூபித்துவிட்டன என்ருல் சற்றும் மிகையாகாது.

நான் ஸ்கந்தகிரி செல்லும் முன் இங்குச் சென்னையில் சில அன்பர்கள் ஸ்கந்தாச்ரமம் சென்ருல் ஊர் திரும்பவே மனம் வராது என்று கூறினுர்கள். அது முற்றிலும் உண்மையே என்பதை எனது அனுபவம் புலப்படுத்திவிட்டது. எனினும் ஊர் திரும்பித்தான் ஆகவேண்டுமல்லவா? 3-8-1985 சனிக்கிழமை இரவே ஸ்வாமிகளிடம் விடைபெற்றுப் பிரசாதமும் பெற்றுக்கொண்டேன். அன்று இரவு பூஜைகள் எல்லாம் முடிந்தவுடன் ஸ்கந்தமாதாவின் சந்நிதியில் அடியேனுக்குத் தம் திருக்கரங்களால் விபூதி குங்குமப்பிரசாதம் அளித்தருளினுர்கள். துர்க்காதேவிக்குச் சாத்தியிருந்த பெரியதொரு ரோஜாப்பூமாலையை அடியேனுக்கு அணிவிக்கச்செய்தார்கள். ஆசிரம வெளியீடுகள், படங்கள், சிறந்த சன்மானம் ஆகியவற்றை வழங்கியருளினுர்கள். வாழ்த்தியருளினுர்கள்.

மறுநாள் அதிகாலையிலேயே வருவதாகச் சொல்லிப்போன நண்பர் ராகவன் காலந்தாழ்த்து வந்தமையால் மீண்டும் ஸ்வாமிகளைத் தரிசித்து விடை பெற்றுக்கொண்டேன். சேந்தமங்கலம் குருநாதர், தத்தாத்ரேயர், தத்தகிரி முருகன் சந்நிதிகளையும் தரிசித்து ஊர் செல்லுமாறு பணித்தருளினுர்கள். அவ்வண்ணமே 4-8-85 ஞாயிறு மாலை நானும் நண்பரும் சேந்தமங்கலம் சென்று தரிசித்து சேலம் மீண்டோம். (இது பற்றிய கட்டுரை தனியாக எழுதப்படும்)

5-8-1985 திங்கட்கிழமை சேலம் சுவர்ணபுரி ஓய்வு பெற்ற தமிழாசிரியர் திரு. S. நாகராஜன் அவர்களது இல்லத்தில் தங்கிச் சிலநண்பர்களையும் சந்தித்துவிட்டு அன்று 9 மணி சுமாருக்கு சேலம் இரயில் சந்திப்பு வந்து சேர்ந்தேன். என்னை வழியனுப்ப திரு நாகராஜன் குமாரரும், நண்பர் இராகவனும் இரயில் நிலையத்துக்கு வந்தனர். இங்கு நண்பர் ராகவனைப் பற்றிச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். தமிழ்நாடு

அரசுப்பணி புரியும் இவர் தற்சமயம் மேட்டூர் தாலுகா கச்சேரியில் பணிபுரிகின்ருர். பிறப்பால் வைஷ்ணவர் எனினும் சமயக்காழ்ப்பு இல்லாதவர். திருநீறு தரிப்பதில் விருப்பம் மிக்கவர். எப்பொழுதும் திருநீறும் குங்குமமும் அவருடைய சட்டைப்பையில் இருக்கும். பெரும்பான்மை வைஷ்ணவர்களைப் போல சைவ சம்பந்தமான நூல்களை இகழாது, விரும்பி படித்து வருபவர். நம்முடைய மூவர் தமிழ்மாலையைப் பெரும் ஆர்வத்துடன் படித்து வருபவர். இவரே நான் சேலம் சந்திப்பில் 1-8-85 மாலை இறங்கியது முதல் 5-8-85 வரை உடனிருந்து எனக்கு இப்பயணத்தில் பெரும் உதவி செய்தவர். "அன்று உங்களை இரயிலிலிருந்து இறக்கினேன். மீண்டும் உங்களை இரயில் ஏற்றிவிட்டுச் செல்ல வந்துள்ளேன்" என்று கூறிய வண்ணம் என்னை சென்னைக்கு ரயிலேற்றி அனுப்பி வைத்தார். என்னே இவரது அன்பு! என்னே இவரது சமய சமரஸ மனப்பண்பு!!

நமது வாசக நேயர்கள் அனைவரும் இதுவரையில் செல்லாதிருந்தால் உடனே ஸ்கந்தாச்ரமம் செல்லுங்கள், ஸ்வாமி சாந்தானந்தர் அவர்களைத் தரிசனம் செய்யுங்கள், ஸ்கந்தகுருநாதன் ஸ்கந்தமாதாவின் பேரருளைப் பெறுங்கள் என ஆற்றுப் படுத்துகின்றேன். 'ஸ்கந்தாச்ரமம் உங்கள் சொந்த ஆச்ரமம்' என்று கூறுகிருர்கள் ஸ்வாமிகள். நமது சொந்த ஆச்ரமத்துக்குச் செல்ல ஏன் தயங்க வேண்டும்.

சிவம்.



உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்



தர்மப்ரவசன ரத்னம், உத்தம உபன்யாசக சக்ரவர்த்தி

பிரம்மஸ்ரீ மஞ்சக்குடி K. ராஜகோபால சாஸ்திரிகள்

இயற்றிய சிவஸ்துதிகள்

# १. ॥ नमश्शिवायभुजंगम् ॥

# 1. நமச்சிவாய புஜங்கம்

नमश्शब्दमात्रे सदातुष्टदेवं
नतानांमुनीनां हृदिस्थंगिरीशम् ।
नरेन्द्राधिपत्यं ददन्तंवहन्तं
नमश्शिवायेति पदाभिधंस्तुवे ॥ १ ॥

நமச்சப்தமாத்ரே ஸதாதுஷ்டதேவம்
நதாநாம்முனீனும் ஹ்ருதிஸ்தம்கிரீசம்,

நரேந்த்ராதிபத்யம் ததந்தம்வஹந்தம்
நமச்சிவாயேதி பதாபிதம்ஸ்துவே. 1

1. 'நம' என்றதும் ஸந்தோஷமடையும் தெய்வம். வணங்குகின்ற முனிவர்களின் உள்ளத்தில் இருந்து, ராஜ்யத்தைக் கொடுத்தும் வஹித்தும் வரும் கிரீசனுன சிவபெருமானை 'நமச்சிவாய' என்ற பதத்தினுல் அழைத்து ஸ்துதி செய்கின்றேன்.

महादेवमीशं महावाक्यगेहं
महात्मानमेकं महत्तत्वमूर्तिम् ।
महारुद्रयज्ञैः सदास्तूयमानं
नमश्शिवायेति पदाभिधंहुवे ॥ २ ॥

மஹாதேவமீசம் மஹாவாக்யகேஹம்
மஹாத்மானமேகம் மஹத்தத்வமூர்த்திம்,
மஹாருத்ரயஜ்ஞை: ஸதாஸ்தூயமானம்
நமச்சிவாயேதி பதாபிதம்ஹுவே. 2

2. மஹாதேவன், ஈசன், மஹாவாக்யத்தையே உறைவிடமாகக் கொண்ட மஹாத்மா, ஒரே கடவுள், மஹத் தத்வமுடைய மூர்த்தி, மஹாருத்திரங்களினுல் எப்பொழுதும் துதிக்கப்படுகிறவர் ஆகிய சிவபெருமானை 'நமச்சிவாய' என்ற பதத்தினுல் அன்போடு அழைக்கின்றேன்.

शिवंशान्तमूर्तिं शिष्टैकपूजितं
श्रितांघ्रिस्वभक्तान् सदैवाभिरक्षम् ।
श्रियंसंदधानं शिलारूपमाद्यं
नमश्शिवायेति पदाभिधंनमे ॥ ३ ॥

சிவம்சாந்தமூர்த்திம் சிஷ்டைகபூஜிதம்
ச்ரிதாங்க்ரிஸ்வபக்தான் ஸதைவாபிரக்ஷம்,
ச்ரியம்ஸந்ததானம் சிலாரூபமாத்யம்
நமச்சிவாயேதி பதாபிதம்நமே 3

3. சிவன், சாந்தமூர்த்தி, சிஷ்டர்களால் பூஜிக்கப்படுபவர், தனது பாதத்தையண்டினவர்களை எப்போதும் ரக்ஷிப்பவர், ஐச்வர்யத்தைக் கொடுப்பவர், சிலாரூபமாகத் தோன்றினும் ஆதிரூபமில்லாதவர். இத்தகைய சிவபெருமானை 'நமச்சிவாய' என்று சொல்லி வணங்குவேன்.

वाग्देवतास्तोत्र तृप्तंश्रुतेर्गिरां
पारेवसन्तंयोगि हृद्ध्येयमूर्तिम् ।
वकारादिबीजं अमृतस्वरूपं
नमश्शिवायेति पदाभिधंब्रुवे ।। ४ ।।

வாக்தேவதாஸ்தோத்ர த்ருப்தம்ச்ருதேர்கிராம்
பாரேவஸந்தம்யோகி ஹ்ருத்த்யேயமூர்த்திம்,
வகாராதிபீஜம் அம்ருதஸ்வரூபம்
நமச்சிவாயேதி பதாபிதம்ப்ருவே. 4

4. வாக்தேவதையான ஸரஸ்வதியின் ஸ்துதியினால் திருப்தி அடைந்தும், வேதத்தின் முடிவில் வஸித்தும், யோகிகளின் ஹ்ருதயத்தினால் தியானம் செய்யப்பட்டும், 'வ' என்ற அம்ருத பீஜமாக இருக்கும் சிவபெருமானை 'நமச்சிவாய' என்று கூறுவேன்.

यंदेवदेवं नमश्शब्दपूर्वं
शिवायेतिमन्त्रं तच्छिवाकारमेति ।
चिदानन्दनृत्यं सुधाधातृशक्ति
नमश्शिवायेति पदाभिधंभजे ।। ५ ।।

யம்தேவதேவம் நமச்சப்தபூர்வம்
சிவாயேதிமந்த்ரம் தத்சிவாகாரமேதி,
சிதானந்தந்ருத்யம் ஸுதாதாத்ருசக்திம்
நமச்சிவாயேதி பதாபிதம்பஜே. 5

5. எந்த தேவதேவனை 'நம': என்று ஆரம்பித்து 'சிவாய' என்று மந்திரம் சொன்னவுடன் சிவஸ்ருபமாக ஆகி ஆனந்த நர்த்தனஞ் செய்யும் அம்ருதசக்தியைக் கொடுக்குமோ அந்த 'நமச்சிவாய' மந்திரத்தை பஜிக்கிறேன்.

நமச்சிவாய புஜங்கம் உரையுடன் முற்றிற்று.

# २. ॥ श्रीपंचाक्षरभुजंगम् ॥

# 2. ஸ்ரீ பஞ்சாக்ஷர புஜங்கம்.

नमस्येगिरीश स्वयंज्योतिरात्मन्
कैलासवासिन् भवभीतिशान्त ।
त्वामेवयाचेद्य भक्तिंप्रदेहिमे
मांरक्षदेवेश शंभोदयानिधे ॥ १ ॥

நமஸ்யேகிரீச ஸ்வயம்ஜோதிராத்மன்
கைலாஸவாஸின் பவபீதிசாந்த,
த்வாமேவயாசே(அ)த்ய பக்திம்ப்ரதேஹிமே
மாம்ரக்ஷதேவேச சம்போதயாநிதே. 1

1. ஹே கிரீசா! நீங்கள் ஜ்யோதிஸ்வருபமாக இருந்து ஜீவ ரக்ஷணம் செய்ய கைலாசத்தில் வசித்து மக்களின் பயத்தை அடக்கும் சிவமே! உங்களை வேண்டுகிறேன் சம்போ! தயாநிதியே, தேவேச, எனக்குப் பக்தியைக் கொடுங்கள், என்னை ரக்ஷித்தருள வேணும்.

महादेवमूर्ते महेशानशंभो
महाभाग्यदायिन् महामेरुवासिन् ।
महावाक्यगुप्त महादेहरूप
महद्भिःस्तुतस्त्वं मांरक्षचाद्य ॥ २ ॥

மஹாதேவமூர்த்தே மஹேசானசம்போ
மஹாபாக்யதாயின் மஹாமேருவாஸின்,
மஹாவாக்யகுப்த மஹாதேஹரூப
மஹத்பி:ஸ்துதஸ்த்வம் மாம்ரக்ஷசாத்ய. 2

2. மஹாதேவனே, மஹேசான சம்போ, மஹா பாக்யத்தையளிப்பவனே, மஹாமேருவில் வஸிப்பவனே, மஹா வாக்யங்களில் மறைந்திருக்கும் ரூபமுடைய சம்போ! மஹான்கள் உங்களைத் துதிசெய்கிறார்கள், (அப்படிப்பட்ட நீர்) என்னை இப்பொழுதே ரக்ஷித்தருள்வீராக.

शिवंदेवदेवं मृडंसर्वशान्तं
भवंभावगम्यं प्रभुंदान्तमूर्तिम् ।
नमस्येसदाभक्ति पूर्वंगिरीशं
शिवादन्यदैवं नजानेनजाने ॥ ३ ॥

சிவம்தேவதேவம் ம்ருடம்ஸர்வசாந்தம்
பவம்பாவகம்யம் ப்ரபும்தாந்தமூர்த்திம்
நமஸ்யேஸதாபக்தி பூர்வம்கிரீசம்
சிவாதன்யதைவம் நஜானேநஜானே. 3

3. சிவன், தேவதேவன், ம்ருடன், ஸர்வசாந்தன், பவன் தியானத்தினால் அடையத்தகுந்தவர், அடக்கமானவர், கிரீசர் என்ற பெயர்களைச் சொல்லி எப்பொழுதும் பக்தி பூர்வமாக நமஸ்கரிப்பேன். சிவனைத் தவிர வேறு தெய்வம் தெரியாது, தெரியாது.

वरंवक्रतुण्डं सुतंजातमात्रे
स्वपुत्रंस्वयंप्रीति पूर्वंप्रगृह्णन् ।
अंकेनिधायास्य मूर्ध्निस्वजिघ्रन्
सोमागणेशेति भक्तैःस्तुतस्त्वम् ।। ४ ।।

வரம்வக்ரதுண்டம் ஸுதம்ஜாதமாத்ரே
ஸ்வபுத்ரம்ஸ்வயம்ப்ரீதி பூர்வம்ப்ரக்ருண்ணன்,
அங்கேநிதாயா(அ)ஸ்ய மூர்த்னிஸ்வஜிக்ரன்
ஸோமாகணேசேதி பக்தைஸ்ஸ்துதஸ்த்வம். 4

4. யானைமுகமுடைய புத்திரனைப் பெற்றவுடன் ப்ரீதியுடன் தன் மடியில் வைத்து உச்சி முகந்து ஸந்தோஷப்படும் பரமேச்வரனை 'ஸோமாகணேசன்' என்று பக்தர்கள் ஸ்துதி செய்வார்கள்.

यमिच्छन्स्वयंतेज पुंजाभिरामं
परंब्रह्ममूर्तिम् स्वभासालसंतम् ।
नमश्शिवायेति मनुंरूपवन्तं
सदाभावयेहृत्सरोजे गिरीशम् ।। ५ ।।

யமிச்சன் ஸ்வயம்தேஜ புஞ்ஜாபிராமம்
பரம்ப்ரம்மமூர்த்திம் ஸ்வபாஸாலஸந்தம்,
நமச்சிவாயேதி மனும்ரூபவந்தம்
ஸதாபாவயேஹ்ருத் ஸரோஜேகிரீசம். 5

5. ஸ்வயமாக (கோடிஸூர்யன் போல) ஜ்யோதிர் மண்டலமாக விளங்கும் பரப்ரும்மமாயும், தன் ஒளியினால் தானகப் பிரகாசிக்கும் சிவ மூர்த்தியும், 'நமச்சிவாய' என்னும் மந்திரத்தின் உருவமானவருமான கிரீசனை சிவபெருமானை எப்போதும் என் உள்ளத்தாமரையில் வைத்திருப்பேன்.

ஸ்ரீ பஞ்சாக்ஷர புஜங்கம் உரையுடன் முற்றிற்று.

சிவம்

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவ ஜயம்



# ॥ शिवस्तुतिः ॥

## சிவஸ்துதி

(மூலமும் உரையும்)

பிரம்மஸ்ரீ S. ராமஸ்வாமி சாஸ்திரிகள் M. A. L. T.,
கிருஷ்ணகிரி

भुजंगोपवीती कटौचर्मधारी
वहन्मूर्ध्निगङ्गां सुधाम्शुश्चभर्गः ।
गलेलोकभीदं विषञ्चापिहस्तैस्-
त्रिशूलाग्निढक्का मृगान्पातिसाधून् ॥ १ ॥

புஜங்கோபவீதீ கடெளசர்மதாரீ
வஹந்மூர்த்நிகங்காம் ஸுதாம்சுஞ்சபர்க:,
கலேலோகபீதம் விஷஞ்சாபிஹஸ்தைஸ்-
த்ரிசூலாக்நிடக்கா ம்ருகான்பாதிஸாதூந். 1

1. பாம்பைப் பூணூலாகவும், இடுப்பில் தோலுடையையும், தலையில் கங்கையுடன் சந்திரனையும், கழுத்தில் உலகத்தை நடுங்கவைக்கும் ஆலஹால விஷத்தையும், கைகளில் திரிசூலம், தழல், உடுக்கை, மான் இவற்றையும் அணிந்தவராகத் தேஜோமூர்த்தியான ஸர்வேச்வரன் ஸாதுக்களைக் காப்பாற்றுகிருர்.

अयंमेरुधन्वा हरीषुःक्षणेन
स्थितोभूरथेब्रह्म यन्तात्रिनेत्रः ।
चतुर्वेदवाहे विहस्यैवदेवस्-
त्रिपूर्भूतदैत्यान् चकाराग्निदग्धान् ।। २ ।।

அயம்மேருதன்வா ஹரீஷு:க்ஷணேந
ஸ்திதோபூரதேப்ரஹ்ம யந்தாத்ரிநேத்ர:,
சதுர்வேதவாஹே விஹஸ்யைவதேவஸ்
த்ரிபூர்பூததைத்யான் சகாராக்னிதக்தாந். 2

2. இவர் திரிபுரமான பலவான்களான அசுரர்களை, நான்கு வேதங்களைக் குதிரைகளாகவும், பிரம்மாவைத் தேரோட்டியாகவும் கொண்ட பூமியான ரதத்தில் அமர்ந்து முக்கண்ணராகி விளங்கி, மேருமலையை வில்லாகவும் விஷ்ணு தேவரை அம்பாகவும் வைத்துக் கொண்டு நொடிப் பொழுதில் அட்டஹாஸச் சிரிப்பாலேயே எரித்து விட்டார்.

प्रभीतामरान्वीर शूरासुरेन्द्रात्
रिरक्षुःतपस्वी स्मरारिःसुतार्थी ।

हिमाद्रेस्तनूजां विवाह्यस्मराक्षीं
ददौस्कन्दमेभ्यः सुतंसैन्यनाथम् ।। ३ ।।

ப்ரபீதாமரான்வீர ஶூராஸுரேந்த்ராத்
ரிரக்ஷு:தபஸ்வீ ஸ்மராரி:ஸுதார்த்தீ,
ஹிமாத்ரேஸ்தநூஜாம் விவாஹ்யஸ்மராக்ஷீம்
ததௌஸ்கந்தமேப்ய: ஸுதம்ஸைந்யநாதம். 3

3. வீரஞன சூரபத்மன் என்னும் அசுரனிடம் அதிக பீதி யடைந்த தேவர்களைக் காக்க விருப்பமுள்ளவராகத் தபஸ்வி யாஞலும் காமனை எரித்தவராஞலும் மகப்பேற்றையும் விரும்பி ஹிமாலய அரசன் மகளான காமாக்ஷியை மணந்து குமரக்கடவுளைத் தேவசேஞதிபதியாக அளித்தார் சிவ பெருமான்.

प्रदोषेऽतिकान्तं नटन्तंमहेशं
प्रमोदप्रदंसर्वं देवामुनीन्द्राः ।
विलोक्यातितुष्टाः पदेभक्तिनम्राः
सुमैरर्चयन्ति प्रभुंप्राप्तकामाः ।। ४ ।।

ப்ரதோஷே(அ)திகாந்தம் நடந்தம்மஹேசம்
ப்ரமோதப்ரதம்ஸர்வ தேவாமுனீந்த்ரா:
விலோக்யாதிதுஷ்டா: பதேபக்திநம்ரா:
ஸுமைரர்சயந்தி ப்ரபும்ப்ராப்தகாமா: 4

4. ப்ரதோஷம் என்னும் சாயம் சந்திவேளையில், (த்ர யோதசி திதியில்) வெகு அழகாக நடனம் செய்யும் மஹேச் வரராகிய நடராஜாவை, ஆனந்தத்தை வாரி வழங்குபவரை, எல்லாத் தேவர்களும் கண்டு களித்து அவரது பாதங்களில் பக்தியால் வணங்கி, பிரபுவான அவரைத் தம் விருப்பங்கள் யாவும் அடையப்பெற்றவர்களாகப் பூக்கொண்டு அர்ச்சிக் கின்றனர்.

वृषारूढदेवो भवानीसहायो
हिमाद्रौहिकैलास लोकेविभाति ।
अयंदर्पभेत्ताहि पौलस्त्ययत्नेतु
संगीतसामेन तुष्टःस्तवेन ।। ५ ।।

வ்ருஷாருடதேவோ பவாநீஸஹாயோ
ஹிமாத்ரௌஹிகைலாஸ லோகேவிபாதி,
அயம்தர்பபேத்தாஹி பௌலஸ்யயத்நேது
ஸங்கீதஸாமேந துஷ்ட:ஸ்தவேந. 5

5. பவாநியுடன் கூடியவராகக் காளைமாட்டின் மேல் அமர்ந்த இவர் ஹிமாலயத்தில் கைலாச லோகத்தில் விளங்குகிறார். இராவணனின் கெட்ட முயற்சியில் (கைலாசத்தைப் பெயர்த்தெறிய முயற்சித்ததில்) அவன் கர்வத்தைப் பிளந்தவர், ஆனாலும் அவன் செய்த சாமகானத்துதியால் மகிழ்ச்சியடைந்தார்.

महात्माकपर्दी कपालीश्मशाने
विरक्तोजितक्रोध भीशोककामः ।
पशूनांपतिर्भस्म रुद्राक्षधारी
महर्षिःशिवोनः स्थिरोभातुचित्ते ।। ६ ।।

மஹாத்மாகபர்தீ கபாலீச்மசாநே
விரக்தோஜிதக்ரோத பீசோககாம:,
பசூனும்பதிர்பஸ்ம ருத்ராக்ஷதாரீ
மஹர்ஷி:சிவோந: ஸ்திரோபாதுசித்தே. 6

6. மஹாத்மா, ஜடையுடையவர், சுடலையில் கபால மாலை தரித்தவர், வைராக்ய மூர்த்தி, எல்லாக் காமங்கள், பயம், கோபம், சோகம் முதலியயாவற்றையும் கடந்தவர்,

பசுக்களாகிய ஜீவர்களின் தலைவர், விபூதிருத்ராக்ஷ மணிந்த மஹரிஷி வடிவம் உள்ள சிவபிரான் நம் மனதில் நிலையாக விளங்கட்டும்.

विष्णोरपि यदैश्वर्यं श्रीपतित्वं प्रभाबलम् ।
विश्वरूपं यज्ञकृत्यं शिवंतत् शिवपूजया ।। ७ ।।

விஷ்ணோரபி யதைச்வர்யம் ஸ்ரீபதித்வம் ப்ரபாபலம்,
விச்வரூபம் யக்ஞக்ருத்யம் சிவம்தத் சிவபூஜயா. 7

7, விஷ்ணுவினுடைய ஐச்வர்யம், லக்ஷ்மியை மனைவியாக அடைதல், கீர்த்தி, பலம், விச்வரூபம், மங்களங் கொடுக்கும் யக்ஞகார்யம் யாவும் சிவபூஜையால் அடையப் பெற்றவை.

वेदेषु बहुधा रुद्रो नमो वाचार्चितोऽसकृत् ।
यज्ञेष्वपि न तस्मिन्स्यात् विमुखः श्रुतिमार्गगः ।।

வேதேஷு பஹுதா ருத்ரோ நமோ வாசார்ச்சிதோ (அ) ஸக்ருத்,
யக்ஞேஷ்வபி ந தஸ்மின்ஸ்யாத் விமுக:ச்ருதிமார்கக:.

8. வேதங்களில் ருத்திரர் பலவடிவமுள்ளவராக நமஸ்காரங்களால் போற்றப்படுகிறார். யக்ஞங்களிலும் அப்படியே ஆக, வேதமார்க்கத்தைக் கொண்டவர்கள் அவரை அலக்ஷியம் செய்யக் கூடாது.

சிவஸ்துதி உரையுடன் முற்றிற்று



உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# சிவ வழிபாடு

**Dr. N.** கங்காதரன் M.A., M.Litt., Ph.D.

(ஸம்ஸ்க்ருதத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம்)

வழிபாட்டில் பல முறைகள். எங்கும் பரவியுள்ள கடவுளை ஒரு உருவில் கண்டு வழிபாடு செய்தல் எல்லோருக்கும் மிகவும் எளிதானது. அதிலும் அவரவர்க்கு உகந்தபடி பல்வேறு வடிவங்கள். சிவனாரை பிக்ஷாடன மூர்த்தி, திரிபுராந்தகர், கல்யாணசுந்தரர், நடராஜர், தட்சிணாமூர்த்தி போன்ற பல வடிவங்களிலும், உமையுடனும், விநாயகர், முருகன் முதலானோருடன் கூடியவராயும் வழிபடுகின்றோம். மேலும் சிவனாரின் மிகவும் உன்னத தத்துவத்தை விளங்கச் செய்யும் லிங்க வடிவிலும் வழிபடுகின்றோம். சிவனார் லிங்க வடிவில் தோன்றிய புராணக் கதையும் லிங்க வடிவின் தத்துவமும் முந்தைய சங்கர ஜயந்தி மலர்களில் விவரிக்கப்பட்டுள்ளன.

லிங்க வழிபாட்டிற்கும் மேம்பட்ட தத்துவத்தை விளக்கும் ஸம்ஸ்க்ருத ச்லோகம் ஒன்றை இப்பொழுது இங்கு ஆராய்வோம். கடவுள் என்னும் சொல் நம் உள்ளே உறைந்துள்ள பரம்பொருளைக் குறிக்கிறது. இவ்வுணர்வு நமக்கு ஏற்பட்டால் ஸாரூப்யம், ஸாமீப்யம், ஸாலோக்யம் என்னும் நிலைகளைக் கடந்து ஸாயுஜ்யம் என்னும் நிலையைக் காணலாம். முதலில் நம் ஆன்மா வேறு நம் உடல் வேறு என்ற பாவம் நிலைபெற

வேண்டும். பின்னர் நாம் செய்யும் செயல்கள் யாவும் சிவ வழிபாட்டில் ஒன்ருனவை என்று கொள்ள வேண்டும். நம் உள்ளேயே இறைவன் குடிகொண்டுள்ளான் என்ற கருத்து நிலே பெற்ருல் நம் செய்கைகள் யாவும் தூய்மையானதாக இருக்கும், நம் சொற்களனைத்தும் மேம்பட்டவையாக இருக்கும்.

ஆத்மா த்வம் கிரிஜாமதி: ஸஹசரா: ப்ராண: சரீரம்க்ருஹம்
பூஜா தே விஷயோபபோகரஸநா நித்ரா ஸமாதிஸ்திதி: |
ஸஞ்சார:பதயோ: ப்ரதக்ஷிணவிதி:ஸ்தோத்ராணிஸர்வாகிர:
யத்யத் கர்மகரோமி தத்ததகிலம் சம்போ தவாராதனம் ||

ஹே சம்புவே! நீதான் என் ஆன்மா. மலேமகள் என் அறிவு. பிராணன்கள் பணியாட்கள். இந்த என் உடலே உன் வீடு. உலகிலுள்ள பொருட்களே நுகர்வதே உனது வழிபாடு. உறக்கமே ஸமாதி நிலே. கால்களால் நடந்து செல்வதே உன்னே வலம் வரும் வழிவகை. நான் கூறும் சொற்களனைத்தும் உன் புகழ் மாலே. எந்த ஒரு செயல் செய்யினும் அது அனைத்தும் உன் வழிபாட்டு முறையாகும்.

தன் செயல்களனைத்தையும் பரமனுக்கு அர்ப்பணம் செய்யும் ஒருவன் உயிர் வாழ்ந்து கொண்டே முக்தி நிலேயைப் பெறுகிருன் என்னும் சிவானந்தலஹரி (81) ச்லோகமும் இங்கு கவனிக்கத்தக்கது. கடவுள் நம்முன் இருக்கிருர் என்ற எண்ணம் மனதில் நிலேத்து நின்ருல் தீய எண்ணங்கள் மனதில் புகா, தீய செயல்கள் செய்ய மனம் எண்ணுது. நம் உடல் புனிதமானது என்ற கருத்து மேலோங்கும். இக்கருத்தை மனதில் கொண்டு பரமனுடன் ஒன்றிய நிலேயை அடைய முயல்வோமாக.

சிவம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.



# சிவபெருமான் திருவந்தாதி

கபிலதேவ நாயனுர் அருளியது

சங்கரன்கோவில் வித்துவான் ச. இரத்நவேலன் அவர்களெழுதிய பொழிப்புரையுடன் கூடியது

## முன்னுரை

பதினேராந் திருமுறை நாற்பது பிரபந்தங்கள் கொண்டது. 22-ஆம் பிரபந்தம் "சிவபெருமான் திருவந்தாதி" என்பதாம். இதனை அருளியவர் கபிலதேவ நாயனுர். இவரருளிய மூன்று பிரபந்தங்கள் இத்திருமுறைக்கண் உள்ளன. மூன்ருவது நூல் இந்நூல். வெண்பா யாப்பில் செய்யப்பட்ட இந்நூலில் மடக்கு, யமகம் பயின்று வந்துள்ளன. ஆகலான் கற்ருேரேயன்றி மற்ருேர் இதில் பயிற்சிக்

குறைவுடையவராய் உள்ளனர். கற்றோரையும் கலங்க வைக்கும் பாடல்கள் பல இதன்கண் உள்ளன. எனவே ப்ரும்மஸ்ரீ ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா அவர்கள் இந்நூலுக்கு உரை வரைந்தனுப்புமாறு கட்டளையிட்ட பொழுது அஞ்சினேன். திருமுறைக்கு உரை காண்பது எளிய காரியமன்று. அதனாலும் நான் தயங்கினேன். ஆயினும் பன்முறை ஸ்ரீசர்மா அவர்கள் வற்புறுத்தவே ''யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது'' என்ற நீதிப்படி உரை கண்டுள்ளேன். குற்றங் களைந்து குணங்கொண்டு கோதாட்டுமாறு சைவ நல்லறிஞரைப் பிரார்த்திக்கிறேன்.

கபிலதேவநாயனார் சங்கப் புலவரே ஆயிடினும் திருமுறையில் பேசப்பெறும் கபிலதேவ நாயனார் சங்கப்புலவர் அல்லர் எனக்கூறுவதில் சிலருக்கு மகிழ்ச்சி. சைவர்க்கு சங்கப்புலவரினும் திருமுறை ஆசிரியன்மாரே உயர்ந்தவர். ஆகவே அவர் பாரி நண்பர் ஆயினும் ஆகுக, இன்னா நாற்பது பாடிய ஆசிரியராயினும் ஆகுக, அல்லாது இருப்பினும் இருக்க. அவர் திருமுறை ஆசிரியர், எனவே நம்மவரால் உச்சிமேற் கொள்ளத்தக்கவர். அவரது திருவடி போற்றி நூலைக் கற்போமாக.

இவ்வகையில் என்னைச் செலுத்திய ப்ரும்மஸ்ரீ சர்மா அவர்களைப் போற்றி நன்றியோடும் வணங்கிக்கொள்கிறேன்.

**வித்துவான் ச. இரத்நவேலன்**
சங்கரன்கோவில்

திருச்சிற்றம்பலம்

ஒன்று முதலாக நூறளவும் ஆண்டுகள்வாழ்ந்
தொன்றும் மனிதர் உயிரையுண் — டொன்றும்
மதியாத கூற்றுதைத்த சேவடியான் வாய்ந்த
மதியான் இடப்பக்கம் மால். 1

(பொழிப்புரை):- ஒன்று முதல் நூறு வயதுவரையும் வாழ்ந்து இறப்பினை அடையும் மாந்தர் உயிரை வாங்கும்

இயமன் மார்க்கண்டேயர் செய்த ஒப்பற்ற புண்ணியமாகிய சிவபூசையை எண்ணுது அவரது உயிரைக் கவர்ந்து செல்ல முற்பட்டான். அதனுல் அக்கூற்றுவனை உதைத்தருளிய சிவந்த திருப்பாதங்களை உடையவன் சிவபெருமான்; அவன் பிறைசூடியவன். அச்சிவபிரானது இடப்பக்கத்தைப் பொருந்தி நிற்பவர் திருமால்.

மனிதர் எனத் தலைமை பற்றிக் கூறினுரேனும் பிறஉயிர் களையும் கொள்க.

மாலை ஒருபால் மகிழ்ந்தானை வண்கொன்றை
மாலை ஒருபால் முடியானை — மாலை
ஒளியானை உத்தமனை உண்ணுநஞ் சுண்டற்
கொளியானை ஏத்தி உளம். 2

(பொ-ரை) திருமாலைத் தம் இடப்பக்கத்தில் மகிழ்ந்து வைத்திருப்பவனும், வளப்பம் பொருந்திய கொன்றை மாலையைத் திருப்பள்ளித்தாமமாகத் திருமுடியில் சூடியிருப்பவனும், மாலைக்காலத்துச் செக்கர் வானத்தையொத்த ஒளி மயமான திருமேனியுடையவனும், உத்தமனும், பிரம்ம விஷ்ணுவாதி தேவர்களும் கண்டஞ்சியதும் உண்ண முடியாததுமாகிய ஆலால விஷத்தை உண்பதற்கு ஒளித்துக் கொள்ளாதவனுமாகிய சிவபெருமானை நெஞ்சே நீ துதிப்பாயாக.

உளமால்கொண் டோடி ஒழியாது யாமும்
உளமாகில் ஏத்தாவா றுண்டே—உளம்மாசற்
றங்கமலம் இல்லா அடல்வெள்ளே றூர்ந்துழலும்
அங்கமல வண்ணன் அடி. 3

(பொ-ரை) அங்கங்களில் எவ்வகைக் குற்றமும் இல்லாது போர் செய்யும் ஆற்றலுடைய ரிஷப வாகனத்தில் ஆரோகணித்து அடியார்க்கு அருள் செய்யத் திரியும் அழகிய தாமரை போன்ற திருவடிகளை உடைய சிவபிரானை, உள்ளம் மயக்கமடைந்து ஓடி நீங்காது மனந்தூயராய் நாமும் இருப் போமானுல் வணங்காதிருக்க வழக்குண்டோ? இல்லை.

அடியார்தம் ஆருயிரை அட்டழிக்குங் கூற்றை
அடியால் அருவாகச் செற்றான்—அடியார்தம்
அந்தரத்தால் ஏத்தி அகங்குழைந்து மெய்யரும்பி
அந்தரத்தார் சூடும் அலர். 4

(பொ-ரை): - மார்க்கண்டேயராகிய அடியாரது அரிய உயிரைத் தன் ஆற்றல் தோன்றக் கவர்ந்து செல்ல முற்பட்டான் இயமன். அவனைத் தம் திருவடியால் செற்று உதைத்து அருவநிலை அடையச் செய்தான் சிவபெருமான். அப்பெருமானை அடியார்கள் உள்ளம் உருகி மெய்ம்மயிர் பொடிப்ப அகப்பூசை செய்து துதிப்பார். அத்துதியே சிவபிரான் சூடும் பூவாகும்.

அலராளுங் கொன்றை அணியலா ரூரற்
கலராகி யானும் அணிவன் — அலராகி
ஓதத்தான் ஒட்டினேன் ஓதுவன்யான் ஓங்கொலிநீர்
ஓதத்தான் நஞ்சுண்டான் ஊர். 5

(பொ-ரை): - மலர்தலைச் செய்யும் கொன்றையை அடையாளமாலையாகக் கொண்ட ஆரூர்ச் சிவபிரானை விரும்பி அடியாளும் அவ்வடையாளமாலையை அணிந்து கொண்டேன். அதனால் பிறர் தூற்றுதலுக்கு ஆளாகி உள்ளம் ஒடுங்கினேன். அவ்வலர் நீங்கக் கடல்சூழ்ந்த ஊரனும், நீலகண்டனுமாகிய அச்சிவபிரான் திருநாமங்களையான் கூறுவேன்.

தலைவி கூற்று இவ்வெண்பா.

ஊரும தொற்றியூர் உண்கலனும் வெண்தலையே
ஊரும் விடையொன் றுடைதோலே — ஊரும்
படநாகம் மட்டார் பணமாலை ஈதோ
படநாகம் அட்டார் பரிசு. 6

(பொ—ரை): - சிவபெருமானுக்கு ஊர் திருவொற்றியூர். உண்ணும் பாத்திரமோ பிரம்ம கபாலம்; ஊர்தியோ ஒப்பற்ற ரிஷபம்; உடையாவது தோலே; ஊர்ந்து செல்லும் படத்தோடு கூடிய நாகமும் தேன் பொருந்திய பூக்களும் மாலையே, யானை

வடிவில் இருந்த கயாசுரனைச் சங்கரித்த சிவபெருமான் தன்மைகள் இவையே,

பரியானை ஊராது பைங்கணே றூரும்
பரியானைப் பாவிக்க லாகா—பரியானைக்
கட்டங்கம் ஏந்தியாக் கண்டுவாழ் நன்னெஞ்சே
கட்டங்கம் ஏந்தியாக் கண்டு. 7

(பொ-ரை) குதிரை, யானையை வாகனமாகக் கொள்ளாது பசிய கண்களைக் கொண்ட ரிஷபத்தை வாகனமாகக் கொண்ட சிவபெருமானை, மனத்தால் பாவிக்கவொண்ணாத பெருமை மிக்கவனை, மழு ஏந்தியவனாகவும், கட்டிய எலும்பையே ஆபரணமாக ஏந்தியவனாகவும் கண்டு நன்னெஞ்சமே நீ வாழ்வாயாக.

கண்டங் கரியன் உமைபாலுந் தன்பாலும்
கண்டங் கரியன் கரிகாடன்—கண்டங்கள்
பாடியாட் டாடும் பரஞ்சோதிக் கென்னுள்ளம்
பாடியாக் கொண்ட பதி. 8

(பொ-ரை) கழுத்தில் நீலநிறமுடையவன், உமையை ஒரு பாகம் கொண்ட அரிய திருக்கோலங்கொண்டவன், சுடுகாடன், கண்டங்கள் செம்மையாகப் பாட அதற்கேற்ப நாட்டியம் செய்யும் பெரிய சோதி மயமானவன் சிவபெருமான். அச்சிவபெருமானது பாடிவீடாக என் உள்ளத்தைக் கொண்டேன். ஆதலால் அவ்வுள்ளமே ஒரு பதியாகும்.

பாடிவீடு-பாசறை; பதி-க்ஷேத்திரம், கடவுள் உறைவிடம்.

பதியார் பழிதீராப் பைங்கொன்றை தாவென்
பதியான் பலநாள் இரக்கப்—பதியாய
அம்மானார் கையார் வளைகவர்ந்தார் அஃதேகொல்
அம்மானார் கையார் அறம், 9

(பொ-ரை) "நகரத்தார் கூறும் பழிதீரவில்லை. ஆக லான் தேவரீர் அடையாளமாகிய கொன்றை மாலையைத் தந் தருளும்" என்பதொன்றையே அடியாளாகிய யான் பலநாள் யாசித்து வேண்டவும் தலைவராகிய அழகிய மான் ஏந்திய கையை உடைய சிவபிரான் அவ்வடையாள மாலையைத் தாராது என்னை மெலியச் செய்து வளை கவர்ந்தார். அது தானே கடவுளது கைப்பட்ட நல்ல அறம்?

அறமானம் நோக்கா தநங்கனையும் செற்றங்
கறமாநஞ் சுண்ட அமுதன்—அறமான
ஓதியாள் பாகம் அமர்ந்தான் உயர்புகழே
ஓதியான் தோற்றேன் ஒளி. 10

(பொ-ரை) அறத்தையும் பெருமையையும் பாராது மன் மதனையும் எரித்து அறமாக ஆலகால விஷத்தை அமுதாக உண்ட அமிர்தனும், கருமணலை ஒத்த கூந்தலை உடைய உமாதேவியை ஒருபாகமாகக் கொண்டவனும் சிவபெருமான். அவன் புகழையே பேசி யான் எனது மேனியில் பசலை பூத்தேன்.

பசலை-அழகுத் தேமல், தலைவரைப் பிரிந்த தலைவியரிடம் தோன்றுவது. இவ்வெண்பா தலைவி கூற்று.

ஒளியார் சுடர்மூன்றும் கண்மூன்ருக் கோடற்
கொளியான் உலகெல்லாம் ஏத்தற்—கொளியாய
கள்ளேற்ருன் கொன்றையான் காப்பிகந்தான் நன்னெஞ்சே
கள்ளேற்ருன் கொன்றை கடிது. 11

(பொ-ரை) உலகிற்குப் பிரகாசம் தரும் சூரியன், சந்திரன், அக்நி ஆகிய முச்சுடர்க்கும் ஒளிதரும் காரணமாய முக்கண்களைக் கொள்வதற்குப் பின்வாங்காத சிவபிரான், உலகமெல்லாம் வணங்க ஒளியானயாவுந் திரண்ட ரிஷப வாகனத்தமர்ந்தான்; கொன்றை மாலையை அடையாளமாகக்

கொண்டான். தன்னைப் பிறர் பாதுகாக்கும் தன்மை நீங்கியவன் சிவபிரான், எனவே பிறரைக் காப்பாற்றுபவன். ஆதலால் நல்ல நெஞ்சமே, தேன் பொருந்திய அவனது கொன்றைப்பூக்கிடைக்கும் காலம் அண்மையிலுள்ளது.

இவ்வெண்பாவும் தலைவி கூற்று.

கடியரவர் அக்கர் கரிகாடு கோயில்
கடியரவர் கையதுமோர் சூலம்—கடியரவர்
ஆனேற்றூர்க் காட்பட்ட நெஞ்சமே அஞ்சல்நீ
ஆனேற்றூர்க் காட்பட்டேம் யாம். 12

(பொ-ரை) கடிக்கும் பாம்பையும் உருத்திராக்ஷங்களையும் மாலையாக உடையவர், சுடுகாட்டைக் கோயிலாகக் கொண்டவர், காவல் பெற்ற பாம்பைக் காப்பாகக் கட்டிய கைக்கண் உள்ள ஒப்பற்ற சூலம் ஏந்தியவர், அதிசயமான பாம்பாபரணர், வெள்ளேற்றை வாகனமாகக் கொண்டவர் சிவபிரான். அவர்க்கு அடிமை பூண்டொழுகும் நல்ல நெஞ்சமே, நீ பயப்படாதே. தர்மத்தையே வாகனமாகக் கொண்ட அவரால் யாம் காப்பாற்றப்படுவது உறுதி.

யாமான நோக்கா தலர்கொன்றைத் தார்வேண்ட
யாமானங் கொண்டங் கலர்தந்தார்—யாமாவா
ஆவூரா ஊரும் அழகா அனலாடி
ஆவூரார்க் கென்னுரைக்கோம் யாம். 13

(பொ-ரை) யாம் மானத்தை நோக்காமல் மலர்ந்த கொன்றைப் பூவாகிய மாலையை விரும்பி வேண்ட, எமது பெருமையைத் தமது உடைமையாக்கிப் பழிக்கிடமான தேமலைத் தந்தார் சிவபெருமான். 'ஏறு ஊர்ந்து செல்லும் அழகரே, அனலைக் கையிலேந்தி ஆடுபவரே, அடியாள் இரங்கத்தக்கவள்' என்று கூறி அரற்றுவதல்லால் ஆவூரரிடம் வேறு என்ன பேச வல்லேம் யாம்?

யாம்-உளப்பாட்டுத் தன்மைப் பன்மை. இவ்வெண்பா தலைவி கூற்று.

யானென்றங் கண்ணு மலையான் அகம்புகுந்து
யானென்றங் கையறிவும் குன்றுவித்து—யானென்றங்
கார்த்தானே யாயிடினும் அம்பரன்மேல் அங்கொன்றை
ஆர்த்தானேல் உய்வ தரிது. 14

(பொ-ரை) 'யானே உன் தலைவன்'-என்று திருவண்ணு மலையான் மனம் புகுந்து, யான் என்ற செருக்கிற்குக் காரண மான ஐம்பொறியறிவையும் குறைத்து தன்னை முன்னிறுத்தி உயிரைப் பின்போக்கி அடியனுக்கும் நல்லருள் செய்தாலும் அச்சிவபெருமான் மேல் அழகிய கொன்றை மாலை சூட்டிப் பணி செய்வானேல் உய்வது அரிய காரியமன்று.

அரியாரும் பூம்பொழில்சூழ் ஆமாத்தூர் அம்மான்
அரியாரும் பாகத் தமுதன்—அரியாரும்
வேங்கடத்து மேயானை மேவா உயிரெல்லாம்
வேங்கடத்து நோயால் வியந்து. 15

(பொ-ரை) வண்டுகள் பொருந்தி ரீங்காரம் செய்யும் பூஞ்சோலைகள் சூழ்ந்த திருவாமாத்தூர்ச் சிவபெருமான் திரு மாலை ஒரு பாதியில் கொண்ட அமிர்தன்; சிங்கங்கள் உலா வரும் திருவேங்கட மலையைப் பொருந்தியவன். அவனை வியந்து பொருந்தாத உயிர்க்கூட்டமெல்லாம் உடல் நோயால் வருந்தும்.

வியந்தாழி நன்னெஞ்சே மெல்லியலார்க் காளாய்
வியந்தாசை யுள்மெலிய வேண்டா—வியந்தாய
கண்ணுதலான் எந்தைகா பாலி கழலடிப்பூக்
கண்ணுதலாம் நம்பாற் கடன். 16

(பொ-ரை) எனது நன்னெஞ்சமே! மென்மையான இயல்புகளை உடைய பெண்களை விரும்பி அழிய வேண்டா; அவரை அதிசயித்து ஆசைப்பட்டும் உள்ளம் மெலிய வேண்டா. வியந்து ஆராயத்தக்க கண்ணை நெற்றியில் கொண்டவன், எம் தந்தை, காபாலி ஆகிய சிவபெரு மானது வீரகண்டையணிந்த திருப்பாதப் பூவைத் தியானித்தல் நம்மவர்க்குக் கடனும்,

கடனுகம் ஊராத காரணமும் கங்கை
கடனுக நீகவர்ந்த வாறும்—கடனுகப்
பாரிடந்தான் மேவிப் பயிலும் பரஞ்சோதி
பாரிடந்தான் மேயாய் பணி. 17

(பொ-ரை) மதம் பொழியும் யானையை வாகனமாகக் கொள்ளாத காரணமும், ஆகாச கங்கையைத் திருமுடியில் மறைத்துக் கொண்ட வழியும், பூதக்கூட்டத்தைப் பொருந்திப் பழகுவதைக் கடனுகக் கொண்ட காரணமும், பூமியாகிய இடத்தைப் பொருந்திய வகையும் சிவபெருமானுகிய மேலான சோதியே! ஏன் என்று திருவருள் பண்ணு.

பணியாய் மடநெஞ்சே பல்சடையான் பாதம்
பணியாத பத்தர்க்குஞ் சேயான் – பணியாய
ஆகத்தான் செய்துமேல் நம்மை அமரர்கோ
ஞகத்தான் செய்யும் அரன். 18

(பொ-ரை) இளமை பொருந்திய நெஞ்சே! நீ பணிவாயாக. பலவாகிய சடையையுடையவன், தமது திருப்பாத மிடும் ஆணைக்கடங்காத பக்தர்களுக்கும் தூரத்தில் உள்ளவன். பாம்புகளையே ஆபரணமாகக் கொண்ட திருமேனியையுடையவன் சிவபெருமான். அவனுக்கு ஆட்பட்டுப் பணி செய்வோமாயின் நம்மை அவ்வரன் தேவர்களுக்கும் அரசனுகச் செய்வான்.

அரன்காய நைவேற் கநங்கவேள் அம்பும்
அரன்காயும் அந்தியுமற் றந்தோ—அரங்காய
வெள்ளில்சேர் காட்டாடி வேண்டான் களிறுண்ட
வெள்ளில்போன் றுள்ளம் வெறிது. 19

(பொ-ரை) அரன் மேல் ஏற்பட்ட மையல் என்னை வருத்த நான் வருந்துவேன். ஆனுல் அச்சிவபெருமான் அம்மையலுக்குக் காரணமான அந்திப் பொழுதையும் மன்மதனையும் அந்தோ அம்போடும் காய்ந்தானே. சுடுகாட்டை அரங்காகக் கொண்டு நட்டமாடும் சிவபெருமான் அடியாளை

விரும்பவில்லை போலும். அதனால் என்து உள்ளம் யானை யுண்ட விளங்கனி போல வெறுமையாயிற்று.

இவ்வெண்பா தலைவி கூற்று.

வெறியானை ஊர்வேந்தர் பின்செல்லும் வேட்கை
வெறியார்பூந் தாரான் விமலன்—வெறியார்தம்
அல்லல்நோய் தீர்க்கும் அருமருந்தாம் ஆரூர்க்கோன்
அல்லனோ நெஞ்சே அயன். 20

(பொ-ரை) மதங்கொண்ட யானையை ஊர்ந்து செல்லும் மன்னர்கள் பின்னே வர ஆசைப்படும் பவனி மேற்கொள்ளும் வாசனை பொருந்திய பூமாலையணிந்த மலமற்றவன் சிவபெருமான். அப்பெருமான் தம்மேல் பித்துக்கொண்டவர் பெற்ற துன்பநோய் நீக்கும் அரிய மருந்தாவான். ஆதலால், நெஞ்சே! திருவாரூர்த் தலைவனாகிய அச்சிவபிரான் அல்லனோ நம் தலைவன்?

அயமால்ஊண் ஆடரவம் நாண்அதள தாடை
அயமாவ தானேறூர் ஆரூர்—அயமாய
என்னக்கன் தாழ்சடையன் நீற்றன் எரியாடி
என்னக்கன் றாழும் இவள். 21

(பொ-ரை) 'சிவபிரானுக்கு உணவோ ஐயம் ஏற்கும் சோறு; அரைஞாண் கயிறோ பாம்பு; ஆடையோ புலித்தோல்; குதிரை போன்று ஊர்தியாக இருப்பதோ ரிஷபம்; ஊரோ திருவாரூர். எனது நற்பேறாகிய அச்சிவபிரான் தாழ்ந்த சடைகளோடு கூடியவன்; திருநீறு தரித்தவன்; கையில் எரி தவழ நிருத்தம் செய்பவன்' என்று கூறி வாடி அவன் பெருமையை எண்ணி ஆழ்ந்து போவாள் இப்பெண்மணி.

மகள்நிலை கண்டு செவிலி கூறியது இவ்வெண்பா.

ஆழும் இவளையுங் கையகல ஆற்றேனென்
றாழும் இவளை அயராதே—ஆழும்
சலமுடியாய் சங்கரனே சங்கக் குழையாய்
சலமுடியா தின்றருளுன் தார். 22

(பொ-ரை) 'சடை முடியில் கங்கையை ஆழ்ந்து போகச் செய்த சங்கரனே, சங்கைக் குழையாய்க் கொண்டவனே! உனது மையலில் ஆழ்ந்திருக்குமிவளை, உன் கையைவிட்டு நீங்கேன்' என்று உரைப்பதில் ஆழும் இவளை மறவாதே! வஞ்சியாது இன்று உனது அடையாள மாலையைத் தந்து உய்யச் செய்.

இவ்வெண்பா தோழி கூற்று.

தாராய தண்கொன்றை யான்இரப்பத் தானிதனைத்
தாராதே சங்கஞ் சரிவித்தான்—தாராவல்
ஆனைமேல் வைகும் அணிவயல்ஆ ரூர்க்கோன்நல்
லானையும் வானோர்க் கரசு. 23

(பொ-ரை) வலிய ஆனேற்றில் எழுந்தருளும் வரிசை யான வயல்சுள் சூழ்ந்த திருவாரூர்த் தலைவன் நல்ல தமது சாருபத்தையும் இந்திர பதவியையும் தாராதவனோ? அப்படி யிருக்க அடையாள மாலையான கொன்றை மாலையை யான் யாசித்துப் பலமுறை வேண்டவும் தாராது என்னை மெலியச் செய்து சங்க வளையல்கள் கழலும்படி செய்துவிட்டானே. என்னே இவனது கருணை?

உயர் பதங்களை எளிதாய்த் தரவல்லானுக்கு அடையாள மாலை தருதல் எளியது தானே என்பது குறிப்பு. இவ்வெண்பா தலைவி கூற்று.

அரசுமாய் ஆள்விக்கும் ஆட்பட்டார்க் கம்மான்
அரசுமா மங்கொன்று மாலுக்—கரசுமான்
ஊர்தி எரித்தான் உணருஞ் செவிக்கின்பன்
ஊர்தி எரித்தான் உரு. 24

(பொ-ரை) தமது திருவடித் தொழும்பர்க்குக் கண்ணு தற்கடவுள் அரசுமாகி ஆளச்செய்வான்; தம்மைப் பொருந்திய திருமாலுக்குத் தலைவனுமாவன்; மன்மதனை ஊர்தியோடும்

எரித்தான். அவனை உணர்ந்தோர் செவிக்கின்பம் செய்பவன், உதாசினம் செய்த திரிபுரங்களை எரியச் செய்தான்.

உருவேஎன் சொற்கள் ஒளிவளைநின் உள்ளத்
துருவேதீ உற்றனகள் எல்லாம்—உருவேபோய்க்
காவாலி தார்நினைந்து கைசோர்ந்து மெய்மறந்தாள்
காவாலி தாநின் கலை. 25

(பொ-ரை) அடியாள் சொற்கள் தேவரீர் திருச்செவியில் ஏற்றுக் கொள்ளப்படவில்லையே. இவளது ஒளி பொருந்திய வளையல்கள் கழன்ற செய்திகள் தேவரீர் திருவுள்ளத்தில் உதாசினம் செய்யப்பட்டனவே. தீமையானவை யாவும் தேவரீரைப் பொருந்தாவே. கபாலத்தைக் கையில் ஏந்திய தேவரீரது அடையாள மாலையை விரும்பிப்போய்க் கை சோர்ந்து இப்பெண் தன்னையே மறந்துவிட்டாள். காபாலியே உமது கலை (ஆடை) தந்து இவளது நிலையை மாற்றியருள் வீராக.

—தொடரும்

[பதிப்பாசிரியர் குறிப்பு: — எனது பெறற்கரிய நண்பரும், ஆழ்ந்தகன்ற செந்தமிழ்ப் புலமையும், கூர்த்த மதியினையு முடையவரான வித்துவான் திரு. ச. இரத்நவேலன் அவர்களை பலமுறை வேண்ட, அடியேன் வேண்டுகோளை மதித்து இந்த அரிய உரையை எழுதி உதவியுள்ளார். இவ்வந்தாதியின் ஏனைய பாடல்களின் உரை தொடர்ந்து ஆண்டுதோறும் வெளி யிடப்படும். வித்துவான் திரு. ச. இரத்நவேலன் அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றிகளையும் இச்சந்தர்ப்பத்தில் தெரி வித்துக் கொள்கிறேன்.

சிதம்பரத்தைச் சேர்ந்த தீக்ஷிதப் பெரியார் ஒருவர் அடியேனிடம் ஒரு கேள்வி கேட்டார். 'அபிராமி அந்தாதி' இவ்வளவு பிரசித்தமாக உள்ளதே? உங்கள் பதினொன்றும் திருமுறையில் உள்ள சிவபிரான் திருவந்தாதிகள் ஏன் மக்கள் மத்தியில் பிரசாரமாகவில்லை என்பதே அவரது கேள்வி.

உண்மையில் இக்கேள்வி என் மனத்தைப் பிசைந்தெடுத்தது. சிவபிரான் திருவந்தாதிகட்கு உரையின்மையால் அவை பெருவாரியாகப் பயிலப்படாதிருக்கலாம் என்ற எண்ணமும் தோன்றியது. தோன்றவே, சிவஞான பூஜாமலர் மூலம் இந்த அந்தாதிகட்குப் பொருள் விளக்கம் தருவதென்ற முடிவும் கொண்டேன். அதன் விளைவே இந்தப் பகுதியாகும். தொடர்ந்து பதினொன்றும் திருமுறைப் பதிகங்கள் யாவும் உரையுடன் நமது மலரில் பிரசுரிக்கப்படும் என்ற செய்தியையும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

—ஆங்கீரஸ சர்மா]

சிவம்.

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# கம்பன் காட்டிய கண்ணுதற் கடவுள்—IV

வித்துவான். பெ. கு. வரதராசன் எம்.ஏ., பி.ஓ.எல்., பி.டி.

தமிழ்ப் பேராசிரியர்—அரசு கலைக்கல்லூரி,
கிருஷ்ணகிரி

'கம்பன் காட்டிய கண்ணுதற் கடவுள்' என்ற தலைப்பில் இது நான்காவது கட்டுரை. கம்பன் தன் காவியத்துள் கதா பாத்திரங்கள் பலர் வாயிலாகவும் சிவபெருமானின் சிறப்புகளைப் பேசவைக்கின்றான். தானும் கவிக்கூற்றாக சிவபெருமானின் சிறப்புகளை ஆங்காங்கு எடுத்துக் கூறுகின்றான். தானன்றி நாற்பத்தொரு பாத்திரங்களைப் பேச வைக்கும் கம்பன் அவர்கள் வாயிலாக வெளிப்படுத்தும் சிவபெருமானின் புகழ் கூறும் பாடல்கள் இருநூற்றிருபத்தேழே. கம்பனால் மட்டும் கவிக்கூற்றாக அவர்தம் இராமகாதை முழுதும் பாடிய பாடல்கள் நூற்றறுபத்தெட்டாகும். இவை சிவபெருமானின் புகழ் கூறும் மொத்தப் பாடல்களில் நாற்பத்திரண்டு விழுக்காடாகும். இந்தக் கணிப்பே, கம்பன் சிவபெருமான் புகழைப்பாட எத்துணை விருப்பமுடையவனாக இருந்தான் என்பதைப் புலப்படுத்தும். இராமாவதாரச் சிறப்பினைப் பேச வந்த கம்பன் தன்னுள்ளத்தை வயப்படுத்திக் கொண்ட சிவபெருமானை—சிவபெருமானது புகழையோ—சிறப்பையோ—

தோற்றப்பொலிவையோ குறிப்பிடத் தவறியதில்லை. ஒன்று, கம்பன் தானகவே கவிக்கூற்ருகக் கூறுவான்; அவ்வாறு கூற வாய்ப்பில்லாத போது ஏதாவதொரு பாத்திர வாயிலாகச் சிவ பெருமானை நினைவு கூரச்செய்வான்.

கம்பனுக்குச் சிவபெருமானிடத்தில் எவ்வளவு ஈடுபாடிருந்தது என்பதற்கு, இராமாயணத்தின் முதற்காண்டம், முதற்படலம், முதற்பாட்டை எழுதி முடித்த உடனேயே இரண்டாவது பாடலில் 'நீறணிந்த கடவுள் நிறத்தவான்' எனக்குறிப்பிடுவதே சிறந்த சான்ருகும். இதன் விரிவினை முதற்கட்டுரையில் காண்க.

நாட்டுப் படலத்தில் கவி, தன் கற்பனை நயங்களையெல்லாம் அறுபத்தொரு பாடல்களில் நாட்டினன். பின் நகரப் படலத்தைத் தொடங்குகின்ருன். நகரப்படலத்தில் முதலிரண்டு பாடல்களை எழுதினன். சிவபெருமானை மறக்கவோ மறைக்கவோ முடியாத நிலையில் கம்பன் இருந்தான் என்பதை மூன்ருவது பாடல் காட்டும்.

''உமைக்கொரு பாகத் தொருவனும் இருவர்க்கு
ஒருதனிக் கொழுநனும் மலர்மேல்
கமைப்பெருஞ் செல்வக் கடவுளும் உவமை
கண்டில ரங்கது காண்பான்
அமைப்பருங் காதலது பிடித்து உந்த
வந்தரஞ் சந்திரா தித்தர்
இமைப்பிலர் திரிவர் அதுவலால் இதனுக்கு
இயம்பலா மேதுமற் றியாதோ''

(அயோத்தியா காண்டம் — நகரப்படலம் — பாடல்-3) என்பது அப்பாடல்.

அயோத்தி மாநகரத்தின் சிறப்பைக் கூறுகின்ருன் கவிஞன். உமையை ஒரு பாகத்திலே கொண்ட ஒப்பற்ற சிவ பெருமானும், திருமகளுக்கும் பூமகளுக்கும் கணவனுகிய திருமாலும், அத்திருமாலின் உந்திக்கமலத்திலே தோன்றிய

பிரம்மதேவனும் ஆகிய மும்மூர்த்திகளுமே அயோத்தி மாநகருக்கு நிகரான அதற்கு உவமை கூறுதற்கு உரியதான ஒரு பட்டணத்தைக் கண்டிலர் எனக்கூறி அயோத்தியா பட்டணத்தின் சிறப்பையும், அழகையும், பெருமையையும் எடுத்து காட்டுகின்றான் கம்பன். இப்பாடலில் மும்மூர்த்திகளையும் நினைவு கூர்வதாகக் கொண்டாலும் கவிஞன் முதலிற் குறிப்பிடுவது சிவபெருமானையே. சிவபெருமானை 'ஒப்பற்ற' என்ற அடைமொழி கொடுத்து நமக்கு அறிமுகப்படுத்துகின்றான். அதோடு ஒரு நயத்தினையும் இப்பாடல் வழி கற்பிக்கின்றான். மும்மூர்த்திகளே அயோத்திக்கு நிகரானதொரு நகரம் இவ்வுலகில் இல்லை என அமைதி கொண்ட பின், சிவபெருமானின் கண்ணிலும் மனத்திலும் தோன்றிய சூரிய சந்திரர் நாள் தோறும் ஆகாய வீதியில் திரிந்து கொண்டிருக்கிறார்கள். அவ்வாறு அவர்கள் திரிவதற்குக் காரணம் அயோத்தி போன்றதொரு நகரம் எங்காகிலும் காணக்கிடைக்குமோ எனத்தேடிப் பார்த்தற்கேயாமெனக் கருதுகின்றான் கம்பன். அவ்வாறு திரிகின்ற சந்திர சூரியர் இமைப்பிலர் என்றும், தாங்கள் தேடிக்காண்பதிலே அவ்வளவு விழிப்புடையவர்களாக இருக்கின்றார்கள் என்பதனையும் அறிவிக்கின்றான்.

அடுத்து, நகரப் படலத்திலேயே ஒன்பதாவது பாடலுக்கு வருவோம். இப்பாடலில் அயோத்திமா நகரின் மதிலின் வருணனையைக் காண்போம். மிகப்பரந்து நுண்ணிய வேலைப்பாடுகளைக் கொண்டு விளங்குகின்ற இம்மதில், தனதறிவினால் எளிதில் உணரமுடியாத வேதத்திற்கு ஒப்பானது. விண்ணளாவியதாக இருப்பதால் இம்மதில் தேவர்களுக்கு ஒப்பானது, முனிவர்கள் ஐம்பொறிகளையும் தம் மனவலிமையால் அடக்கியிருத்தலைப் போல இம்மதிலும் பகைவர்களைத் தம்மிடம் அணுகவொண்ணாதபடி ஓட்டுதற்குரிய விசைப்பொறிகள் பலவற்றைத் தன்னகத்தே பெற்றிருப்பதால் அம்முனிவர்களையொக்கும். நகரத்தைக் காத்தலில் துர்க்கைக்கு ஒப்பாகும். இடிதாங்கியாகிய சூலத்தை மதில் தாங்கி நிற்றலால் காளியை ஒக்கும். பெருமையால் எல்லாவற்றையும் ஒக்கும்,

எளிதில் எவராலும் அடைய முடியாத தன்மையால் ஈசனை யொக்கும் என்று முடிக்கின்றன் கம்பன். கம்பன் காட்டும் கவி இதோ:-

''மேவரு முணர்வின் முடிவிலா மையினல்
வேதமும் ஒக்கும் விண்புகலால்
தேவரு மொக்கும் முனிவரு மொக்குந்
திண்பொறி யடக்கிய செயலால்
காவலிற் கலையூர் கன்னியை யொக்கும்
சூலத்தாற் காளியை யொக்கும்
யாவையும் ஒக்கும் பெருமையா லெய்தற்
கருமையால் ஈசனை யொக்கும்''

(அயோத்தியா காண்டம் — நகரப்படலம் — பாடல்-9)

இப்பாடலின் ஈற்றடியில்தான் தன் சூத்திரத்தையும் அமைத்துக் காட்டியுள்ளான். 'பெருமையால் எய்தற்கு அருமையால்' என்ற தொடரை முன்னேயிட்டு ஈசனை ஒக்கும் என்றன் கவிஞன். 'ஈசன்' என்ற சொல்லுக்குக் கடவுள் என்ற பொருளுமுண்டு. 'கடவுள்' என்ற சொல்லுக்கு வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், ''பத்துடையடியர்க்கன்றிப் பிறர்க்கு ஸ்ரீமந் நாராயணன் அடைதற்கரியனயிருத்தல் போல்'' எனப் பொருள் எழுதிச் செல்லுகின்றர். ஆனல், தமிழ்க்கடல், ராய-சொ அவர்கள் ஈசன் என்ற சொல்லுக்குச் சிவபெருமான் என்றே பொருள் கொண்டு அச்சொல் இடம் பெற்ற செய்யுளைக் கம்பன் சிவனை நினைந்து எழுதியது எனத் தம்மாய்வில் கண்டுள்ளார். கடவுள் என்ற சொல் அவரவர் கள் மேற்கொண்ட சமயத்திற்கேற்ற பொருளைத் தருமேயா யினும் இப்பாடலில் வந்துள்ள வேறு தெய்வங்களுக்கியை பான பொருளாகிய சிவபெருமான் என்ற பொருளைத் தருதலே யாமென்பது அடியேனது முடிவாம்.

கௌசிக முனிவன், தான் செய்கின்ற வேள்வியைக் காத்தற் பொருட்டு இராமனை இலக்குமணனேடு அழைத்துச் சென்றன். வேள்வி காத்தலில் தாடகை என்ற ஓர் அரக்கியை

இராமன் வதம் செய்ததை முனிவர்கள் அனைவரும் அறிவர். இராமனுடைய ஆற்றலில் முனிவர்கள் நம்பிக்கையுடையவர் கள். அரக்கர்களினால் வரும் துன்பங்கள் எவையேயாயினும் அவைகளிலிருந்து தம்மைக் காக்கும் ஆற்றலுடையவன் இராமன் என்பதை முனிவர்கள் நம்பினர். இருப்பினும், யாகசாலையைச் சூழ அரக்கர்கள் வருவதையும் அவர்கள் செய்யும் ஆரவாரத்தையும் கண்டு அஞ்சினர்; இராமனை அபயம் வேண்டினர். இங்குக் கவி தன் கற்பனையாக ஓர் உவமையை வடித்துத்தருகின்றான்.

''வஞ்சனை யரக்கரை வெருவி மாதவர்
அஞ்சன வண்ணநின் னபயம்யா மென்றார்''

அரக்கர்களுக்கு அஞ்சிய மாதவத்தினரான முனிவர்கள் அஞ்சன வண்ணனாகிய இராமபிரானை அபயம் வேண்டினர். இச்செயல் எதுபோலவெனின், அன்று திருப்பாற்கடலில் அமுதம் கடைந்தபொழுது நஞ்சு வருதலைக் கண்டு அஞ்சிய தேவர்கள் செஞ்சடைக்கடவுளை — சிவபெருமானை அபயம் வேண்டியதைப் போல் உள்ளதென வருணிக்கின்றான் கம்பன். பாடல் முழுவதையும் காண்போம்.

நஞ்சட வெழுதலும் நடுங்கி நாண்மதிச்
செஞ்சடைக் கடவுளை யடையுந் தேவர்போல்
வஞ்சனை யரக்கரை வெருவி மாதவர்
அஞ்சன வண்ணநின் னபயம் யாமென்றார்.

(பாலகாண்டம் - வேள்விப்படலம் - பாடல்-50)

விசுவாமித்திரன், இராம இலக்குவணன் ஆகிய இரு வரையும் அழைத்துக்கொண்டு மிதிலைக்குச் செல்லுகின்றான். வேள்வி காத்தற்பொருட்டு அழைத்துவந்த இருவரையும் விசுவாமித்திரன் மிதிலை செல்லும் வழியில் உள்ள இயற்கைக் காட்சிகளையும் கண்டுகளிக்கச் செய்கிறான். அம்மூவரும் செல்லும் வழியில் கங்கையாற்றைக் காணுகின்றனர்.

அம்மூவரையும் கம்பன் மும்மூர்த்திகள் என வருணிக்கின்றான். பிரம்மவிருடிப் பட்டத்தைப் பெற்ற விசுவாமித்திரனை பிரமனாகவும், விஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீ இராமனைத் திருமாலாகவும், கோபமுடைய இலக்குவணனைச் சிவபெருமானாகவும் நமக்குக் காட்டுகின்றான் கம்பன். அம் மூவரும் கண்ட கங்கையை வருணிக்கப்புகும் கம்பன் சிவ பெருமானை நினைக்கின்றான். சிவபெருமானின் சடாமுடி தன் மனக்கண்முன் வருகிறது. அச்சடாமுடியில் பொங்கி வழி கின்ற கங்கையாறும் நினைவுக்கு வருகிறது. அவ்வாறு பொன் நிறமாக இருக்கிறது என்கிறான் கம்பன். அந்நிறத்தைப் பெற ஒருகாரணத்தையும் காட்டுகின்றான்; கங்கை தேன் நிறைந்த கொன்றைமலர்களை ஈர்த்து வருகின்றது என. அப்பிரவாகத்தைக் கண்ட கம்பன் பொன்னிறமாகக் காட்சி யளிக்கும் கங்கையை மறக்கின்றான்; காவிரியாகிய பொன் னியை நினைத்தான். இங்கு சிவபெருமானுடைய நினைவாகிய சமயப்பற்றும் தான் பிறந்து வளர்ந்த தமிழ்நாட்டை வளப் படுத்தும் பொன்னியின் நினைவால் நாட்டுப்பற்றும் கம்பனை ஒருங்கே ஆட்கொண்டிருத்தலையும் நம்மால் காணமுடிகிறது.

''அங்கு நின்றெழுந் தயன்முதன் மூவரு மனையார்
செங்க ணேற்றவன் செறிசடைப் பழுவத்தி னிறைதேன்
பொங்கு கொன்றையீர்த் தொழுகலாற் பொன்னியைப்
பொருவுங்
கங்கை யென்னுமக் கரைபொரு திருநதி கண்டார்''

(பாலகாண்டம் - அகலிகைப்படலம் - பாடல்–32)

உபமேயத்தைக் காட்டிலும் உபமானம் சிறந்திருத்தல் வேண்டுமென்பது அணியிலக்கணக் கொள்கை. கம்பன் கங்கைக்குக் காவிரியை உவமை கூறினானெனின் காவிரிக் கல்லவா புகழ் சேர்த்திருக்கிறான்.

கவிக்கூற்றாக வந்த பாடல்கள் சிலவற்றைப் பார்த்தோம். இனிக் கம்பன், பாத்திர வாயிலாக சிவபெருமானைத் தானும்

நினைத்து, பயில்வோர்களையும் நினைப்பிக்கின்ற இடங்களைக் காண்போம்,

கார்முகப் படலத்துள் இராமபிரான் சிவதனுசினை எடுத்தான்-அம்பினைத் தொடுத்தான்-அவ்வில்லை முறித்தான். வில்லை முறித்ததனால் உண்டான பேரோசை உலகை வியப்பில் ஆழ்த்தியது என்றெல்லாம் கம்பன் நிகழ்ச்சிகளைக் கூறிச் செல்லுகின்றான். அவ்வோசையைக் கேட்ட சீதாதேவியின் நிலையினையும் கம்பன் கூறத்தவறினானில்லை. சீதை இராம பிரானுடைய அழகிலும் ஆற்றலிலும் நெஞ்சத்தைப் பறி கொடுத்தவளாக, அவனது நினைவால் சோகமுற்றிருந்தாள். அப்போது சீதாதேவியிருக்கும் இடத்திற்கு அவளது சேடியர் களில் ஒருத்தி நீலமாலை என்பவள் வருகிறாள். சீதையிடத்து நல்லதொரு செய்தியைச் சொல்ல வந்தாள். தான் சொல்ல வேண்டிய நல்ல செய்தியைச் சொல்லுவதிலே அவளுக்கு மிக்க விரைவு. அவ்விரைவு காரணமாக வழக்கமாகச் சீதையிடத்து வந்ததும் சீதைக்குச் செய்ய வேண்டிய மரியாதையைக்கூடச் செய்ய மறந்துவிடுகிறாள். செய்தியைச் சொல்லாமலேயே ஆடுகிறாள்; பாடுகிறாள்.

''வந்தடி வணங்கிலள் வழங்கு மோதையள்
அந்தமி லுவகையள் ஆடிப் பாடினள்''

அவளது செயலைக்கண்ட சீதை அவள் ஏதோ களிப்பில் திளைத்துளாள் என்பதை அறிகிறாள். அதனைத் தான் அறியும்படி சொல்ல வேண்டுகின்றாள்.

''சிந்தையுள் மகிழ்ச்சியும் புகுந்த செய்கையும்
சுந்தரி சொல்லெனத் தொழுது சொல்லுவாள்''

(பாலகாண்டம்—கார்முகப்படலம்—பாடல்57)

சீதை தன்னிடம் வந்த நீலமாலையை வந்த காரியம் யாது? உனக்கு இம்மகிழ்ச்சி ஏற்படக் காரணம் என்ன? என் முன் வந்து ஆடுவதும் பாடுவதும் ஏன்? எனக்கேட்கின்றாள்,

அப்போதுதான் நீலமாலையும், தான் வந்ததும் தன் தலைவி சீதைக்கு வணக்கஞ்சொல்லிப் பேச்சைத் தொடங்க வேண்டு மென்பதையும் நினைக்கின்ருள். உடனே, தொழுது சொல்லு கின்ருள் நீலமாலை,

"பூணியன் மொய்ம்பினன் புனித னெய்தவில்
காணிய வந்தன னென்னக் காவலன்
ஆணையி னடைந்தவி லதனை யாண்டகை
நாணினி தேற்றிஞ னடுங்கிற் றும்பரே"

(பாலகாண்டம்—கார்முகப்படலம்—பாடல்—60)

தலைகால் தெரியாமல் மகிழ்ச்சி வெள்ளத்தில் திளைத்துக் கொண்டிருக்கும்—காவியத்துள் மிகச்சிறு பாத்திரமாகப் படைக்கப்பட்ட நீலமாலையும் சிவபெருமானை நினைக்க வைக் கின்ருள். 'புனிதன் எய்தவில்' என்ற தொடரால் சிவபெரு மான் எய்த வில் என்று குறிப்பிடுகின்ருள். சிவபெருமானைப் 'புனிதன்' பரிசுத்த மூர்த்தியாகிய சிவபெருமான் எனக்குறிப் பிடுதலை நாம் பாராட்டாதிருக்க முடியாது.

இராம காவியத்தில் இராமனைக் காட்டிலும் உயர்ந்த பாத்திரமாகக் கம்பன் படைத்துக் காட்டுவது பரதனைத்தான்.

"தாயுரை கொண்டு தாதை யுதவிய தரணி தன்னை
தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்திற் றேக்கிப்
போயினை யென்ற போது புகழிஞேய் தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியி னம்மா"

(அயோத்தியா காண்டம்—குகப்படலம்—பாடல் 35)

என்று குகன் பரதனைப் பாராட்டுவான். பரதன் வாயிலாகக் கம்பன் சிவபெருமானை நினைப்பிக்கின்ருன். காவியம் முழுவ திலும் பரதனுல் சிவபெருமான் பேசப்படும் இடம் ஒன்றே ஒன்றுதான்.

இராமபிரான் கைகேயியேவக் காடு சென்ருன் என்பதை உணர்ந்த தயரதன் இராமனது பிரிவினைத் தாங்க

வொண்ணுது உயிர் விடுகின்ருன். தனது தந்தை இறந்த செய்தி கேட்ட பரதன் புலம்புகின்ருன். அப்புலம்பலில் இராமனது பெருமையையும் பராக்கிரமத்தையும் சுட்டிக் காட்டி அத்தன்மையனுன இராமபிரானை இவ்வுலகில் விட்டு நீ மேலுலகு செல்ல எவ்வாறு துணிந்தனை எனக் கேட்டுக் கதறுகிருன் பரதன். நமது குலத்தில் தோன்றிய முந்தையோர் வீரத்தையெல்லாம் புதுப்பித்து அவர்களுக்கெல்லாம் வீரத்தால் தலைவனுன இராமபிரானைச் சுட்டிக் காட்டுகின்ருன் பரதன். இராமபிரானது வீரத்தை வெளிப்படுத்தவே ''கண்ணுடை நுதலவன் சிலைவிலிஞேன்மை நூறிய'' என்ற தொடரைக் கையாளுகின்ருன் பரதன். மேருவின் அமிசமான வில்லின் வலிமையை அழித்திட்ட இராமன் என்று குறிப்பிடுகின்ருன். அவ்வில் 'கண்ணுடை நுதலவன்' கண்ணையுடைய நெற்றியைக் கொண்ட சிவபெருமானுடையதல்லவோ எனச் சிறப்பித்துப் பேசுகின்ருன். தந்தை இறந்து கிடக்கின்ற சோகத்திலுங்கூட பரதன் இராமனது வீரத்தை மறவாமல் சுட்டிக் காட்டுகின்ருன். அந்த நேரத்தில் கம்பனும் தன்னுள்ளத்தில் குடி கொண்டுள்ள கண்ணுதற் கடவுளை பரதன் வாயிலாகச் சுட்டிக் காட்டச் செய்கிருன். இதோ அப்புலம்பலாகிய பாடல்:-

''முதலவன் முதலிய முந்தையோர் பழங்
கதையையும் புதுக்கிய தலைவன் கண்ணுடை
நுதலவன் சிலைவிலி ஞேன்மை நூறிய
புதல்வனை எங்ஙனம் பிரிந்து போயினுய்''

(அயோத்தியா காண்டம்-பள்ளியடைப் படலம்-பாடல்-50)

காவியத்தலைவன் ஸ்ரீ இராமபிரான் வாயிலாகச் சிவபெருமானின் சிறப்பினைக் கம்பன் வெளிப்படுத்துமிடங்கள் காவிய முழுவதிலும் பத்தொன்பது இடங்களாகும். பால காண்டம் முழுவதும் தேடிப்பார்த்தால் இராமன்வழி சிவபெருமான் வெளிப்படும் இடம் ஒன்றே ஒன்றுதான். அது தாடகைவதைப் படலத்துள் இடம் பெறுகிறது.

இராமபிரானையும் இலக்குவணனையும் அழைத்துக் கொண்டு விசுவாமித்திரன், தான் மேற்கொண்டயாகத்தை அரக்கர்களின் இடையூறின்றி நடத்தச் செல்லுகின்றான். செல்லும் வழியில் வெப்பம் நிறைந்த பாலை நிலத்தை அடைகின்றார்கள். அப்பாலை அத்துணை வெப்பமாக இருந்த தற்கான காரணம் யாதென விசுவாமித்திரனை இராமபிரான் வினவுகின்றான்.

'முனிவர் பெருமானே! நீர்ச்சுழிகள் நிறைந்த கங்கா நதியையும் அழகிய கொன்றைமாலையையும் அணிந்த சடா முடியையுடைய சிவபெருமானுடைய நெற்றிக்கண் பார்வை படுதலால் இந்நிலம் இவ்வாறு வெந்து போயிற்றோ! அன்றி வேறுகாரணம் யாதாகிலும் உண்டோ!' எனக்கேட்டான்.

அவ்வினவைத் தொடர்ந்து ஒரு நீதியையும் காட்டுகின்றான் இராமன். அஃதாவது, நேர்மையற்ற கொடுங்கோல் மன்னன் ஆளும் நாடும் இப்படித்தான் வெந்தழியும் என்று கோடிட்டுக் காட்டுகின்றான். அவதார புருஷனாகிய இராம பிரான் வாயிலாகவும் கம்பன் சிவபெருமானை – கண்ணுதற் கடவுளை - நெற்றிக்கண்ணின் பெருமையைப் புகழும் முறையில் அமைத்துக் காட்டுகின்ற சிறப்பினை-இதோ இப்பாடலில் காணுங்கள்:-

''சுழிபடு கங்கையந் தொங்கல் மௌலியான்
விழிபட வெந்ததோ வேறுதா னுண்டோ
பழிபடர் மன்னவன் படைத்த நாட்டினாங்கு
அழிவதென் காரண மறிஞ கூறென்றான்''

(பாலகாண்டம்- தாடகை வதைப்படலம்- பாடல்– 20)

இராமபிரான் கங்கையைக் கடந்து பலவனங்களின் வழியாகச் சித்திரகூட மலையை வந்தடைகின்றான். அம்மலையில் காணும் பல்வேறு இயற்கைக் காட்சிகளையும் கண்டு மகிழுகின்றான். தான் பெறும் இன்பத்தினைத் தன்னுடன் வரும் சீதைக்கும் ஊட்ட விரும்பினான். நாட்டை விட்டுக் காட்டிற்கு

— தன்னையே அயோத்தி எனக்கருதி வருகின்ற சீதா பிராட்டிக்கு அவ்வியற்கைக் காட்சிகளையெல்லாம் காட்டி அவளை மகிழச் செய்கின்ருன். அவ்வாறு இராமன் சீதைக்குக் காட்டி வந்த காட்சிகளுள் ஒன்றினைக் காண்போம்.

நீண்டு உயர்ந்தமலை; பலமுடிகளையுடையது. அவற்றிற் கிடையே இளமதி உதயமாகின்ற காட்சி; அம்மலையிலிருந்து வானிறத்தைப் பிரதிபலித்துக் கொண்டு கீழேவிழும் அருவி. இப்படிப்பட்ட அரியதொரு காட்சியைக் கண்ட இராமபிரான் தன் துணைவிக்கு இதனை அறிமுகப்படுத்தி வைக்கின்ருன். எவ்வாறு அறிமுகப்படுத்துகிருன் என்பதில்தான் கம்பனின் உள்ளக்கிடக்கை வெளிப்படுகிறது. நீண்ட உயர்ந்த மலையைச் சிவபெருமானுகக் காட்டுகின்ருன். அம்மலைமீதுள்ள நிறைந்த சிகரங்களை சிவபெருமானுடைய சடாமுடியாகக் காட்டுகின்ருன். அங்குத்தோன்றிய இளநிலவினை சிவபெருமானின் சடாமுடியில் தங்கியுள்ள பிறைச் சந்திரனுகக் காட்டுகின்ருன். மலைவீழருவியைச் சடாமுடியிலிருந்து பிரவாகஞ் செய்யும் கங்கையாகக் காட்டுகின்ருன். அனைத்தையும் ஒன்ருகக் காணும் பொழுது சிவபெருமானே காட்சியளிப்பதாக உணருகிருன் இராமன்.

"நீண்ட மால்வரை மதியுற நெடுமுடி நிவந்த
தூண்டு மாமணிச் சுடர்சடைக் கற்றையிற் ருேன்ற
மாண்ட வானிற வருவியம் மழவிடைப் பாகன்
காண்ட குஞ்சடைக் கங்கையை நிகர்ப்பன காணுய்"

(அயோத்தியா காண்டம்—சித்திரக்கூடப்படலம் – பாடல்—7)

கம்பனுடைய தற்குறிப்பேற்றவணி இராமபிரான் வாயிலாக வெளிப்பட்டுக் கற்போர் உள்ளத்தைக் களிபேருவகையடையச் செய்தலை எவர்தான் மறுப்பர்? சிவபெருமானுடைய நினைவாகவே பிறந்து, வளர்ந்து, வாழ்ந்த நாயன்மார்களில் ஒருவரான சேரமான் பெருமாள் நாயனுர் ஓர் அழகான

காட்சியை நமக்கு அவர்தம் பொன்வண்ணத்தந்தாதியில் காட்டுகின்ருர்.

எரிகின்ற தீயொத் துளசடை
ஈசற்கத் தீக்கிமையோர்
சொரிகின்ற பாற்கடல் போன்றது
சூழ்புனல் அப்புனலிற்
சரிகின்ற திங்களோர் தோணிஒக்
கின்றதத் தோணி உய்ப்பான்
தெரிகின்ற திண்கழை போன்றுள
தால்அத் திறல் அரவே.

—(பொன்வண்ணத்தந்தாதி—பாடல்-67)

ஆரணிய வாசத்தை மேற்கொண்ட இராமபிரானை தண்டகாரணியத்து தவசிரேஷ்டர்கள் எதிர்கொண்டழைத்து இன்முகங்காட்டி உபசரித்தனர். அரக்கர்களால் அம்முனிவர்கள் படும் வேதனைகளையெல்லாம் அப்பிரானிடங்கூறினர். அவைகளை ஊன்றிக்கேட்ட இராமபிரான் அவர்களுக்கு அபயம் கொடுப்பதாக வாக்களிக்கின்ருன். 'அரக்கர்களுக்கு, முருகப்பெருமானும், திருமாலும், சிவபெருமானும் ஆகிய மூவரும் துணையாக நின்ருலும் நான் அரக்கர்களை வேருடன் அழித்து உங்களைக் காப்பேன்' என முனிவர்களுக்கு உறுதி கூறுகிருன் இராமபிரான். அக்கூற்றினூடே உலக மக்களுக்கு ஒரு நீதியையும் புகட்டுகின்ருன். என்னையெனின், அறவழியன்றி மறவழி சென்ருர்க்கு யார் துணை நிற்பினும் நல்வாழ்வில்லை என்பதே அந்நீதி. அதோடு சிவபெருமானைக் குறிப்பிடுவதோடு அமையாமல் இங்கு அவனது குமாரனையும்—முருகப் பெருமானையும் குறிப்பிடுவது மேலும் சைவ சமயப் பற்றினைத் தூண்டுவதாகும். தந்தையறிய அவனது மகனைப் பாராட்டி மகனுக்கு முதலிடங் கொடுத்தால் தந்தை மகிழுந் திறம் கூறவும் வேண்டுமோ? இதோ கம்பன் புனைந்த அக்கவி

"சூர றுத்தவ னுஞ்சுடர் நேமியும்
ஊர றுத்தவொருவனு மோம்பினும்

ஆர றத்தினொ டன்றிநின் றூரவர்
வேர றுப்பென் வெருவன்மி னீறென்றான்''
(ஆரணிய காண்டம்—அகத்தியப் படலம்—பாடல்-22)

வாலி, இராமகாதையில் பெறுமிடம் மிகச்சிறப்பான தொன்று. அவன் இராமபிரானுடன் உரையாடல்களினால் உலக மக்கள் பெறும்பயன் பெரிதாம். வாலி மாவீரன், சிறந்த சிவபக்தன். அவன் சுக்கிரீவனைப் பிறழ உணர்ந்தமையால் இராமபாணத்திற்கு இரையாகிவிடுகின்றான். இராமபிரான் வாலிக்கு வீட்டுலகைத் தந்தான். வாலியின் பிரிவினைத் தாளாத அவனது மனைவி தாரை புலம்புகின்றாள். அவள புலம்பும் சோக உரையில் சிவபெருமானை நினைப்பிக்கின்றான் கம்பன்; தாரை வாயிலாக,

''அணங்கார் பாகனை யாசை தோறு முற்று
உணங்கா ஒண்மலர் கொண்டு எண்பொடும்
இணங்காக் கால மிரண்டொ டொன்றினும்
வணங்கா தித்துணை வைக வல்லையோ''
(கிட்கிந்தா காண்டம்—தாரை புலம்புறு படலம்—பாடல்-7)

''ஐயா நீயெனதாவி யென்றலும் பொய்யோ பொய்யுரை யாத புண்ணியா'' என்று கூறி வேதனைப்படும் தாரை கணவனை இழந்த நிலையிலும் உமாதேவி தன் கணவனுடன் ஒன்றிய — ஒருபாகத்தைப் பெற்றவளாக இருப்பதையும் நினைக்கின்றாள். அந்நினைப்பினை 'அணங்கார் பாகனை' என்ற தொடர் வெளிப்படுத்துகின்றது. கம்பனின் கவிவண்ணமிது.

'மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவள் உள் மெலிவே'

என்ற ஞானசம்பந்தப் பெருமானின் திருமருகல் பதிகத்தையும் நினைவுகூரச் செய்கின்றதன்றோ?

கண்ணுதலான் பெருமை காட்டும் கம்பன் வாழ்க!
கன்னித்தமிழ் வாழ்க!!
சிவம்

உ

## "ஸ்ரீ குமரகுருபரர்"

சைவமும் தமிழும் புரந்திடும் பனசை ஸ்ரீ காசி மடத்தின் தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளின் அருளாணையின் வண்ணம் வெளிவரும் சமய இலக்கியத் திங்களிதழ். தெய்வீக அருட்கவிஞரின் திருநாமம் தாங்கிடும் இவ்விதழ், ஆன்மீக உணர்வுடையார்க்கு விருந்து அளிப்பது; தமிழ் மூதறிஞர் களின் படைப்புகளைத் தாங்கி மிளிர்வது; ஆய்வாளருக்கு அரிய கருத்துக் கருவூலம். தோத்திரம், சாத்திரம், இலக்கியத் திறனாய்வு ஆகிய கூறுகளாலும் நிரம்பிய அரும்படைப்பு இது. இதன் ஆண்டுச் சந்தா ரூ. 7-50 - தான்.

ரூ. 100/ – செலுத்தும் ஆயுட் சந்தாதாரரின் வாழ்வுக் காலம் முடிந்த பின்னும் அவர்தம் வாரிசுதாரர்க்கும் தொடர்ந்து இதழ் அனுப்பப் பெறும் முறைமை இவ்விதழ்க்கே உரிய சிறப்பாகும். ஆயுட் சந்தாவை ஐந்து தவணைகளிலும் செலுத்தலாம். இதழில் விளம்பரம் செய்து பயனடைவோர் பலர்.

ஆன்மீகத் துறை அன்பர்கள் உளங்கனிந்து சந்தா அனுப்பி, இதழின் வளர்ச்சியிலும் சமய இலக்கிய மேம்பாட் டிலும் தங்களின் பங்கை ஏற்றிட கேட்டுக்கொள்ளப்படுகிறது. சந்தாத் தொகைகளை "நிர்வாக ஆசிரியர், ஸ்ரீ குமரகுருபரர், ஸ்ரீ காசி மடம், திருப்பனந்தாள் - 612 504" எனும் முகவரிக் குப் பணவிடை வழியாக அனுப்பி இதழைப்பெறலாம்.

### இலக்கியக் கனிகள் ஏற்றிடுவீர்

ஸ்ரீ காசித் திருமடத்தின் வழி பன்னிரு திருமுறை, மெய் கண்ட சாத்திரங்கள், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய பிரபந்தங்கள், மற்றும் அரிய தோத்திர நூல்கள் வெளியிடப் பெற்று அடக்க விலையில் விற்பனைக்கு உள்ளன. விலை மலிவு, விற்பனையாளர்க்கு 20% கழிவு உண்டு. தேவைக்கு கீழ்க் கண்ட முகவரிக்கு எழுதி விவரங்கள் அறியலாம்.

"மேலாளர், ஸ்ரீ காசிமடம்"
திருப்பனந்தாள் – 612 504

ADVT

உ
சிவமயம்
திருசிற்றம்பலம்

# தத்துவங்களும் தாத்துவிகங்களும்

T. C. S. இராமச்சங்கு பாண்டியன், B.A.
தூத்துக்குடி

தத்துவம் என்பது உண்மையைக் (Truth, Reality) குறிக்கும். அது பற்றியே திருவள்ளுவரும் தத்துவ ஞானம் என்பதை மெய்யுணர்வு எனப் பெயர்த்தார். தத்துவங்களை உள்ளவாறு உணர்ந்தன்றித் தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி என்பன நிகழா.

ஒவ்வொரு சமயத்தாரும் தத்தங் கொள்கைக் கேற்பத் தத்துவங்களைக் கொண்டுள்ளனர். உலகாயதர் பிருதிவி அப்பு தேயு வாயு என்னும் நான்கு தத்துவங்களையே உடன் பட்டுள்ளனர். புத்தர் முதலியார் புத்தி தத்துவம் வரை உடன்பட்டுள்ளனர். சாங்கியர் முதலியோர் 24 தத்துவங்களை உடன்பட்டுள்ளனர். பல சமயத்தார்க்கு 24 தத்துவங்கள் உடன்பாடு என்பது பற்றியே பரிமேலழகர் "சுவையொளி யூறோசை" என்னுங் குறளுரையில், "சாங்கிய நூலுளோதிய வாற்றுணராய்தல்" என்று கூறினர்.

சித்தாந்த சைவத்துள் பிரபஞ்சத்திற்கு முதற் காரணமாய் நித்தமாய்ச் சடமாய் முதல்வனுக்குப் பரிக்கிரக சத்தியாய் முதல்வனின் வியாப்பியமாய் மெய்ப்பொருளாய் அருவாய் உள்ளது மாயை எனப்படும்.

மா என்பது ஒடுங்குதல், யா என்பது வருதல். ஆகலின் எல்லாக் காரியங்களுந் தன்பால் வந்து ஒடுங்குதற்கும் தன்னினின்றுந் தோன்றுதற்குங் காரணமாய் நின்றது மாயை எனப்படும். ஆகலான் ஒன்றற்கொன்று நுண்ணிதிற் செல்லுஞ் சூக்குமங்கட்கு முடிவிடமாய் நின்ற சூக்குமப் பொருள் யாது அதனை மாயை என்றலே பொருந்தும்.

இம்மாயை சுத்தமாயை அசுத்தமாயை என இருவகைப் படும். சுத்தமாயையானது மாமாயை, குடிலை, குண்டலி, விந்து என்றுங் கூறப்படும். அசுத்த மாயையானது அதோ மாயை, மாயை, மோகினி என்றுங் கூறப்படும். சுத்தப் பிர பஞ்சத்திற்குக் காரணம் சுத்த மாயை. அசுத்த பிரபஞ்சத் திற்குக் காரணம் அசுத்த மாயை. துன்பத்தோடு விரவுத லின்றி இன்ப மாத்திரையே பயத்தற்கேதுவாயது சுத்தம். ஏனையது அசுத்தம். மாயை ஒன்றே குன்றிமணி முதலியன போல மலகன்மங்களோடு விரவாத பாகம் சுத்தமென்றும் அவற்றோடு விரவிய பாகம் அசுத்தம் என்றும் கூறப்படும்.

மேலும் அசுத்தமாயை சுத்தாசுத்தம், அசுத்தம் என இருவகைப்படும். கீழுள்ள தத்துவங்களை நோக்கச் சுத்த மாயும் மேலுள்ள சுத்த தத்துவங்களை நோக்க அசுத்தமாயும் முடிதலின் சுத்தாசுத்தம் எனப்பட்டது. எனவே தத்துவங்கள் சுத்தம் மிச்சிரம் அசுத்தம் என மூவகைப்படும் என்பது பெறப் படும். மூன்ருவதாகக் கூறப்பட்ட அசுத்தம் பிரகிருதி என்றும் மான் என்றுங் கூறப்படும்.

இவற்றுள் சுத்தத்துள் ஐந்தும் மிச்சிரத்துள் ஏழும் அசுத்தத்துள் இருபத்து நான்கும் ஆகத்தத்துவங்கள் முப்பத் தாறும். ஐந்தாவன சிவம், சக்தி, சதாசிவம், ஈச்சுரம், சுத்த வித்தை என்பன. பிருகச்சாபால உபநிடதத்துள், ''சிவம் சக்திஞ்ச சாதாக்யமீசம் வித்யாக்யமேவச'' (4-19) என இவை குறிப்பிடப் பெற்றுள்ளன. ஏழாவன அசுத்தமாயை, காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன் என்பன. சுவேதா

சுவதரோப உபநிடதத்துள், "கால: சுவபாவோ நியதிர்யதி ருச்சா பூதாநியோநி: புருஷஇதி சிந்தியம்" (1–2) என இவை குறிப்பிடப் பெற்றுள்ளன.

இவற்றுள் ஐந்து தத்துவங்களும் சிவபெருமானுல் சுத்த மாயையினின்றும் நேரடியாகச் சிருட்டிக்கப்படுகின்றன. எனவே நேரடி சிருட்டி என்று கூறப்படும். இவ்வைந்து தத்துவங்களும் ஒன்றற்கொன்று காரணமாகாது படங் குடிலானுற் போலச் சுத்த மாயையின் விருத்தியாகக் கொள்ளப்படும். தோற்றத்தில் முற்பாடு பிற்பாடு பற்றி ஒன்றினென்று தோன்றியதாகவும் உபசாரமாகக் கூறப்படும்.

மற்ற தத்துவங்களெல்லாம் அனந்தர் சீகண்டருத்திரர் முதலியோரான் காரியப்படுதலின் பரம்பரை சிருட்டி எனப் படும். அசுத்தமாயை முதல் பிரகிருதி வரை அனந்தரால் காரியப்படுவன. குணம் முதல் பிருதிவி வரை சீகண்ட ருத்திரரால் காரியப்படுவன.

இம்முப்பத்தாறு தத்துவங்களுள் புருடன் அல்லாத மற்ற முப்பத்தைந்து தத்துவங்களும் சடமே. புருட தத்துவமாவது கலை முதலிய பஞ்ச கஞ்சுகத்துடன் கூடிப் பொதுமையாற் போக்த்திருத்துவம் எய்தி நின்ற ஆன்மாவே பிரகிருதிமாயைப் போக நுகர்ச்சியின் உன்முகத்திற்கு ஏதுவாகிய அவிச்சை முதலிய பஞ்சக்கிலேச மென்னும் பும்ஸ்துவ மலமுடையனுய் நிற்றல்.

பஞ்சக்கிலேசமாவன அவிச்சை, ஆங்காரம், அவா, ஆசை கோபம் என்னும் ஐந்தாம். அவிச்சையாவது அநித்தத்தை நித்தமென்றும், அசுத்தத்தைச் சுத்தமென்றும், துன்பத்தை இன்பமென்றும் தானல்லாத பொருளைத் தானென்றும் திரியக் காணும் உணர்வு. ஆங்காரமாவது அவிச்சை பற்றி அவற்றை யான் எனது என மதித்தல். அவாவாவது அதுபற்றி எனக்கிது வேண்டுமென்றல். ஆசையாவது அதுபற்றி அப்பொருட்கட் செல்லும் உணர்வு. கோபமாவது அதுபற்றி அதன் மறுதலைக் கட் செல்லும் உணர்வு. பஞ்சக்கிலேசமே பும்ஸ்துவமலம்

என்று கூறப்படும். சகலரே அவிச்சை முதலியன உடையவர். எனவே ஏனைய விஞ்ஞானகலர், பிரளயாகலர் புருடதத்துவ மெனப் பெயர் பெறுமாறில்லை.

ஆன்மா வியாபகமாயினும் புருட தத்துவமெனப் பெயர் பெறுவதற்கு ஏதுவாகிய போத்திருத்துவ நீங்குதல் மூலப் பகுதியின் சுத்திப்பின்னுதல் பற்றி மூலப் பகுதிக்கும் அராக தத்துவத்துக்கும் இடையே வைத்தெண்ணுதலும், புருடனு தற்கு ஏதுவாய் விசேடித்து நிற்கும் தத்துவங்கள் சடமாதல் பற்றி அடுத்ததன் தன்மையாய் நிற்கும் புருட தத்துவத்தை யும் சடமென்று உபசரித்துக் கூறுதலும் பொருந்தும். இவ் வாறு உண்மையாற் சித்தும் உபசாரத்தாற் சடமுமாம் என்பது பற்றியே ''சித்தசித்தான்மா வொன்று'' (சித்தியார் சூ2: செய். 69) என்று அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் கூறி னார்கள்.

மாயா காரியங்கள் சொற்பிரபஞ்சம் பொருட்பிரபஞ்சம் என இருவகைப்படும். சொற்பிரபஞ்சம் வன்னம் பதம் மந்திரம் என மூவகைப்படும். பொருட் பிரபஞ்சம் புவனம் தத்துவம் கலை என மூவகைப்படும். இவை ஆறும் ஒவ் வொன்ருகக்கடந்து சென்று பேரின்பத்தை அடையும் வழி யாய் அமைதலின் அத்துவா எனப்பட்டன. வன்னம் பதத் துள்ளும் பதம் மந்திரத்துள்ளும் அடங்கும். புவனம் தத்துவத் துள்ளும் தத்துவம் கலையுள்ளும் அடங்கும்.

தத்துவங்களைச் சிவதத்துவம் முதல் பிருதிவி ஈருகக் கூறு வது தோற்ற முறை. பிருதிவி முதல் சிவம் ஈருகக் கூறுவது ஒடுக்க முறை. இவற்றைத் தோற்ற முறையிற்காணலாம்.

## I. சுத்தமாயை:

1. சிவதத்துவம்: ஞான சக்தியான் பொதுமையான் காரியப்படுத்தப்பட்ட சுத்தமாயையின் முதலாம் விருத்தி. ஞான மாத்திரையாய் நின்ற சிவனுல் அதிட்டிக்கப்படுவது.

சூக்குமைவாக்கிற்கு இடம். இலயம், நிட்களம், சக்திமான், நாதம் என்றும் பெயர் பெறும் ஞானசக்திக்கும், சூக்குமை ரூபமாக நிற்குஞ் சிவாகமத்திற்கும், முத்தராய்ச் சூக்கும லயவாசனை மாத்திரமுடைய ஆன்மாக்களுக்கும் ஆண்டுள்ள புவனபோகங்களுக்கும் இடமாம்.

2. சத்திதத்துவம்: கிரியா சக்தியான் பொதுமையான் காரியப்படுத்தல்பட்ட சுத்தமாயையின் இரண்டாம் விருத்தி. சக்தி என்றேதப்படும் சிவனால் அதிட்டிக்கப்படுவது. பைசந்தி வாக்கிற்கு இடம். தூலலயம், தூலநிட்களம், விந்து என்றும் பெயர் பெறும். கிரியா சத்திக்கும், பைசந்தி ரூபமாய் நின்ற சிவாகமங்கட்கும், தூல லய வாசனை மாத்திரமுடைய முத்தர்க்கும் ஆண்டுள்ள புவன போகங்கட்கும் இடம்.

3. சதாசிவதத்துவம்: ஞானசக்தி கிரியாசக்திகளான் சிறப்பு வகையால் காரியப்படுத்தப்பட்ட சுத்த மாயையின் மூன்றும் விருத்தி'. சதாசிவமெனப்பட்ட சிவனால் அதிட்டிக்கப் படுவது. மத்திமைவாக்கிற்கு இடம். உத்தியுத்தம், போகம், சகளநிட்களம் என்றும் பெயர் பெறும். சதாசிவமூர்த்திக்கும் மத்திமைவாக்கு ரூபமாய் நின்ற சிவாகமத்திற்கும், அவை இருபத்தெட்டாகப் பாகுபடுதற்குக் காரணமான பிரணவர் முதலியோர்க்கும் அணுசதாசிவர் முதலியோர்க்கும் அவர் தநுகரண புவன போகங்கட்கும் இடமாம்.

(4) ஈசுர தத்துவம்: கிரியா சக்தியை மிக்சுச் செலுத்திச் சூக்குமமாய்க் காரியப்படுத்தப்பட்ட சுத்த மாயையின் நாலாம் விருத்தி. ஈசுரனாய் நின்ற சிவனால் அதிட்டிக்கப்படுவது. சூக்கும வைகரிக்கு இடம், சூக்கும அதிகாரம், சூக்குமப் பிர விருத்தி, சூக்கும சகளம் என்றும் பெயர் பெறும். ஈசுவரனுக்கும் சூக்குமவைகரி ரூபமாய் நின்ற சிவாகமங்கட்கும் அசுத்த மாயையைக் காரியப்படுத்தும் அநந்த தேவர் முதலிய வித்தியேசுரர் எண்மருக்கும், அப்பதம் பெற்ற உருத்திரர் கட்கும் அவர் தநுகரண புவன போகங்கட்கும் இடம்,

(5) சுத்த வித்தியா தத்துவம்: ஞானசத்தியை மிக்குச் செலுத்தித் தூலமாய்க் காரியப்படுத்தப்பட்ட சுத்த மாயையின் ஐந்தாம் விருத்தி. வித்தைக்கேதுவாகிய ஈசுரனுய் நின்ற சிவனுல் அதிட்டிக்கப்படுவது. தூலவைகரிக்கு இடம். தூல ஈசுரம், தூல அதிகாரம், தூலப்பிரவிருத்தி, தூல சகளம் என்னும் பெயர் பெறும். ஈசுரனுக்கும், தூலவைகரி ரூபமாய் நின்ற சிவாகமங்கட்கும், ஏழு கோடி மந்திரங்கட்கும், நந்தி முதலிய கணங்கட்கும், வாமை முதலிய ஒன்பது சத்திகட்கும், முத்தி பெற்று மலவாசனை மாத்திரமுடையராய்க் கீழுள்ள உருத்திரன் மால் அயன் இந்திரன் முதலியோரைத் தொழிற் படுத்துவோராகிய உருத்திரன் மால் அயன் இந்திரன் முதலியோர்க்கும் அவர் தநுகரணுதிகட்கும் இடம்.

## II மிச்சிர மாயை:

(6) அசுத்த மாயா தத்துவம்: வினையிற்கட்டுண்ட ஆன்மாக்களைப் பொது வகையான் மயக்குவது. மோகினி என்றும் பெயர் பெறும்.

(7) கால தத்துவம்: போக நுகர்ச்சிக்கட் சென்ற ஆன்மாக்கட்குக் கணம் இலவம் துடி முதலியவற்ருற் பலவகைப் பட்டுப் போகத்தை வரையறைப் படுத்துவது.

(8) நியதி தத்துவம்: அவரவரான் ஈட்டப்படும் வினையின் பயனை அவரவரே நுகருமாறு அரசாணை போல் நியமித்து நிறுத்துவது.

(9) கலை: மூல மலத்தின் மறைப்புண்டு சூனியம் போற்கிடந்த ஆன்மாக்கட்குப் போக நுகர்ச்சியின் பொருட்டு மலசத்தியிற் சிறிதே நீக்கிக் கிரியா சத்தியை விளக்குவது. காலம் நியதி கலை என்னும் மூன்றும் அசுத்த மாயா தத்துவத் தினின்றும் முறையே தோன்றுவன.

(10) வித்தை: கலையினின்றுந்தோன்றுவது. ஆன்மாக்களின் ஞான சத்தியை விளக்கி அதனுல் அதிட்டிக்கப்பட்டுப்

புறத்தின்கண் விடயமாகிய குட முதலியவற்றைச் சவிகற்பக் காட்சியான் நிச்சயிக்கும் புத்தி தத்துவமாகிய அகத்தின்கண் விடயத்தையறியும் தன்வேதனைக் காட்சிக்கும் புத்தி தத்துவத் தோடு கூடாமையாற் புறப்பொருளை விகற்பமின்றியறிவ தாகிய நிருவிகற்பக் காட்சியறிவிற்கும் மனம் புத்தி அகங் காரங்களின் தொழிற்பாடாகிய சங்கற்பம் நிச்சயம் அபி மானம் என்பவற்றை அறியும் அறிவிற்குங் கருவியாய் நிற்பது.

(11) அராகம்: வித்தையினின்றுந் தோன்றுவது. ஆன் மாக்களின் இச்சா சத்தியை விளக்கிப் புத்தி குணங்களின் அவைராக்கியமெனப்படும் அராக நிகழ்ச்சிக்கு ஏதுவாய் நிற்பது.

(12) புருடன்: காலம் முதல் அராகம் ஈறாக ஐந்தையும் பொருந்திப் போகத்துக்கு உன்முகப்பட்டு நிற்கும் ஆன்மா.

## III பிரகிருதி மாயை:

(13) மூலப்பகுதி: கலையினின்றுந் தோன்றுவது. இது பிரகிருதி, பிரதானம், மான், அவ்வியத்தம் என்றும் பெயர் பெறும். இது அவிச்சை முதலிய பஞ்சக்கிலேச விளைவிற்குக் காரணம். முக்குணங்களும் விளங்குதலின்றித் தம்முட் சம மாய் நின்ற நிலை. இதனின்றும் குணதத்துவம் தோன்றும். மூலப்பகுதியின் விருத்தியாகிய முக்குணங்களும் தம்முட் சம மாய் நின்ற அவத்தையே குணதத்துவமாகும். குணதத்துவம் மற்றத் தத்துவங்கள் போலப் பரிணமமன்மையான் மூலப் பகுதியோடு ஒன்றாக வைத்துக் கூறப்படும். இவ்வாறு அவ் வியத்தமாய் நின்ற மூலப்பகுதி வியத்தமாதற் பொருட்டு அசுத்தமாயா தத்துவத்திலுள்ள சீகண்டருத்திராற் செயற் படுவது.

(14) புத்தி: குண தத்துவத்தினின்றும் தோற்றுவிக் கப்படுவது. சாத்துவிகத்தான் மிக்கும் ஏனையிரண்டு குணங்

களான் குறைந்தும் பரிணமித்த நிலை. வித்தையிற் பொதுமையான் விளங்கிய ஞான சத்தியை விடயந்தோறுஞ் சிறப்புவகையான் விளக்கிப் பெயர் முதலியவற்ருன் நிச்சயிப்பிக்கும் கருவியாம். அங்ஙனம் நிச்சயித்த பின்னர் அவ்வவ்விடய வடிவிற்ருய்ப் பரிணமித்துத் தோன்றும் ஞானமாய் நிற்கும். அதனுல் ஆன்மாவிற்குப் புலனுயடுத்த போக்கியமாகும். எனவே புருடனுற் செய்யப்படும் இருவினைப் பயனுகிய புண்ணியபாவங்கட்குச் சிறப்புவகையாற் பற்றுக்கோடாகும்.

(15) ஆங்காரம்: புத்தியினின்றும் இராசதம் மிக்கும் ஏனையிரண்டுகுணமுங் குறைந்து தோன்றுவது. இதன் தொழில் இஃதின்னதென யான் நிச்சயிப்பேன் என ஒருப்பட்டெழுதல். புத்தியின் தொழிற்பாடாகிய துணிவு விடயத்தின் கண்ணதாய்ப் பொருள்தோறும் வேறு வேருய் இஃதென்னும் வடிவிற்ருய் நிற்பது. ஆங்காரத்தின் தொழிற்பாடு புருடன் கண்ணதாய் யானென்னும் வடிவிற்ருய் நிற்பது. எனவே இரண்டிற்கும் வேற்றுமை உணரப்படும்.

இவ்வாங்காரம் தைசதவாங்காரம், வைகரியாங்காரம், பூதாதியாங்காரம் என்றும் மூவகைப்படும். சாத்துவிகம் மிக்கு ஏனையிரண்டுங்குறைந்த கூறு தைசதம் என்றும் இராசதம் மிக்கு ஏனையிரண்டுங்குறைந்த கூறு வைகாரிகம் என்றும் தாமதம் மிக்கு ஏனையிரண்டுங் குறைந்த கூறு பூதாதிகம் என்றும் கூறப்படும். இவற்றுள் தைசதவாங்காரத்தினின்றும் மனமும் ஞானேந்திரியம் ஐந்தும் தோன்றும். வைகரியினின்றும் கன்மேந்திரியம் ஐந்தும் தோன்றும்.

(16) மனம்: சாத்துவிக ஆங்காரத்தினின்றுந் தோன்றி வாதனை பற்றி நிகழும் சங்கற்ப விகற்பமாகிய தொழிலை உடையது. புறவிந்திரியங்களான் அறிந்த விடயத்தை இடையே நின்று பற்றி வாங்கிப் புத்தியின் எதிர் விம்பமாய்த் தோன்றுமாறு கொண்டுய்க்கும் அகவிந்திரியம். மனத்தின் பின்னர்ச் சாத்துவிக ஆங்காரத்தினின்றும் முறையானே ஞானேந்திரியங்களான செவி (சுரோத்திரம்), தோல்

(துவக்கு), கண் எனப்படும் நோக்கு (சட்சு), நாக்கு (சிங்நவை), மூக்கு (ஆக்கிராணம்) என்பனவாகிய ஐந்தும் தோன்றும். செவி முதலிய இடங்களின் பெயர் ஆகுபெயரான் அவ்வவ் இடங்களை அதிட்டித்து நிற்கும் இந்திரியங்கட்காயின. இந்திரியம், பொறி, வாயில் என்பன ஒரு பொருட்கிளவி. இவை ஐந்தும் ஆன்மாவின் ஞானசத்தியான் அதிட்டிக்கப்பட்டுப் பொருள்களை விசேடண விசேடிய இயல்பு பற்றி அறியுமாறின்றி நிருவிகற்பமாயறியுங்கருவியாகும்.

(17) செவி: ஆகாயம் இடமாகச் சத்தம் அறிதல்.
(18) தோல்: வாயு இடமாக பரிசமறிதல்.
(19) கண்: தேயு இடமாக உருவமறிதல்.
(20) நாக்கு: அப்பு இடமாக இரசமறிதல்.
(21) மூக்கு: பிருதிவி இடமாகக் கந்தமறிதல்.

இராசத ஆங்காரத்தினின்றும் முறையே வாக்கு (வாய்), கால் (பாதம்), கை (பாணி), மலசலவாயில் (பாயுரு), குறி (உபத்தம்) என்னும் ஐந்து கன்மேந்திரியங்களும் தோன்றும். ஆன்மாவின் கிரியா சக்தியால் அதிட்டிக்கப்பட்டுத் தொழிற்பாடு நிகழும். ஈண்டும் உறுப்பின் பெயர் ஆகுபெயரான் அவ்வவற்றை அதிட்டித்து நிற்கும் இந்திரியங்கட்காயின.

(22) வாய்: இதன் தொழில் பேசல் (வசனம்)
(23) கால்: தொழில் புடைபெயர்ச்சி (கமனம்)
(24) கை: தொழில் இடுதலேற்றல் (தானம்)
(25) பாயுரு: தொழில் வெளியேற்றல் (விசர்க்கம்)
(26) உபத்தம்: தொழில் ஆனந்தம்.

ஞானேந்திரியங்கள் ஆன்மாவின் ஞானசத்தி மாத்திரையே விளக்கி நிற்பன. ஆகலின் கிரியாசத்தியை விளக்குதற்குக் கன்மேந்திரியம் ஐந்தும் வேண்டப்படும். ஞான்சக்தியுங் கிரியாசக்தியும் இயற்கையால் தம்முள் வேறுபாடுடையன வல்ல. ஆயினுஞ் செயற்கையான் வேறுபாடுடைமையின் கருவிகளும் வேறு வேறு வேண்டப்பட்டன. ஆன்மாவின்

ஞானசத்தி ஒன்ருயினும் அறியப்படுஞ்சத்தம் முதலிய விடயங்கள் ஐவேறு வகைப்படுதல் பற்றி அறிகருவி ஐந்தாயினற் போலக் கிரியாசக்தி ஒன்ருயினும் செய்யப்படும் தொழில் வசனம் கமனம் தானம் விசர்க்கம் ஆனந்தமென்று ஐவேறு வகைப்படுதல் பற்றித் தொழிற் கருவியும் ஐந்தாயின.

தாமத ஆங்காரத்தினின்றும் தன்மாத்திரைகளாகிய சத்தம் பரிசம் உருவம் இரதம் கந்தம் என்னும் ஐந்தும் தோன்றும். இவை ஐந்தும் ஞானேந்திரியம் கன்மேந்திரியம் என்னும் இருவகை இந்திரியங்கட்கும் முறையே இடமாகித் தேருர்வானுக்குத் தேர் போல அவை அறிதலுஞ் செய்தலு மாகிய தத்தந் தொழிற் பாட்டினைச் செய்தற்கண் மதுகையை விளைத்து நிற்றன் மாத்திரைக்கே கருவியாய் நிற்பன. இவை ஐந்தும் ஆகாயம் முதலிய பெரும் பூதம் ஐந்திற்கும் முதற் காரணமாகும். எனவே தன் மாத்திரைகட்கும் பூதங்கட்குந் தம்முள் வேற்றுமை முளையும் மரமும் போலச் சூக்குமமாய் நிற்றலுந் தூலமாய் நிற்றலு மாத்திரையேயன்றிப் பிறிதில்லை.

(27) சத்தம் — வல்லோசை மெல்லோசை முதலிய சிறப்பு வகை ஓசைகளை எல்லாம் உள்ளடக்கிப் பொதுமை யான் ஓசை மாத்திரையே நிற்பது.

(28) பரிசம்— அவ்வோசையோடுகூடத்தட்பம் வெப்பம் முதலிய சிறப்புவகைப் பரிசங்களை எல்லாம் உள்ளடக்கிப் பொதுமையான் பரிசமாத்திரையாய்ச் சூக்குமமாய் நிற்பது.

(29) உருவம் — அவ்விரண்டனேடுங்கூட வெண்மை செம்மை முதலிய சிறப்பு வகை உருவங்களை எல்லாம் உள்ளடக்கிப் பொதுமையான் உருவ மாத்திரையாய்ச் சூக்கும மாய் நிற்பது.

(30) இரதம் — அம்மூன்றினேடுங்கூடத் தித்திப்புப் புளிப்பு முதலிய சிறப்புவகைச் சுவைகளை எல்லாம் உள்ளடக்கி பொதுமையான் இரத மாத்திரையாய்ச் சூக்குமமாய் நிற்பது.

(31) கந்தம் — இந்நான்கனோடுங்கூட நறுநாற்றந் தீ நாற்றம் என்னும் இரு பகுதிச் சிறப்புவகைக் கந்தங்களை எல்லாம் உள்ளடக்கிப் பொதுமையான் கந்த மாத்திரையாய்ச் சூக்குமமாய் நிற்பது.

இவற்றினின்றும் முறையே ஆகாயம் முதலிய பெரும் பூதங்கள் ஐந்தும் தோன்றும்.

32. ஆகாயம்:- சத்த தன்மாத்திரையினின்றுந் தூலமாய்த் தோன்றிப் பலவேறு வகைப்பட்ட சத்தமுடைத்தாய்ப் பிராணிகள் போக்கு வரவு முதலிய தொழில் செய்தற்கு இடங் கொடுத்து நிற்கும். எல்லா நாடிகளிலும் ஆங்காரத்தின் விருத்திக்கு இடமாய் நிற்கும்.

33. வாயு:- பரிச தன்மாத்திரையினின்றுந் தூலமாய்த் தோன்றிச் சத்தம் பரிசம் என்னும் இரண்டு குணமுடைத்தாய்ச் சலித்துத் திரட்டுதல் என்னுந் தொழிற்பாட்டதாய், உடம்பினுள்ளும் பிராணன் அபானன் முதலிய பத்துவகைப் பட்டு இயங்கி எழுதல் இருத்தல் முதலிய தொழிற்பாட்டிற்கு ஏதுவாய் எல்லா உயிர்கட்கும் உபகாரமாய் உள்ளது.

34. தேயு:- உருவ தன்மாத்திரையினின்றுந் தூலமாய்த் தோன்றிச் சத்தம் பரிசம் உருவம் என்னும் மூன்று குணமுடையதாய்ப் பாகஞ்செய்தல் முதலிய தொழிற்பாட்டதாய் உலகத்திற் காருகபத்தியம். ஆகவனீயம், தென்றிசையங்கி என்னும் வைதிகஅங்கியும், இவற்றின் வேறுகிய சைவ அங்கியுமாய் நின்று வினைகட்கு உபகாரமாயும் அகத்தினுள் விந்து அங்கியுமாய் நின்று உண்டவற்றை எல்லாம் பாகஞ் செய்து உயிர்கட்குப் பெரிதும் உபகாரமாய் இங்ஙனம் பலவேறு வகைப்படும்.

35. அப்பு:- இரத தன்மாத்திரையினின்றுந் தூலமாய்த் தோன்றிச் சத்தம் பரிசம் உருவம் இரதம் என்னும் நான்கு குணமுடைத்தாய் நெகிழ்வித்துப் பதஞ் செய்தலாகியு

தொழிற்பாட்டதாய் உயிர்கள் எல்லாந் தன்னுற் சீவித்தற் கேதுவாய் நிற்கும்.

36. பிருதிவி: - கந்த தன்மாத்திரையினின்றுந் தூல மாய்த் தோன்றிச் சத்தம் பரிசம் உருவம் இரதம் கந்தம் என்னும் ஐந்து குணமுடைத்தாய் உரத்துத் தரித்தலாகிய தொழிற்பாட்டதாய் நிற்கும்.

ஆகத் தத்துவங்கள் முப்பத்தாருகும். தத்துவங்களில் தோன்றிய புறநிலைக் கருவிகளைத் தாத்துவிகம் என்பர். அவை வருமாறு.

(1) பிருதிவியின் கூறு:- மயிர், எலும்பு, தோல், நரம்பு, தசை (5)

(2) அப்புவின் கூறு:- ஒடு நீர், உதிரம், சுக்கிலம், மூளை, மச்சை (5)

(3) தேயுவின் கூறு:- ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பு (5)

(4) வாயுவின் கூறு:- ஓடல், இருத்தல், கிடத்தல் நடத்தல் நிற்றல் (5)

(5) ஆகாயத்தின் கூறு:- காமம், குரோதம், லோபம் மோகம், மதம் (5)

(6) வாக்காதி கன்மேந்திரியங்களில் தோன்றும் வசனம், கமனம், தானம் விசர்க்கம், ஆனந்தம் (5)

(7) வாயுவில் தோன்றுவதாகிய தசவாயுக்கள்: பிராணன், அபானன் உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன் தேவதத்தன், தனஞ்சயன் (10)

(9) பிருதிவியில் தோன்றுவதாகிய தசநாடி—இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம்புடை, புருடன், குகு, சங்கிணி (10)

(10) ஆசயம்: மூத்திராசயம், மலாசயம், ஆமாசயம், பக்கு வாசயம், கருப்பாசயம் (5)

(11) அசுத்தமாயா விரிபுவனங்களாகிய சத்த பரிசரூப ரச கந்தம் (5)

ஆகத்தாத்துவிகங்கள் 60

எனவே தத்துவ தாத்துவிகங்கள் 96

முன் சொல்லிய சத்தாதி தன்மாத்திரை தத்துவங்கள். பின்னர்க் கூறப்பட்டன விடயமாகின்ற புலன்கள். முக்குணம் அவ்வியத்தித்திலும் மூவகை ஆங்காரங்களும் ஆங்காரத்திலும் அடங்கி ஆன்ம தத்துவத்துள் அடங்கும். வாக்கு ஐந்தும் விந்துவில் அடங்கும். இவை பத்தும் புறநிலைக் கருவிகள் அல்ல.

இனிக்கோசம் (5), ஏடணை (3), வியாதி (3), மண்டலம் (3), ஆதாரம் (6), கிலேசம் (5), ஆக இருபத்தைந்தையுங் கூட்ட 121 என்றலும் ஆகும். இவை மேலும் விரியும்.

மேலே கூறப்பட்ட தத்துவங்கள் முப்பத்தாறும் கலையுள் அடங்கும். கலைகள் நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என ஐந்தாகும். நிவிர்த்தி கலையில் பிருதிவி என்ற ஒரு தத்துவம் மட்டுமே அடங்கும். பிரதிட்டா கலையில் ஏனைய இருபத்து மூன்று தத்துவங்கள் அடங்கும். வித்யா கலையில் புருடன் முதல் அசுத்த மாயை இறுதியாகிய ஏழு தத்துவங்களும் அடங்கும். சாந்தி கலையில் சுத்தவித்தை, ஈச்சுரம், சதாசிவம் என்னும் மூன்று தத்துவங்களும் அடங்கும். சாந்தியதீத கலையில் சத்தி, சிவம் என்ற இரு தத்துவங்களும் அடங்கும். தத்துவங்களுள் புவனங்கள் விளங்கனி வடிவாய் வயங்கும்.

இத்தத்துவங்களின் அளவு யோசனை என்ற கணக்கில் கூறப்படும். சாளரத்தில் தோன்றும் ஞாயிற்றின் கதிரின் அதி நுட்பமாய்த் தோன்றும் நுண்ணிய துகள் அணு எனப்படும்.

| | | |
|---|---|---|
| 8 | அணு | — திரசரேணு |
| 8 | திரசரேணு | — இலீக்கை |
| 8 | இலீக்கை | — யூகை |
| 8 | யூகை | — இயவை நெல்லு |
| 8 | இயவை நெல்லு | — அங்குலம் |
| 24 | அங்குலம் | — முழம் |
| 4 | முழம் | — வில்லு |
| 2 | வில்லு | — தண்டம் (8 முழம்) |
| 2000 | தண்டம் | — குரோசம் |
| 4 | குரோசம் | — யோசனை (64000 முழம்) |

மேற்கண்ட கணக்கில் ஒரு யோசனை என்பது 18. 2160 மைல்கள் அல்லது 29. 09 கிலோ மீட்டர் ஆகும்.

பிருதிவி தத்துவம் நூறு கோடி யோசனை ஆழ அகல நீளங்களையுடையது. அப்பு முதல் பிரகிருதி வரையுள்ள இருபத்துமூன்று தத்துவங்களுள் ஆங்காரம் என்பது தன் மாத்திரை ஐந்தும், இந்திரியம் பத்தும் மனம் ஒன்றும் ஆகத் தன் காரியமாகிய பதினாறினையும் அடக்கி நிற்கும். எனவே அவை அப்பு, வாயு, தேயு, ஆகாயம், ஆங்காரம், புத்தி, பிரகிருதி என ஏழுவகையாகப் பிரிக்கப்படும். இவை ஏழும் கீழ்க் கீழ்த் தத்துவங்களை நோக்க மேல் மேல் தத்துவங்களின் அளவு பத்துப் பத்து மடங்கு அதிகமாகும். வித்தியா கலையி லுள்ள ஏழு தத்துவங்களும் கீழ்க் கீழ்த் தத்துவங்களை நோக்கி மேல் மேல் தத்துவங்கள் நூறு மடங்கு அதிகம். சாந்தி கலை யிலுள்ள மூன்று தத்துவங்களும் கீழ்க்கீழ்த் தத்துவங்களை நோக்கி மேல் மேல் ஆயிரமடங்கு அதிகம். சாந்தியதீத கலை யிலுள்ள இரண்டு தத்துவங்களும் கீழ்க்கீழ்த் தத்துவங்களை நோக்கி நூறாயிர மடங்கு அதிகம். எனவே அது பற்றிய எண் முறை பின்வருமாறு.

| விபரம் | எண்வரிசை | பெயர் |
|---|---|---|
| 1 × 10 | 2 | பத்து |
| 10 × 10 | 3 | நூறு |
| நூறு × 10 | 4 | ஆயிரம் |
| ஆயிரம் × 10 | 5 | பத்தாயிரம் |
| பத்தாயிரம் × 10 | 6 | நூருயிரம் (இலக்கம், நியுதம்) |
| இலக்கம் × 10 | 7 | பத்திலக்கம் |
| பத்திலக்கம் × 10 | 8 | கோடி |
| கோடி × 10 | 9 | அற்புதம் |
| அற்புதம் × 10 | 10 | பதுமம் (நூறுகோடி) |
| பதுமம் × 10 | 11 | கருவம் |
| கருவம் × 10 | 12 | நிகருவம் |
| நிகருவம் × 10 | 13 | பிருந்தம் |
| பிருந்தம் × 10 | 14 | மாபதுமம் |
| மாபதுமம் × 10 | 15 | சங்கம் |
| சங்கம் × 10 | 16 | மாசங்கம் |
| மாசங்கம் × 10 | 17 | சமுத்திரம் |
| சமுத்திரம் × 10 | 18 | மாசமுத்திரம் |
| மாசமுத்திரம் × 10 | 19 | பரார்த்தம் |

இத்தத்துவங்களின் சங்கார கால நியமமாவது பிரம்ப் பகலின் முடிவிலே நிவிர்த்திகலா சங்காரமும், பிரம்ம ஆயுள் முடிவிலே பிரதிட்டா கலா சங்காரமும், உருத்திரனின் ஆயுள் முடிவிலே வித்தியா கலாசங்காரமும் நிகழும். கால அளவு பின்வருமாறு.

| | |
|---|---|
| 15 கண்ணிமைப் பொழுது | காட்டை |
| 30 காட்டை | கலை |
| 30 கலை | முகூர்த்தம் |
| 30 முகூர்த்தம் | நாள் |
| 15 நாள் | பக்கம் |
| 2 பக்கம் | மாதம் |
| 2 மாதம் | இருது |
| 3 இருது | அயனம் |
| 2 அயனம் | வருடம் (தேவர்க்கு ஒரு நாள்) |
| 4,32,000 வருடம் | கலியுகம் |
| 8,64,000 ,, | துவாப்ரயுகம் |
| 12,96,000 ,, | திரேதாயுகம் |
| 17,28,000 ,, | கிருத யுகம் |
| 43,20,000 ,, | மகாயுகம், 4யுகம், தேவயுகம் (12000 தேவ வருடம்) |
| 30,67,20,000 ,, | 71 மகாயுகம், மனுவின்காலம், (மன்வந்தரம் 8,52,000 தேவ வருடம்) ஒரு இந்திரன் ஆயுள் |
| 4,29,40,80,000 ,, | 994 மகாயுகம், 14 மனுக்கள், 14 இந்திரர்கள் |
| 2,59,20,000 ,, | 6 மகாயுகம் (இரண்டு சந்திகள்) |
| 4,32,00,00,000 ,, | 1000 மகாயுகம் 1 கற்பம், பிரம்மாவின் பகல் |
| 8,64,00,00,000 ,, | 2 கற்பம், பிரம்ம நாள் |
| 360 பிரம்ம நாள் | பிரம்ம வருடம் |
| 100 பிரம வருடம் | பிரம்ம ஆயுள் - விண்டு பகல் |
| 200 ,, ,, | விண்டுவிற்கு ஒரு நாள் |
| 360 விண்டு நாள் | விண்டு வருடம் |
| 100 விண்டு வருடம் | விண்டு ஆயுள், உருத்திரன் பகல் |

| | |
|---|---|
| 200 விண்டு வருடம் | உருத்திர நாள் |
| 360 உருத்திர நாள் | உருத்திர வருடம் |
| பரார்த்த உருத்திர வருடம் | உருத்திரன் ஆயுள், ஈசுரன் பகல் |
| 2 ,, ,, | ஈசுரன் நாள் |
| 360 ஈசுர நாள் | ஈசுர வருடம் |
| பரார்த்த ஈசுர வருடம் | ஈசுரன் ஆயுள்– சதாசிவன் பகல் |
| 2 ,, ,, | சதாசிவ நாள் |

இதற்கு மேல் கற்பனைக்கு எட்டாத காலம். தற்காலம் புனருற்பவத்தில் சுவேதவராக கற்பத்தில் 7 வது மனுவாகிய வைவசுத மன்வந்தரத்தில் 28 வது மகாயுகத்தில் 4 வது பாத மாகிய கலியுகம் நடக்கின்றது.

சிவம்.

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

# அரசு வீற்றிருந்த ஆதியங்கடவுள்

வித்துவான் பொன். முருகையன், பி. லிட்.
திருப்பனந்தாள்.

எடுப்பு: — "உளங்கனிந்த போதெல்லாம் உவந்து உவந்து பாடுமே" என்பது அருளாளர் வாக்கு. "உள்ளத் துள்ளது கவிதை" என்பர் கவிமணி. கவிதை என்பது "உள் ளத்து எழும் உணர்ச்சிப் பெருக்கு" ஆகும் என்பது மேலை நாட்டு அறிஞர் கருத்து. (Spontaneous overflow of thoughts). இத்தகு தன்மைகள் மிக்குடைய கவிதைகளைப் படைத்தளித்துப் புகழ் பெற்ற கவிஞர்களுள் சீரும் சிறப்பும் பெற்றுத் தன்னிகற்றவராய் விளங்கியவர் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள். அவர் பிரம்மனின் படைப்பைவிட, கவிஞரின் கவிகள் மாயாத புகழுடையன என்று நீதிநெறி விளக்கத்தில் கூறுவார்.

"கலைமகள் வாழ்க்கை முகத்தது எனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயாப் புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு".

சிந்தைக்கினியதாய், செவிக்கினியதாய்ப் பற்பல நயம் மிக்க பாடல்கள் செறிந்த பல சிற்றிலக்கியங்களைப் படைத் தளித்துள்ள சுவாமிகளின் கவிக்கொடைகளுள் 'மதுரைக்கலம்

பகம்' என்னும் பிரபந்தம் பெருஞ்சிறப்புடையது. சொல், பொருள், தொடை முதலிய நயங்கள் செறிந்தது. அதில் ஊடு பொருளாக எல்லாவிடத்தும் ஓங்கி நிற்பது சிவபரத் துவமே. அதனையே எங்கெங்கும் நிலை நாட்டுகின்றார் கவிஞர்.

பகுப்பு: — இறைவனின் தனிப்பெருங்கருணைத் திறமே சிற்றிலக்கியம் முழுவதும் செறிந்து நின்றாலும் அதில் அமைந் துள்ள பொருட்சிறப்பை ஆலவாய்ப் பெருமான் சுந்தர மாற னாகிய சிறப்பு, அவன் தன் திருவிளையாடற்சிறப்பு, புராணச் சிறப்புடைய அருட்செயல்கள், சைவ அருளாளர்கள் பற்றிய குறிப்புகள், அவர்தம் அற்புதச் செயல்கள், மற்றும் சிற்றிலக் யச்சிறப்புகள் ஆகிய தலைப்புகளில் பகுத்துக் காண்பது பொருத்தமுடையது ஆகும்.

அரசு விற்றிருந்த ஆதியங்கடவுள்: — ஆலவாய்ப் பெரு மான் தடாதகாதேவி என்னும் மலயத்துவசன் பெற்ற பெரு வாழ்வை மணந்து அரசு வீற்றிருந்த சிறப்பைப் பலவிடங்களி லும் போற்றிப் பரவுவார் கவிஞர். அவன், பெண்ணாகிய தடாதகா தேவியாரளித்த மதுரைநகரப் பாண்டியப் பேரரசை செலுத்திய மாண்பினை,

விண்ணரசும் பிறவரசும் சிலரெய்த விடுத்தொரு நீ
பெண்ணரசு தரக்கொண்ட பேரரசு செலுத்தினையே (1)

என்று பாடுவார்.

ஒரு மன்னனுக்கு மாலை, கொடி, குதிரை, நதி ஆகியவை சிறப்பினைச் சேர்க்கும் இலட்சணங்களாகும். இறைவன் வேம்பின் கண்ணிமிலைச்சினான்; மீனேற்றுக் கொடியை உயர்த் தினான்; கனவட்டம் என்னும் பரியை உகைத்தான்; வைகைத் தண்டுறையில் நீராடினான். அழகுதமிழ் பாடும் மழலையின் பாடலைக் கேட்டனன் என்று அரசலட்சணங்களை அடுக்கிச் சொல்வார் தெய்வக்கவிஞர்.

தேம்பழுத்த கற்பகத்தின் நறுந்தெரியல் சிலர்க்கமைத்து
வேம்பழுத்த நறைக்கண்ணி முடிச்சென்னி மிலேச்சினேயே.

வானேறும் சிலபுள்ளும் பலரங்கு வலனுயர்த்த
மீனேரே வானேறும் விடுத்தடிகள் எடுப்பதே.

மனவட்ட மிடுஞ்சுருதி வயப்பரிக்கு மாறன்றே
கனவட்டம் தினவட்ட மிடக்கண்டு களிப்பதே
விண்ணூறு தலைமடுப்ப நனையாநீ விரைப்பொருநைத்
தண்ணூறு குடைந்துவையைத் தண்டுறையும் படிந்
தனையே

பொழிந்தொழுகு முதுமறையின் சுவைகண்டும்
புத்தமுதம்
வழிந்தொழுகும் தீந்தமிழின் மழலைசெவி மடுத்தனையே.
(1)

ஆலவாய்ப் பெருந்தகை அழகு பொருந்தியவன். அவன் மீனவனுகி அரசாண்டான் என்பதை, 'விடமுண்ட கந்தரச் சுந்தர மீனவனே' என்பார். அவனைச் சவுந்தரமாறன் என்றும் அழைப்பார். மேலும் செழியன் பெற்ற கன்னியை மணந்த தனுல் கன்னிநாட்டைப் பெற்றுர் என்பதை, 'செழியரீன்ற. கன்னியை மணந்தேயன்றே கன்னி நாடெய்தப்பெற்றுர்' (60) என்று பாடுவார்.

இறைவன் சவுந்தரமாறனுகி அரசாண்டான். அம்மை பெண்ணரசியாகினுள். முருகன் உக்கிரகுமாரனுகி வந்தான். இவற்றுக்கெல்லாம் என்ன காரணம்? தண்டமிழின் மதுரச் சுவையைப் பற்பல சங்கப் புலவரோடு கூடி உண்ணவே ஆகும் என்பர் கவிஞர்.

"தமரநீர்ப் புவனம் முழுதொருங் கீன்ருள்
தடாதகா தேவியென் றெருபேர்
தரிக்கவந் ததுவுந் தனிமுதல் ஒரு நீ
சவுந்தர மாறனு னதுவுங்

குமரவேள் வழுதி உக்கிர னெனப்பேர்
கொண்டதுந் தண்டமிழ் மதுரங்
கூட்டுண வெழுந்த வேட்கையா லெனிலிக்
கொழிதமிழ்ப் பெருமையா ரறிவார்." (92)

ஆடல் சிறப்பு:- இறையோன் உயிர்கள் மாட்டுக்கொண்ட பேரன்பினலும், அருளாளர்கள் மாட்டுவைத்த பெருங் கருணைத் திறத்தாலும் கூடல் நகரின்கண் அவன் செய்த திருவிளையாடல்கள் பலப்பல. அவற்றைப் பலவிடத்தும் பொருந்தும் வகையில் எடுத்துப் போற்றுகின்ருர் குமர குருபரர். அவன் கலிமதுரையில் மண்சுமந்து கூலிகொண்டு அக்கோவால் மொத்துண்டு பொன்மேனியில் புண்சுமந்த திருவிளையாடலைக் கவிஞர்,

"வைகைக்கோ புனற்கங்கை வானதிக்கோ சொரிந்து கரை
செய்கைக்கென் றறியேமால் திருமுடிமண் சுமந்ததே" (1)

உருகிய மனமொடு தழுவியொர் கிழவி
கருந்துணி மேலிடு வெண்பிட் டுகந்தன
உறுதியொ டவள்மனை புகும்வகை கடிது
சுமந்தொரு கூடைமண் உந்திச் சொரிந்தன
உருவிய சுரிகையொ டெதிர்வரு செழியர்
பிரம்படி காண நடுங்கிக் குலைந்தன. (11)

என்றெல்லாம் போற்றிப் பரவுவார்.

வளையல் விற்றது: — இறைவன் சங்கவளையோடு முத்து வளையலை விற்ற சிறப்பு மிக்க திருவிளையாடல், 'முலைகொண்டு குழைத்திட்ட மொய்வளைகை வளையன்றே மலைகொண்ட புயத் தென்னீ வளைகொண்டு சுமந்ததே' என்றும் (2)

வலங்கொண்ட மழுவுடையீர் வளைகொண்டு விற்பீர்போல் மதுரைமூதூர்க்
குலங்கொண்ட பெய்வளையார் கைவளையெல் லாங்கொள்ளை கொள்கின்றீரால்

பலங்கொண்ட செட்டுமக்குப் பலித்ததுநன் ருனீரிப்பாவை
மார்க்கு
பொலங்கொண்ட வரிவளேகள் விற்பதற்கோ கொள்வதற்கோ
புறப்பட்டீரே (7)

என்றும் பேசப்படுகிறது.

விறகு விற்றது: — மதுரைநகர்ப் புரந்தருளும் சோம சுந்தரக் கடவுள் பாணபத்திரன்பால் வைத்த பேரன்புத் திறத்திஞல் விறகு விற்றுச்செய்த திருவிளேயாடல் அற்புதமானது.

உருமிடி யெனவெடி படவெதிர் கருவி
நடந்தொரு பாண ஞெதுங்கத் திரிந்தன (11)

என்னும் அடிகளில் இவ்விளேயாடல் பேசப்படுகின்றது.

அங்கம் வெட்டிய ஆடல்: — குருவொடு முரணிப் பொருமை கொண்ட சித்தன் என்பவனின் செருக்கினேத் தீர்க்க ஆசிரியன் வடிவங்கொண்டு அவனே அமருக்கழைத்து அங்கம் வெட்டியது திருவிளேயாடற்புராணச் செய்தியாகும். இதனேக் குறிப்பிடும் பிரபந்தப்பாடல் அழகிது.

இருவருக்கும் காண்பரிய ஈசர்மது ரேசஞர்
விருதுகட்டி அங்கம் வெட்டி வென்றனர்காண் அம்மானே
(13)

என்பது அப்பாடல் தொடர்.

வெள்ளானே சாபம் தீர்த்த விளேயாட்டு:- இந்திரனின் ஊர்தியாகிய ஐராவதத்திற்குத் துர்வாஸ முனிவர் இட்ட சாபத்தைத் தீர்த்தருளினன். இதனே வெள்ளானே சாபந்தீர்த்த திருவிளேயாடற்பகுதியில் காணலாம். இதனேப் பிரபந்தத்தின்

காரானேப் போர்வைதழீஇ வெள்ளானேக் கருள்
சுரந்த கடவுளேயோ. (17)

எனும் அடிகள் இதனேக் குறிப்பிடுவதாகும்,

கல்லானைக்குக் கரும்பருத்தியது:- புல்லாய்ப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப் பிறக்கும் எல்லா உயிர்கட்கும் அருள்செய்கின்ற இறைவன், கல்லானைக்குக் கரும்பருத்திய அருட் செயலை,

''பல்லா ருயிர்க்குயி ராமது ரேசரப் பாண்டியன்முன்
கல்லானைக் கிட்ட கரும்பு ... ...'' (20)

கரும்பை முன்புகல் லானைக் கிடுஞ்சித்தர். (57)

என்னும் பாடல் அடிகளில் சுவாமிகள் குறிப்பிட்டிருக்கின்றுர்.

பழிக்கஞ்சியபான்மை:– பெண்கொலையால் வரும் பழியை அஞ்சும் சொக்கநாதரின் பேரருள் திறத்தைக் கீழ்க்கண்ட பாடலடிகள் எடுத்துப் போற்றுவனவாகும்.

''பாருக்குள் நீரே பழியஞ்சியா ரெனின்'' (31)

''ஓவமே யன்னுள் உயிர்விற்றுப் பெண்பழிகொள்
பாவமே பாவம் பழியஞ்சுஞ் சொக்கருக்கே'' (29)

வலைவீசிய விளையாடல்:- அம்பிகை வலைஞன் திருமகளாக வளர்ந்தமையின் அவளை மணஞ்செய்தருள வலைஞராகி வள்ளல் வலைவீசிய திருவிளையாடல் அற்புதம் மிக்கது.

ஊன்வலையி லகப்பட்டார்க் குட்படாய் நின்புயத்தோர்
மீன்வலைகொண் டதுமொருத்தி விழிவலையில் பட்டன்றே (1)

என்னும் பிரபந்த அடிகள் இவ்வருள் விளையாடலைப் போற்றிப் பரவுவனவாகும்.

பன்றிக் குட்டிக்குப் பால் அளித்தது:- பன்றிக்குட்டிகளுக்கு, அவை தாயென நினைத்துப் பொருந்திய கரிய பன்றிக்குட்டிகளுக்குப் பால் வழங்கிய விளையாடல் கவிஞரால் பாடப் பெறுகிறது.

''இருநிலன் அகழ்ந்ததொரு களிறுவெளி றும்படியொர்
இருளியினணைந்த ணையுமக்

குருளையைம ணந்தருளி னிளமுலை சுரந்துதவு
குழகரிது ணர்ந்தி லர்கொலாம்'' (34)

இழிந்த அஃறிணையினிடத்தும் வரம்புகடந்து அருள் கூர்ந்து பாலருத்திய சொக்கநாதரின் கருணைத்திறத்தைக் குறிப்பிடுவது இவ்வருளாடல்.

பாண்மகற்குப் பலகையருளியது:- பண்பால் யாழ்பயில் பாணபத்திரன் பொருட்டு விறகு விற்றது போலவே அவற்குப் பொற்பலகை தந்து சங்கத்து இருப்பிலே இடமளித்த செயலை அடிகள் புகழ்ந்து போற்றுவதை,

''பாண்மகற் கலர்பொற் பலகை நீட்டுங் கடவுள்'' (47)

நரி பரியாக்கிய நாடகம்:- சிற்கோல வாதவூர்த் தேசிகன் பொருட்டு வனத்தில் திரிந்த நரிகளைப் பரிகளாக்கி குதிரைச் சேவகனாகிய கொள்கையை இப்பிரபந்தத்தின் கீழ்க்கண்ட பாடலடிகள் எடுத்துச் சுட்டும்.

''நரியைப் பரியாக்கி நடத்தினரால்'' (71)

வால விருத்த குமாரர் ஆகிய வண்மை: — எல்லோர்க்கும் ஆதியாகிய அண்ணல், கௌரி என்ற பார்ப்பனப்பெண்ணுக்கு அருள்புரிய, விருத்தனாகி வந்து குமாரனாகிப்பின் பாலனாகிய திருவிளையாடலை,

''வால விருத்த குமாரனெ னச்சில
வடிவு கொண்டு நின்றாய்... ...'' (68)

எனப் போற்றுவார் கவிஞர்.

நாரைக்கு முத்தி நல்கியது:- மனிதகுலத்துக்கே அன்றிப் பறவைக்கும் பெருங்கருணை காட்டிய இறைவன் செங்கால் நாரைக்குச் சிவபதம் தந்தருளினான். இதனை,

முட்டாட் பாசடை நெட்டிதழ்க் கமலத்து
இரைவர வுறங்குங் குருகு விரிசிறைச்
செங்கால் நாரைக்குச் சிவபதங் கிடைத்தன. (87)

மாமிக்காக ஏழுகடலழைத்தது:- இறைவன் தன்னுடைய மாமியாகிய காஞ்சனமாலை கடல் நீராட விரும்பியபோது, மதுரை நகரின்கண் சிவதீர்த்தம் ஒன்றில் கடல் ஒன்றோ, ஏழு கடலும் வரும்படிச் செய்தருளினன் என்பதை,

"மாமிக்குக் கடலேழும் வழங்கினீர்" (90)

என்னுமடி இவ்வற்புதச் செயலைக் குறிப்பதாம்.

உலவாக் கோட்டை அளித்தமை: - அடியார்க்குநல்லா ரெனும் ஒரு வேளாளருக்கு எடுக்க எடுக்கக் குறையாத நெற் கோட்டையை ஆலவாய் அண்ணல் வழங்கியருளிய செய் தியை,

"அடுத்தாங் குலவாக்கோட்டை சுமந்தளித்தீர்" (93)

என்று பாடியருளுவர்.

புராணச்சிறப்பு மிக்க அருட்பெருஞ்செயல்கள்:- இப்படி யன் இவ்வண்ணத்தன் என்றெழுதிக் காட்ட முடியாத இறை வனை, அவன்தன் ஆட்டத்தை, திருமேனிப் பொலிவை, வீரச் செயல்களை விரிவாகப் போற்றிப் பரவுகின்றார் அடிகள்.

நள்ளிரவில் அவன் நட்டம் பயின்றாடுதலை ஸ்ரீ குமர குருபரர் "மன்றேயிருக்கப் புறங்காடரங்காட வல்லாயே" (6) என்பர். "புறங்காடரங்காட வல்லான்" என்னும் தேவாரத்தொடர் ஈண்டு ஒப்பு நோக்குதற்குரியது.

திரிபுரசங்காரத்தில் அவன் ஆடியருளிய பண்டரங்கம் என்னும் திருக்கூத்து "பட்டிருக்கத் தோலசை இப் பாண்ட ரங்கக் கூத்தாடும் மட்டிருக்கு நீபவனத்தானே" (8) என்ற பாடலடிகளில் பேசப்படுகிறது.

இறைவன் புலியதளை உடையாக வீக்கியமையை,

"புகையெழ அழலுமிழ் சுழல்விழி யுழுவை
வழங்குமொரு ஆடை மருங்குற் கணிந்தன" (11)

என்றும், அவன் யானையின் ஈருரிதோல் போர்த்தமையை

"பொருசம ரிடையெதிர் பிளிறுமொர் களிறு
பிளந்தொரு போர்வை புறஞ்சுற்றி நின்றன" (11)

என்றும் இலக்கியச் சுவைபட எடுத்து மொழிவர் கவிஞர்.

இல்லாள் முப்பத்திரண்டு அறங்கள் புரிய ஏந்தலோ பிரமகபாலத்து இரவொழியாமை மேற்கொண்டனர் என்பதை. "எடுத்ததாள் பதித்து ஆடிக் கடைப் பிச்சைக் கிச்சை பேசும் அப்பிச்சன்" (32) என்ற பகுதி காட்டும்.

அப்பணி செஞ்சடை ஆதி புராதனன் முப்புரஞ் செற்ற முதன்மையை, "கூடார் புரந்தீ மடுக்கின்றதும்" (39) என்னும் அடியிற் பாடிப்பரவுவர்.

ஆதியும் அந்தமுமில்லா அரும்பெருஞ்சோதியைக் கண்டு அடி, முடி தேடப்புறப்பட்டமால், அயன் செய்தியில் திருவடி தேடிய செய்கையை, "இருநிலன் அகழ்ந்ததொருகளிறு வெளிறும்படி" (34) என்னும் பாடல் தொடர் குறிப்பிடும்.

இறைவன் தடாதகா தேவியாரைத் திருமணஞ் செய்து கொண்டு பாண்டியனுகி அரசு புரியத் தொடங்கியபோது பாண்டியர்க்குரிய மீன்கொடியைக் கைக்கொண்டார் அல்லவா? இச்செய்கை, மன்மதன் மலர்க்கணையை எறிந்த போது அவனை நெற்றிக் கண்ணுல் எரித்து, அவனை வெற்றி கொண்டதற்கடையாளமாக அவனது மீன்கொடியைப் பறித்துக் கொண்டது போலுமிருந்தது என்று அரியதோர் கற்பனை நயம் தோன்றப் பாடுவர் நம் தெய்வக் கவிஞர். இதனைக் குறிப்பிடும் பாடற்பகுதி, "கானருத சுருப்பு நாண் கொள் கரும்பு வில்லியைக் காய்ந்த நாள், கைப்பதாகை கவர்ந்து கொண்டதொர் காட்சியென்ன வெடுப்பதோர், மீனருதவடற் பதாகை... ..." (50) என்பதாகும்.

இறையோன் தன்னிரண்டு திருச்செவிகளிலும் இரண்டு கந்தவர்கள் இசைபாடிக் கொண்டிருக்கின்றனர் என்னும் புராணவரலாற்றுச் சிறப்பு, "பாணரு மழலைச் சீறியாழ்

மதுரப் பாடற்குத் தோடுவார் காதும்...'' (46) என்னும் பாடற் பகுதியில் பேசப்படுகின்றது.

பாலற்காச் சினத்த காலனை உதைத்தருளிய வீரச்செயலை, ''கூற்றுயிர் குடித்தாய்க் காற்றலாம்'' என்பர். (46)

மாதொருபாகனாய், மலைவளர்காதலியுடன் அவன் வீற்றிருக்கும் திருவருட் பொலிவினை,

''வையமீன் றளித்த மரகதக் கொடிக்குன்
வாமபாகமும் வழங்கினையால்''

என்னும் பிரபந்த அடிகள் ஓவியமாக்கிக் காட்டும்.

அருளாளர்க்கு அருளிய மாண்பு:- கழுமலப்பதி கவுணியப் பிள்ளைக்குப் பொற்றாளம் வழங்கினன் இறைவன். இவ்வருட் செயலை,

''புகலியர் குரிசில்பண் ணோடுதமி ழருமை
அறிந்தொரு தாளம் வழங்கப் புகுந்தன.'' (11)

என்ற அடிகள் விளக்கிக் கூறும்.

தழைத்த ஆத்தியின் நீழலில் மணலை லிங்கமாக்கி, ஆவின் பாலைக் கறந்து ஆட்டி. பிழைத்த தன் தாதை தாளைப் பெருங் கொடு மழுவால் வீசிச் சண்டீசராம் பதம் பெற்ற விசாரசருமர் செய்தியை, ''தவப்பயன் பெரிதெனும் தந்தைதாள் எறிந் தார்க்கே'' (14) என்று குறிப்பிடுவர்.

சுதரிசனம் என்னும் சக்கராயுதத்தைப் பெறற் பொருட்டுத் திருமால் நாள்தோறும் ஆயிரம் தாமரைமலர் களைக் கொண்டு சிவபெருமானை அருச்சித்து வழிபட்டு வருகையில் ஒரு நாள் சிவபிரான் அத்திருமாலினது அன்பு நிலையைப் பரிசோதிக்கவெண்ணி ஒரு மலரை மறைத்திட, திருமால் மனந்தளர்ந்து தனது செந்தாமரைமலர் போலுங் கண்களுள் ஒன்றைப் பறித்து அருச்சித்தாரென்னும் புராண வரலாற்றினை உட்கொண்ட குமரகுருபரரது நயமிகுந்த பாடலைப் பாருங்கள்,

பொருளுன் கொருங்கீன்ற பொன்மாடக் கூடல்
இருளுன் றிருண்ட கண்டத் தெம்மான்- சரணன்றே
மண்டுழாய் உண்டாற்குக் கண்மலரோ டொண்மவுலித்
தண்டுழாய் பூத்த தடம். (2)

இப்பாடலில் உள்ள மற்ருெரு நயமுங்காண்க. மண் துழாய் உண்டான் என்பது திருமாலைக் குறிக்கும். எம் பெருமான் சரணம் திருமாலது கண்மலர் மட்டுமல்லது அவரது தலையில் அணிந்த திருத்துழாயும் பூத்த தடம் என்றது, தடம் என்ற சொல்லுக்கு குளம் என்பதல்லாது மலைப்பக்கம் என்ற பொருளும் உண்மை பற்றியாம். மலைப்பக்கத்தில் திருத் துழாய் என்னும் துளசி வளரும் எனக் கொள்க. திருமாலுக்கு மவுலித்துழாய் பூத்த தடம் (மலைப்பக்கம்) என்றது திருமால் சிவபிரானது திருவடியில் தமது முடி படுமாறு சாஷ்டாங்க மாக விழுந்து வுணங்கும்போது சிவபிரானது திருவடியில் திருமாலது திருமுடியில் உள்ள திருத்துழாய் பொருந்து மாதலின் என்பதுபற்றியாமென்க.

விற்பதற்கா வாங்குவதற்கா:- இறைவன் வளையல் வணிகனுய் மதுரை மாநகரில் வந்தபோது அவரைக் கண்டு காமுற்ற நங்கையர் கைவளையல்கள் சோர்ந்தன. எனவே வளையல் விற்க வந்தவர் அவர்களிடம் உள்ள வளையல்களைக் கவர்ந்துவிட்டார். அப்படியாயின், வியாபாரம் மிகவும் இலாபகரமானதே. அப்படி இலாபகரமாய் அமைந்த போதி லும் உமது வருகையின் நோக்கமென்ன? வளையல்களை விற்பதற்கா? அல்லது வாங்குவதற்கா புறப்பட்டீர்? என்று இலக்கிய நயம்பட வினவுகின்ருர் கவிஞர். "பொலங் கொண்ட வரி வளையல்கள் விற்பதற்கோ கொள்வதற்கோ புறப்பட்டீரே" (7) என்ற பாடல் பகுதி இச் செய்தியைக் குறிக்கும்.

செய்யாள் சரக்கறை:- பொருள்களைச் சேமித்துவைக்கும் அறைக்குச் சரக்கறை (Store Room) என்பது பெயர்,

திருவாலவாய் நகரைத் திருமகளின் சரக்கறை என வருணிப் பார் கவிஞர். "செய்யாள் செய் சரக்கறையாம் திருவாலவாயி லுறை செல்வனரே" என்பது அப்பாடற் பகுதி. (8)

காதலனே காதலியான விந்தை:- மேக வண்ணத்தின னுகிய திருமால், திருமகள் நிலமகள் ஆகிய இரு பெண்களுக் கும் காதலன்- அதாவது கணவனுகின்ருன். அதே காதலன் உனக்கு ஒரு காதலியாக இருக்கின்ருன். இது என்னே விந்தை! ஏனெனில் இரண்டு பெண்களுக்குக் கணவனுக இருக்கும் ஓர் ஆண்மகன் மற்ெருரு ஆண்மகனுக்குக் காதலி யாக இருப்பது இயலுமா? இருக்கின்ருனே, அது விந்தை யிலும் விந்தை அன்ருே? "காதலனே காதலி" எனக் காவிய நயம்படக் கூறும் அழகைப் பாருங்கள்.

... .... ... .... .... இறும்பூதந்தோ
போதலர்பைந் துழாய்ப்படலைப் புயல்வண்ணத்
  தொருவன் இருபூவை மார்க்குக்
காதலனய் மற்றுனக்கோர் காதலியாய்
  நிற்பதொரு காட்சிதானே. (95)

முடிவுரை:- வெள்ளி மன்றத்தை அரங்கமாகக் கொண்டு ஆடுகின்ற தென் திரு ஆலவாயில் உறையும் ஆதியே பாடு பொருளாக அவன்தன் மேன்மை உள்ளிடைப் பொருளாக ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அவர்களால் படைத்தளிக்கப்பட்ட மதுரைக் கலம்பகம் என்னும் சிற்றிலக்கியம் எல்லா வகை யிலும் ஈடு இணையற்ற ஒரு இலக்கியமாகும். கண்ணுதற் கடவுளின் கருணையை, அவனது முழுமுதற்றன்மையை இலக்கியச் சுவைபட அமைத்தருளிய கவிஞரின் திறம் போற்று தற்குரியது. கற்பவர்க்குக் களிப்பினையும், பக்திப் பரவசத்தை யும் அளிக்கும் பாடல்களில் ஒரு சிலவே கண்டோம். முழு நூலையும் அறிஞர்கள் பயின்ருல் மேலும் பல விழுப்பொருள் கள் கிடைக்கும் எனக்கூறி அமைகின்ருேம்.

சிவம்

ௐ

Sivamayam

Sri Mahadeva Jayam

# SIVA STOTRA

## SWAMY VIVEKANANDA

Salutations to SIVA! whose glory
Is immeasurable, who resembles the sky
In clearness, to whom are attributed
The phenomena of all creation,
The preservation and dissolution
Of the universe! May the devotion,
The burning devotion of this my life
Attach itself to Him, to SIVA, who,
While being lord of all, transcends Himself
In whom Lordship is ever established
Who casues annihilation of delusion,
Whose most surpassing love, made manifest,
Has crowned Him with a name above all names,
The name of "MAHADEVA", the Great God!
Whose warm embrace, of Love personified,
Displays, within man's heart, that all power
Is but a semblance and a passing show,
In which the tempest of the whole past blows,
Past Samskaaras, stirring the energies
With violence, like water lashed to waves;
In which the dual consciousness of "I" and "Thou",

Plays on : I salute that mind stable,
Centred in SIVA, the abode of calm!
Where the ideas of parent and produced,
Purified thoughts, and endless varied forms,
Merge in the Real one; where the existence ends
Of such conceptions as "within", "without"—
The wind of modification being stilled—
That HARA I worship, SIVA I hail!
From whom all gloom and darkness have dispersed;
That radiant Light, white, beautiful
As bloom of lotus white is beautiful;
Whose laughter loud sheds knowledge luminous;
Who, by undivided meditation,
Is realised in the self-controlled heart
May that lordly Swan of the limpid lake
Of my mind, guard me, prostrate before Him!
Him, the Master-remover of evil,
Who wipes the dark stain of this Iron age;
Who, Daksha's daughter gave her coveted hand;
Who, like the charming water-lily white,
Is beautiful; who is ready ever
To part with life for other's good, whose gaze
Is on the humble fixed, whose neck is blue
With the poison swallowed;
HIM, we salute.

[Reproduced from Bhavan's Journal, May 10, 1964, Vol. X, No. 21, with grateful acknowledgements-Editor]

SIVAM

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

# சிவபரத்துவ நிச்சயம்

இயற்றியவர்,

திருவாவடுதுறையாதீன வித்துவான்,
சித்தாந்த பண்டித பூஷணம்,
சிவஸ்ரீ. ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளையவர்கள்.

உரைவிளக்கம்,

வித்துவான். ச. இரத்நவேலன், சங்கரன் கோவில்.

(1983-84 சிவஞானபூஜாமலர் தொடர்ச்சி)

சென்னிக ளொருநான் குள்ள தேவனைப் பெறவு மாழி
யின்னமு தமரர் தங்கட் கீயவுந் தாருக் காட்டின்
மன்னிய முனிவர் தம்மை மயக்கவு மால்பெண் ணுரு
னன்னனை யரன்சூ லேற்ற வையனை யவள்பெற் றுளே.

(பொழிப்புரை) நான்கு முகங்களுடைய பிரமதேவனைப் பெறுதற் பொருட்டும், திருப்பாற்கடலில் தோன்றிய இனிய அமுதத்தை அமரர்கள் மட்டுமே உண்ணுதற்குக் கொடுத்தற் பொருட்டும், தாருகாவனத்தில் தங்கியிருந்த ரிஷிகள் மனத்தில் மயக்கத்தை ஏற்படுத்தற் பொருட்டும் மஹாவிஷ்ணு மூர்த்தி மங்கைப் பருவ மோகினியானுர். அவ்விஷ்ணு மங்கையைச் சேர்ந்து சிவபிரான் கருப்பம் உண்டாக்க ஐயனுர் என்னும் மஹாசாஸ்தாவை அம்மோகினி பெற்றுள்,

'மாயோன் மகடூஉ வாகிய காலைத் தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலின்' என்ற சுலோக பஞ்சகமும், 'பிறை தங்கு சடையானை வலத்தே வைத்துப் பிரமனைத் தன்னுந்தி யிலே தோற்றுவித்து' என்ற நாலாயிரப் பிரபந்தமும், 'முன்னை வேதன் முடிந்தனன் போதலு முன்னோ டேவந் துவப்பொடு கூடினேம் பின்ன ரிந்தப் பிரமனையுந்தியா – லன்னை யாகி யளித்தனை யல்லையோ' என்ற கந்தபுராணமும் இச் செய்யுட்குப் பிரமாணங்கள்.

விஷ்ணு பெண்ணும் சிவபிரானுக்கு மனைவியும் ஆவ ரென்பது இச்செய்யுளில் தெரிக்கப்பட்டது. (62)

வாரண வாசி தன்னின் மாரண மாவோர் காதிற்
றாரக முபதே சிக்குஞ் சம்புவே மறையி லஃதைச்
சீரண வெழுத்தைந் தென்று செப்பின னறிந்தோர் வேறு
தாரக மனுக்க டம்மைத் தள்ளுவர் முகம னென்றே.

(பொ-ரை) ஸ்ரீ காசியில் மரணமடைவோர் காதில் சிவபிரான் தாரக மந்திரத்தை உபதேசித்தருளுவான். அத் தாரக மந்திரமாவது சிறப்புப் பொருந்திய வியஷ்டிப் பிரணவ ஸ்ரீ பஞ்சாக்ஷரம் எனச்சிவபிரானே வேதத்தில் எடுத்தோதி யுள்ளான். அப்படியிருக்க நாராயண, ராம நாமங்கள் தாரக மந்திரமெனக் கூறுவார் கூற்று உபசாரமே. எனவே அறிந் தோர் ஸ்ரீ பஞ்சாக்ஷரமே தாரகமாகக் கொண்டு பிறநாமங்கள் தாரகம் எனப்பேசப்படுவது முகமனே என்று அறிந்து அவற்றை நீக்குவர்.

'நமோ நாராயணாயேதி தாரகம்' (இது யாக்ஞவல்கிய வாக்கியம்) என்ற தாரஸாரோபநிஷத்தும், 'யத்ரருத்ராபிவா காச்யாம் மரணேஸ மஹேச்வர: | ஜந்தோர் தக்ஷிணே கர்ணேது மத்தாரம் ஸமுபாதிசேத்' (இது ராமவாக்யம்) என்ற முக்திகோபநிஷத்தும், 'தாரகம் சைவம் மநுபதி சாமிதத்ரைவ முக்த்யர்த்த முபதிச்யதே | சைவோயம் மந்த்ர: பஞ்சாக்ஷர: | பரமோ மந்த்ரஸ்தாரகோயம் பஞ்சாக்ஷர:' (இது சிவ

வாக்கியம்), 'தாரகம் சைவம்' என்ற பஸ்மஜாபாலோபநிஷத்தும், 'ஸ்ரீ ராமஸ்யமநும் காச்யாம் ஜஜாபவ்ருஷபத்வஜ:,' 'யத் தாரகம் ப்ரஹ்ம' என்ற ராமோத்தர தாபிநியுபநிஷத்தும், 'ப்ரணவஸ் தாரக' என்ற பாசுபதப்ரஹ்மோபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

பஞ்சாக்ஷரமே தாரகமந்திரமென இச்செய்யுள் நிலையிட்டது. (63)

மறையினை யளிப்பான் ருனு மறைநெறி புரப்பான் ருனு
மறையொரு வடிவன் ருனு மறைப்பொரு ளாவான் ருனு
மறையள வடங்கான் ருனு மாலவன் பிரமன் யார்க்கு
மறையுப தேசன் ருனு மதிமுடிப் பரனே யாவான்.

(பொ-ரை) சந்திரனைத் திருமுடியில் தரித்த சிவபிரானே வேதங்களைத் தருபவன்; வேதநெறியை ரக்ஷிப்பவன்; வேத வடிவினன்; வேதப்பொருள்; வேதப் பிரமாணத்தினும் அடங்காதவன்; பிரம்ம விஷ்ணுக்களுக்கு வேதத்தை உபதேசிப்பவன்.

'வேத சாஸ்திர புராணம் ச கார்யம் காரணமீச்வர:' என்ற தேஜோபிந்துபநிஷத்தும், 'வேதைரநேகைரஹமேவ வேத்யோ வேதாந்த க்ருத் வேத விதேய சாஹம்' என்ற கைவல்யோபநிஷத்தும், 'யோப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோவை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை'' 'தத்வேத குஹ்யோபநிஷத்ஸு கூடம்' 'வேதாந்தே பரமம் குஹ்யம்' என்ற சுவேதாசுவதரோபநிஷத்தும், 'சம்போர் மஹாதேவம் ஜகத்குரும்' என்ற பஞ்சப்ரஹ்மோபநிஷத்தும், 'ஸர்வ வேதாந்த த்ருப்தோஸ்மி' என்ற மைத்ரேயோபநிஷத்தும், 'திவ்யஜ்ஞாநோபதேஷ்டாரம் தேசிகம் பரமேச்வரம்' என்ற யோகசிகோபநிஷத்தும், 'மஹாதேவம் ஜகத்குரும்' என்ற கர்போபநிஷத்தும், 'தக்ஷிணாமுகமாச்ரித்ய ஜ்ஞாநமுத்ராம் ப்ரகல்பயேத்' என்ற பிரமவித்யோபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

சிவபிரானைச் சில வேத வசனங்கள் சொல்லித் துதிக்கு முகத்தால் அவர் பெருமைகள் மேலுமிவையென ஆசிரியர் இது முதல் பதினன்கு செய்யுட்களில் (77-ஆம் செய்யுள் வரை) கூறுகிருர். (64)

அக்கர மாவோய் நீயே யகரநீ யசர நீயே
தக்கணு மூர்த்தி நீநாற் பொருள்களுந் தருவாய் நீயே
பக்குவ ருன்னை யன்றிப் பரமென வொட்டாய் நீயே
முக்குண ரகித னீயெம் முக்கணு வனைத்து நீயே.

(பொ-ரை) எங்கள் தெய்வமாகிய முக்கட் பரம் பொருளே! நீயே அக்ஷரங்கள் ஆவாய், அகரமும் நீயே, சரம் அசரமும் நீயே, ஞானப்பொருளுணர்த்தும் தக்ஷிணு மூர்த்தி நீயே, அறம் பொருள் இன்பம் வீடு எனப்படும் நாற் பொருளுந் தருபவன் நீயே, ஞானிகள் உன்னையல்லாமல் பிற தெய்வங்களில் எதனையும் பரதெய்வமென்று சொல்லுதற்கு நீ இடங்கொடுக்கமாட்டாய், சத்துவம் - ராஜஸம் - தாமஸம் என்ற முக்குணம் நீங்கியவன் நீயே, பிரபுவே! நீயே எல்லாம் ஆவாய்.

'ஸதாசிவோக்ஷரம்' என்ற திரிபுரதாபிநியுபநிஷத்தும், 'சிவமக்ஷரம்', 'அஹமேவ ஸர்வம் | மயிஸர்வம் ப்ரதிஷ்டிதம்' என்ற பஸ்மஜாபாலோபநிஷத்தும், 'அக்ஷரம் ஹர:', 'ருத்ர யத்தே தக்ஷிணமுகம் தேநமாம் பாஹிநித்யம்' என்ற சுவேதா சுவதரோபநிஷத்தும், 'அஜரம் சிவம்' என்ற மஹோபநிஷத் தும், 'தக்ஷிணுமுகமாச்ரித்ய ஜ்ஞாநமுத்ராம் ப்ரகல்பயேத்' என்ற பிரமவித்யோபநிஷத்தும், 'தர்மார்த்த காம மோக்ஷம் சவிந்ததி', 'த்வம் குணத்ரயாதீத' என்ற கணபதியுபநிஷத்தும், 'சிவ:ஸர்வம் சிவாதந்யந்நகிம்சந:' என்ற வராகோபநிஷத் தும், 'குணத்ரயமதீதம்' என்ற யோகசிகோபநிஷத்தும், 'குணுதீதம்' என்ற நாதபிந்துபநிஷத்தும், 'த்ரிகுணரஹிதம்' என்ற சுகரஹஸ்யோபநிஷத்தும், 'அகரமுதலானை', 'எல்லா மாமெம்பெருமான்' என்ற தேவாரமும் இச்செய்யுட்குப் பிர மாணங்கள். இச்செய்யுளும் மேலதன் கருத்தை வெளிப் படுத்தியது. (65)

அஞ்செனு மறிவுக் கெட்டா னஞ்செனும் பூத மேலா
னஞ்செனு மவத்தை யில்லா னஞ்செனுங் கோசந் தோயா
னஞ்செனு மியாகர்க் கின்ப னஞ்செனுந் தேவர் தேவ
னஞ்செனு மெழுத்தா யுள்ளா னடியருக் கெளிய வீசன்.

(பொ-ரை) அடியவர்க்கு எளிமையாய்த் தோன்றி அருள் புரியும் சிவபிரான், சுவை-ஒளி-ஊறு-ஓசை-நாற்றம் என்னும் ஐம்புலத்திற்கும் எட்டாதவன்; பிருதிவி—அப்பு—தேயு—வாயு—ஆகாசம் என்னும் ஐம்பூதங்களுக்கும் மேலானவன்; உயிர்க்குரிய ஜாக்கிரம் - ஸ்வப்பனம் - சுழுத்தி - துரியம்-துரியாதீதம் என்னும் ஐந்து அவத்தைகளுமில்லாதவன்; அன்னமயகோசம் - பிராணமய கோசம்-மனோமய கோசம் - விஞ்ஞானமய கோசம் - ஆநந்தமய கோசம் என்னும் ஐந்து கோசங்களிலும் அகப்படாதவன்; கருமயாகம், தபயாகம், ஜெபயாகம், தியானயாகம், ஞானயாகம் என்னும் ஐந்து யாகஞ்செய்பவருக்கும் இன்பந்தருபவன்; பிரமன்-விஷ்ணு-உருத்திரன் - மகேசுரன்-சதாசிவன் என்னும் ஐந்து தேவர்களுக்குந்தலைவன்; ந-ம-சி-வ-ய என்னும் ஐந்தெழுத்தாக உள்ளவன்.

'சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்த வர்ஜித' என்னும் ஆத்மோபநிஷத்தும், 'ஸர்வேந்த்ரிய விவர்ஜிதம்', 'ஸர்வபூத குஹாசய:' என்ற சுவேதாசுவதரோபநிஷத்தும், 'ஸர்வேந்த்ரிய விவர்ஜித:' என்ற பிரமவித்யோபநிஷத்தும், 'அதீந்த்ரியம்' என்ற நாத பிந்துபநிஷத்தும், 'ஸர்வபூதாதி வாஸ:' என்ற கோபாலோத்தரதாபிநியுபநிஷத்தும், 'பஞ்சாவஸ்த: ஜாக்ர ஸ்வப்ந ஸுஷுப்தி துரிய துரீயாதீதா:' என்ற மண்டலப் பிராமணோபநிஷத்தும், 'ஐவேள்வியான அருமறை நான்கும்... பயின்ற படிறர்' என்ற தேவாரமும், 'பஞ்சப்ரஹ்ம புருஷான்' என்ற சாந்தோக்யோபநிஷத்தும் 'பஞ்சப்ரஹ்மாத்மகம்' என்ற பஞ்சபிரமோபநிஷத்தும், 'பஞ்ச ப்ரஹ்ம மயரூபம்' என்ற யோகசிகோபநிஷத்தும், 'பஞ்சாக்ஷரமயம் சம்பும்' என்ற பஞ்சபிரமோபநிஷத்தும், 'ஸர்வதாஸுலபோஸ்ம்யஹம்'

என்ற மைத்ரேயோபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள். இச்செய்யுளும் மேலதன் கருத்தை வெளிப்படுத்தியது. (66)

எங்கணுஞ் சிரங்க ளுள்ளா னெங்கணும் வதன முள்ளா
னெங்கணு நயன முள்ளா னெங்கணுங் கிரீவ முள்ளா
னெங்கணுங் கரங்க ளுள்ளா னெங்கணும் பதங்க ளுள்ளா
னெங்கணு நியம மாகி யிலங்கர னெல்லா முள்ளான்.

(பொ-ரை) அரன் எல்லாவிடங்களிலுந் திருமுடியை உடையான்; எல்லா இடங்களிலும் திருமுகங்கள் உடையான்; எல்லா இடங்களிலும் திருக்கண்கள் உடையான்; எல்லா இடங்களிலுந் திருக்கழுத்துடையான்; எல்லா இடங்களிலுந் திருக்கைகள் உடையான்; எல்லா இடங்களிலுந் திருவடிகள் உடையான்; விளங்கித்தோன்றும் அப்பிரபு மற்றை அவயவங்கள் எல்லாமும் எல்லா இடங்களிலும் நியமமாகி உடையவன்.

'ஸர்வாநந சிரோ க்ரீவ: ஸர்வத: பாணிபாதம் தத்ஸர்வ தோக்ஷி சிரோமுகம் | ஸர்வத: ச்ருதிமல்லோகே ஸர்வ மாவ்ருத்யதிஷ்டதி ||' என்ற சுவேதாசுவதரோபநிஷத்தும், 'விச்வதச்சக்ஷுருத விச்வதோமுகோ விச்வதோ ஹஸ்த உத விச்வதஸ்பாத்' என்ற நாராயணோபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள். இச்செய்யுளும் மேலதன் கருத்தை வெளிப்படுத்தியது. (67)

ஆயிரந் தலைக ளுள்ளான் ஆயிர முகங்க ளுள்ளா
னாயிரங் கண்களுள்ளா னாயிரங் கண்ட முள்ளா
னாயிரங் கைக ளுள்ளா னாயிர மலர்த்தா ளுள்ளா
னாயிரம் பெயர்க ளுள்ளா னாருயிர்க் குயிரா மீசன்.

(பொ-ரை) அரிய உயிர்களுக்கெல்லாம் உயிராய் விளங்கும் சிவபிரான் ஆயிரம் தலைகள், முகங்கள், கண்கள், திருக்கழுத்துகள், கைகள், திருவடிகள், பெயர்கள் உடையவன்.

'ஸஹஸ்ராக்ஷம் ஸஹஸ்ரசீர்ஷம் ஸஹஸ்ர சரணம்' என்ற பஸ்மஜாபாலோபநிஷத்தும், 'ஸஹஸ்ரசீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷ:ஸஹஸ்ரபாத்' என்ற சுவேதாசுவதரோபநிஷத்தும், 'ஸஹஸ்ர சீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத் | ஸஹஸ்ர பாஹு:' என்ற ஸுபாலோபநிஷத்தும், 'ஆத்மாந்தர்யாம்யம்ருத:' என்ற பிருஹதாரண்யகோபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

இச்செய்யுளும் மேலதன் கருத்தை விளக்கியது. (68)

ஆதியொ டந்த மாவா னகிலமும் வசியஞ் செய்வா
னோதரு சித்தி யெட்டு முதவுவன் சருவன் ஞான
ஞாதுரு ஞேய மாவா னற்பவன் தேவ தேவன்
சோதனை யெதற்கு மெட்டா னென்பவர் துயரம் போமே.

(பொ-ரை) நல்ல பவன் என்னுந் திருநாமமுடைய தேவ தேவனாகிய சிவபிரான் தொடக்கத்தையும் முடிவையும் செய்பவன்; எல்லாவற்றையும் வசியப்படுத்துபவன்; சொல்லுதற்கரிய எட்டு சித்திகளையும் கொடுப்பவன்; சர்வன்; காண்பான்-காட்சி-காணப்படும் பொருள் ஆகிய மூன்றுமாபவன்; எவ்வகைச் சோதனைகளுக்கும் அகப்படாதவன் என்னும் அவனது மெய்ம்மைத் தன்மையை அறிபவர் துன்பங்கள் போய்விடும்.

'ஸதாசிவ ஆதிபூத:' என்ற திரிபுராதாபிநியுபநிஷத்தும், 'வசீஸர்வஸ்ய லோகஸ்ய ஸ்தாவரஸ்ய ச்ரஸ்யச' என்ற சுவேதாசுவதரோபநிஷத்தும், 'அணிமாதிகமைச்வர்யமசிராத்தஸ்ய ஜாயதே' என்ற யோகசிகோபநிஷத்தும், 'தஸ்மாதணிமாதி ஸித்திர்பவதி' என்ற அத்வயதாரகோபநிஷத்தும், 'அணிமாத்யஷ்டைச்வர்யாசாஹித்த ஸங்கல்போபந்த:' என்ற நிராலம்போபநிஷத்தும், 'பவாய நம: பவலிங்காய நம: | சர்வாய நம: சர்வலிங்காய நம:' என்ற நாராயணோபநிஷத்தும், 'ஓமித்யேவ யதுத்பூதம் ஜ்ஞாநம் ஜ்ஞேயாத்மகம் சிவம்' என்ற சாண்டில்யோபநிஷத்தும், 'ஜ்ஞாத்ரு ஜ்ஞாந ஜ்ஞேயாநாமாவிர்பாவதிரோபாவ...' என்ற ஸர்வஸாரோபநிஷத்தும், 'ஜ்ஞாத்ரு ஜ்ஞாந ஜ்ஞேய' என்ற முத்கலோபு

யாம். ஆகவே, அவ்வித விந்துவின் காரியங்களுக்கும் ஆன்ம சிவன்களுக்கும் அவயவ அவயவித்தன்மையுடன் கூடிய அபேதம் இருத்தலால் பரமசிவனது வேறுபாட்டிற்கு ஆன்ம சிவன்களை உபாதியாகக் கூறுவதில் ஒரு குற்றமுமில்லை யென்க.

ஆகையால் தனது சத்தியால் எப்பொழுதும் அதிட்டிக்கத் தகுந்த விந்துவினுடைய கலக்கப்படாத பாகத்திலும் கலக் குண்ட சூக்குமபாகம் தூலபாகங்களிலும் முறையே இருப்பன வாக அறியப்பட்ட மூன்று விதமான ஆன்ம வர்க்கங்களால் தனித்தனியே அறியப்பட்ட பரமசிவன் மூன்று விதமான வேறுபாட்டை அடைந்திருக்கின்ருன். எதனுலெனில், நித்தி யனுயும் வியாபகனுயுமிருக்கும் அந்தப் பரமசிவனுக்கு எவ் விடத்தும் எக்காலத்தும் வியாபகமிருத்தலால் என்க. (இலய முதலிய அவத்தைகளிலிருக்கும் ஆன்மாக்களால் பரம சிவனும் இலய முதலிய வேறுபாட்டை யடைந்திருக்கின்ருன் என்பது இவ்வாறு நிச்சயிக்கப்பட்டமை காண்க.)

அவ்வாருயின் விந்து என்னும் சிவதத்துவமானது பரம சிவனை விட வேருன திரவியமாயிருத்தலால் அதனை அவனது சத்தியென்று எவ்வாறு கொள்ளலாமெனில் சமாதானங் கூறு கிருேம். கேட்பாயாக. கருத்தாவான பரமசிவன் தனக்குச் சாதனமாயுள்ளதாயும் தன்னிடத்தில் பிரிக்கமுடியாத சம்பந் தத்திலிருப்பதாயும் உள்ள சிற்சத்தியால் சுத்த உலகத்திற்கு முதற்காரணமாக அந்தச் சிவதத்துவத்தைக் கொள்கின்ருர். ஆகையால் அவனது சத்தியால் கொள்ளப்பட்டதாயும் அந்தச் சத்தியால் வியாபிக்கப்பட்டதாயுமிருக்கும் அந்தச் சிவ தத்து வத்தை உபசாரத்தால் சத்தியுடன் அபேதமாய் சத்தியென்று கூறுகிருேம். அல்லது அந்தச் சிவதத்துவமானது சத்தி தத்துவ முதலிய காரிய சத்திகளின் கூட்டமாயிருத்தல் பற்றி அதனைச் சத்தி என்று கூறினதாகக் கொள்ளுதலுமொன்று.

அந்தச் சிவதத்துவ ரூபமான விந்துவுக்குக் கருத்தாவின் அதிஷ்டானமின்றிக் காரிய ரூபமாகப் பரிணமித்தல் கூடாது.

எதனுலெனின், அது முதற்காரணமாயிருத்தல் பற்றி சடமா யிருத்தலாலென்க.

அந்தச் சிவதத்துவத்தின் காரியம் சொல் பொருள் என்னும் வேறு பாட்டால் இரண்டு விதமாயிருக்கின்றது. அவற்றுள் முதலாவதான சொற்பிரபஞ்சமானது நாதம் விந்து அக்கரம் என்னும் வேறுபட்டால் மூன்று விதமாயிருக்கின்றது. இரண்டாவதான பொருட்பிரபஞ்சமானது கலை, தத்துவம் புவனம் என்னும் வேறுபட்டால் மூன்று விதமாயிருக்கின்றது. அந்தச் சொல்லுக்கும் பொருளுக்கும் எக்காலத்தும் வேற்றுமை கிடையாது, எவ்வாறெனில், சிவசத்தியால் கலக்கஞ் செய்யப் பட்ட விந்துவிலிருந்து சாந்தி என்னும் பெயர் கொண்ட ஒரு கலையானது சந்திர கிரணத்தால் கலக்கப்பட்ட கடலிலிருந்து அலையுண்டாவது போல சூக்குமமாயுண்டாகின்றது. அந்த சாந்திகலையிலிருந்து வித்தை பிரதிட்டை நிவிருத்தி என்னும் மூன்று கலைகள் ஒன்றன் பின்ஞென்ருய்த் தூலரூபமாய்த் தொடர்ச்சியாயுண்டாகின்றன. அப்பொழுது அந்த விந்துவி லிருந்தே சத்தி என்னும் தத்துவமானது கருத்தாவின் உத்தி யோகமாத்திரத்தால் சாந்திகலைபோல் உண்டாகின்றது. அந்த விந்துவிலிருந்தே சதாசிவம் மகேச்வரம் சுத்தவித்தை என்னும் மூன்று தத்துவங்கள் கருத்தாவின் ஞானக்கிரியா சத்திகளின் சமமான வியாபாரத்தாலும் கிரியை அதிகமான வியாபாரத்தாலும் ஞானமதிகமான வியாபாரத்தாலும் முறையே தோன்றுகின்றன. ஆகவே தத்துவங்களுக்கு கலை களாதாரமாயித்தலால் அந்தக் கலைகள் தத்துவங்களுக்கு உபயோகம். அந்தத் தத்துவங்கள் புவனங்களுக்கு ஆதாரமா யிருத்தலாலும் சொல்லுக்குப் பற்றுக்கோடாயிருத்தலாலும் அவ்விரண்டிற்கும் உபயோகம்.

மேலான முதற்காரணமான அந்த விந்துவுக்கே கலை தத்துவம் என்னும் இரு காரியவர்க்கங்களை நோக்கி சாந்தி யதீதகலை என்றும் சிவதத்துவமென்றும் இரண்டு பெயர்கள் நிகழ்ந்தன. அவற்றுள், சத்திதத்துவத்திற்கு சாந்தியதீத கலையில் இருப்பும் சதாசிவதத்துவ முதல் சுத்த வித்தியா

தத்துவம் ஈருன மூன்று தத்துவங்களுக்கும் சாந்திகலையிலிருப்புமாகும். வித்தை முதலிய கலைகள் மாயா சம்பந்தமான தத்துவங்களுக்கு பற்றுக்கோடாயிருக்கின்றனவென்று பின்னர் கூறப்போகிருேம்.

ஆகையால் ஆகாய ரூபமான முதற் காரணமாயுள்ள அந்தச் சிவதத்துவமென்னும் விந்துவில் எல்லாச் சொற்களுக்கும் காரணமாயும் மிகவும் சூக்குமமாயும் உள்ள நாதமென்பது வெளிப்படையாக விளக்கமின்றி சூக்குமமாக அடங்கியிருக்கிறதென்பது ஆசிரியர்களால் அபவிக்கப்படுகிறது. ஆதலினுற்ருன் அந்தச் சிவதத்துவத்திற்கு பரநாதம் என்னும் பெயர் நிகழ்ந்தது. அந்த விந்துவிலிருந்து சத்தி தத்துவம் உண்டாகுங் காலத்தில் எல்லாச் சொற்களின் கூட்டரூபமாயும் *ஸ்போட ரூபமாயும் இருக்கும் இந்த நாதமானது சூக்குமமாய் விளக்கமடைகின்றது. இதுபற்றியே அந்த சத்திதத்துவத்திற்கு பரவிந்து என்னும் பெயர் நிகழ்கிறது. பின்னர் இந்த ஒலி ரூபமான நாதமானது சாதாக்கிய தத்துவ தோன்றுங் காலத்தில் மிக விளக்கமாய் தூலமாய் அனுபவிக்கப்படுகிறது. ஆகையினுலேயே இதற்கு அபரநாதமென்பது பெயர். பின்னர் இந்த அபரநாதத்திலிருந்து தத்துவங்களின் சேர்க்கையால் சொற்கூட்டமாகிய அக்கரவிந்து உண்டாகின்றது. இது அபரவிந்துவாகும். பின்னர் இந்த அபரவிந்துவிலிருந்து ஈசுவரதத்துவத்தைச் சார்ந்த சூக்கும எழுத்துக்களும் இந்தச் சூக்கும எழுத்துக்களிலிருந்து சுத்த வித்தியா தத்துவத்தைச் சார்ந்த தூல எழுத்துக்களும் முறையே உண்டாகின்றன.

இவ்வாறு சக்தி, சாதாக்கியம், ஈசுவரம், சுத்த வித்தை என்னும் நான்கு தத்துவங்களைச் சார்ந்து உண்டாகின்ற நான்கு விதமான ஒலிகள் முறையே சூக்குமை பைசந்தி மத்தியமை வைகரி என்னும் நான்கு விதமான சொற்களின் தொழில் ரூபமாய் ஒவ்வொரு ஆன்மாக்கள் தோறும் அவரவர்

*ஸ்போடம் — பொருளை விளக்கும் ஒலி.

கன்மத்தை அனுசரித்து விளக்கமடைந்து எல்லாப் பொருள் களுக்கும் வாசகங்களாகச் சித்திக்கின்றனவென்று ஊகிக்கத் தகுந்தது.

அந்தச் சத்தி தத்துவத்தில் சூக்கும போகத்தை அனுப விப்பதின் பொருட்டு அஞசிருத முதலிய பதினைந்து புவனங் களும், சதாசிவ தத்துவத்தில் தூல போகத்தை அனுபவிப் பதின் பொருட்டு சதாசிவமென்னும் பெயருடைய ஒரு புவனமும், மகேசுவர தத்துவத்தில் சூக்கும போகத்திற்காக வும் அதிகாரத்திற்காகவும் அனந்தம் முதலிய எட்டுப் புவனங் களும், சுத்த வித்தியாதத்துவத்தில் தூலபோகத்திற்காகவும் தூல அதிகாரத்திற்காகவும் மனோன்மனி முதலிய ஒன்பது புவனங்களும் இருக்கின்றன. இந்தப் புவனங்களையடைந்த மகாத்மாக்கள் தத்துவம் புவனமென்னுமிரண்டு ரூபங்களான சூக்கும தூல தேகமுடையவர்களாய் அத்தகைய மிக அழகு பொருந்திய மாலை சந்தனம் பெண் முதலியவைகளுடன் மிகவும் அதிகமான போகத்தையுடையவர்களாய் சிவானந் தானுபவத்துடனும் கூடி விளங்குகின்றார்களென்பது கூறவா வேண்டும்?

மூன்றாவது பதி பரிச்சேதம் முற்றிற்று.

[பதிப்பாசிரியர் குறிப்பு: ஸ்ரீ சூரிய சிவாசாரியாரால் இயற்றப்பட்ட சைவ சித்தாந்த பரிபாஷை என்னும் இந்த நூலின் முதல் இரு பரிச்சேதங்கள் முறையே 1982, 1983-84 ஆண்டு மலர்களில் பிரசுரிக்கப்பட்டன. மூன்றாவது பரிச் சேதம் இந்த ஆண்டு பிரசுரிக்கப்படுகிறது. எஞ்சிய பகுதிகள் தொடர்ந்து அடுத்து வரும் ஆண்டு மலர்களில் பிரசுரிக்கப் படும்.]

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# சிலம்பில் சிவம்

[பனசை. சுவாமிநாதன், எம். ஏ., பி. எட்.]

முன்னுரை:- ''நெஞ்சை யள்ளும் சிலப்பதிகாரம் என்றோர் மணியாரம்'' என்று சிலப்பதிகாம் தமிழ்க் கவிஞர்களால் போற்றப் பெறும் பாங்குடையது. குடிமக்கட்காப்பியம், ஒற்றுமைக்காப்பியம், உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்றும் எடுத்து வழங்கப்பெறும் 'சிலம்பு' என்னும் இச்சிலப் பதிகாரத்தை நல்கியவர் இளங்கோவடிகள் ஆவர். இக்கடலில் மூழ்கி ஆய்வுமணிகளை அள்ளி அள்ளி வழங்கிய ஆய்வாளர் பலர்.

சைவநீதி:- 'மறை முதலாம் சைவம்,' 'திவ்வியம் பழுத்த சைவம்,' 'ஓரும் வேதாந்தமென்றுச்சியில் பழுத்த ஆரா இன்ப அருங்கனி' என்பன சைவ சமயம் பற்றிய அருளாளர்களின் வரையறைகள் — கணிப்புகள் — கண்டு காட்டல்கள் ஆகும். உலகின் பழமை மிக்க, தொன்மை மிக்க சமயமும் அதுவே ஆகும்.

ஒப்பு நோக்குச் சிந்தனை:- எல்லாப் பொருளிலும் கலந்தும், கடந்தும், 'கடவுளாக' விளங்குகின்ற இறைவன் அநாதியான பரம்பொருள். அவன் ஆதியும் அந்தமும் இல்லாத அரும் பெருஞ்சோதி; முன்னைப் பழமைக்கும் பழமையாய், பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் விளங்குபவன். இவ்வகை மாட்சிமைகளையுடைய இறைவனாகிய சிவபிரானையும், சைவ

சமயத்தையும் இச்சிலம்புக்காப்பியத்துள் பருந்தின் வீழ்வு நோக்கிலும் அரிமா நோக்கிலும் அமைந்தாங்கு சிந்தித்து ஒப்பு நோக்கி எடுத்துரைப்பது இக்கட்டுரையின் நோக்க மாகும்.

நகரம்:- புவியாளும் மன்னனுக்குக் கோநகர் உண் டல்லவா? நம் கண்ணுதற் பண்ணவனே அண்டமுழுவதும் தண்ணளி செய்து ஆள்பவனுயிற்றே! அவனுக்குத் தலைநகர் கிடையாதா? அதுவே இராசதானியாக அமைய வேண்டுமே!

''சீர்கொண்ட கூடல் சிவராசதானிபுரம்''

''ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே''

என்றெல்லாம் அருள் நூல்கள் அவனது கோநகர் மதுரை என்றல்லவா கூறுகின்றன. இறைவனே,

''மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவு பால்நிற வரிச்சிறகு
அன்னம் பயில்பொழில் ஆல வாயில்
மன்னிய சிவன்யான் ... ... ... ...''

எனத் 'தன்முகவரி' யை (Self-address) தெளிவாகக் கூறியுள் ளானே! அந்த நகரை, இருப்பிடத்தைச் சிலம்பு, ''அதிராச் சிறப்பின் மதுரை மூதூர்'' (பதிகம்) என அடைமொழியிட்டு மொழிவது காணலாம்.

கோயில்:- நகரம் உடைய மன்னவனுக்கு அழகிய இருப் பிடம், அரண்மனை, இருக்குமே! அதைக் கோயில் (கோ + இல்) என்று சொல்வரே! உலகு புரந்தளிக்கும் ஒரு தனி முதல் வனுக்குக் கோயில் உண்டு; அக்கோயில் அரங்கத்தைக் கொண்டது; அதுவும் வெள்ளியம்பலம் என்று போற்றப் பெறும் சிறப்பான மன்றமாகும்.

''கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியில்
வெள்ளியம் பலத்து'' (பதிகம், வரிகள் 40 – 41)

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்" (5; 69)
"ஊர்க்கோட்டம்" (9; 11)
"அருந்தெறற் கடவுள் அகன் பெருங் கோயிலும்"
(13; 137)

என இவ்வாறெல்லாம் பிறைமுடிக் கண்ணிப் பெரியவன் கோயிலை இளங்கோவடிகள் குறிப்பிடுவர்.

"ஊர்க்கோட்டம்" என்பதற்கு இறைவனூராகிய கைலாயம் நிற்கும் கோயில் என்றும்[1],

"அருந்தெறற் கடவுள் அகன் பெருங்கோயிலும்"
என்னுந் தொடர்க்கு — அரிதாகிய அழித்தற்றொழிலை வல்ல கடவுளது அகன்ற பெரிய கோயிலிடத்தும்"[2]

என்றும் அடியார்க்குநல்லார் வகுக்கும் உரைத்திறம் தனிச் சிறப்புடையது.

மலை:- "வெள்ளி வெற்பின் மேல்" என்றும், "கயிலை மலையானே" என்றும் இறைவனின் கயிலைப் பொருப்பை இலக்கியங்கள் அழகுற வர்ணித்துக்காட்டும். அந்நெறியில் சிலம்பும், "இமையச் சிமையத் திருங்குயிலாலுவத்து உமையொரு பாகத்து ஒருவனை" (28; 102- 103) என்று குறிப்பிட்டுக் காட்டும்.

இறைவனின்திருநாமம்: — இறைவனின் திருநாமத்தைச் சிலப்பதிகாரம் "பெரியோன்" என்றே உரைக்கும்.

"பெரியோன் தருக திருநுதல் ஆகஎன" (2;41)
"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்" (5;169)
"பிறைமுடிக் கண்ணிப் பெரியோன் ஏந்திய" (11;72)

திருமேனிப் பொலிவு: — இறைவன் வானாகி, மண்ணாகி, வளியாகி ஒளியாகி நிற்பவன்; அவன்தன் மேனியின் பொலிவும், அவன் அணியும் உடைகள், அணிகள் ஆகிய சிலம்பில் சிறப்புறப் பேசப்பெறுகின்றன.

நுதல் விழி நாட்டம்: — இறையோனின் நெற்றிக் கண்ணைப் பலபடப் போற்றுவது புராண மரபு. அந்நெறி நின்று சிலப்பதிகாரமும் அவனது நுதல் விழியைப் போற்றிப் பரவும்.

"கண்ணுதல் பாகம்" (12;2)
"கண்ணுதலோன்" (12—10)
"நுதல் கிழித்து விழித்த இமையா நாட்டத்து" (12;55)
"நுதல்விழி நாட்டத்து" (14; 7)

என்பன அவ்வரிகள்.

ஈர்ஞ்சடை அந்தணன்: — "அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்" என்பது திருமந்திரம். அவன் தன் சடையின் அழகு மாட்சிமையைச் சிலம்பு,

"கொன்றையஞ் சடைமுடி" (பதிகம்; 40)
"செஞ்சடை வானவன்" (26; 98)

என எடுத்தேத்தும்.

பிறைசூடி:- "பித்தா பிறைசூடீ" என்று பாடுவர் சுந்தரர். இறைவன் பிறைசூடி நிற்கின்ற பெற்றிமையை இக்காப்பிய மூம் எடுத்தியம்பும்.

"குழவித் திங்கள் இமையோர் ஏத்த
அழகொடு முடித்த அருமைத்தாயினும்" (2; 38 - 39)
"பிறைமுடிக் கண்ணி" (11; 72)
"சென்னியன், இளம்பிறை சூடிய இறையவன்"
(22; 86 - 87)

என்பன அவை.

கொன்றை முடி சூடி:- இறைவன் விரும்பியணியும் மலருள் சிறந்ததாகிய கொன்றைமலரைச் சடையில் மிலைச்சிய சிறப்பினைச் சிலம்பு, "கொன்றையஞ் சடைமுடி" (பதிகம்; 40) என்று பேசும்.

திரிபுரம் எரித்த திறம்:- முப்புரத்தை இறைவன் எரித்த வீரச்செயலை "திரிபுரமெரியத் தேவர் வேண்ட" (6; 40) என்று சிலப்பதிகாரம் குறிப்பிடும்.

நீலகண்டம்: — பாற்கடலைக் கடைந்தபோது ஆலகால விடம் தோன்ற அது கண்டு அமரர் அஞ்ச, அம்மையப்பன் அதை எடுத்து உண்டான். விடம் கழுத்திலேயே தங்கி திரு நீலகண்டமாயிற்று. இதனைச் சிலம்பு, "நஞ்சுண்டு கறுத்த கண்டி" (12; 57) என்று மொழிவது காணலாம்.

ஆனைத்தோல் போர்த்தல்: — சிலம்பு, இறைவன் யானைத் தோலைப் போர்த்தியதை "ஆனைத்தோல் போர்த்து" (12; 8) என்று பேசும்.

புலித்தோல் போர்த்தல்: — இறைவன் புலியின் தோலை உரித்துப் போர்த்தமையைச் சிலம்பின், "புலியின் உரி உடுத்து" (12; 8) என்னும் தொடர் குறிப்பிட்டுக்காட்டும்.

மங்கை பங்கமர்ந்த மன்னன்: — கலைமதியின் கீற்றணிந்த அகிலேசர் சிலைமதனைக் கண்ணழலால் செற்றார். ஆனால் மலை மகட்குப் பாகம் வழங்கினன். சிலம்பின் கீழ்க்கண்ட பகுதிகள் ஆண்மையும் பெண்மையும் கலந்த அர்த்தநாரீசத் திருக் கோலத்தைப் பலபடப் புலப்படுத்திக் காட்டுவனவாகும்.

"உமையவள் ஒரு திறனாக" (6; 42)
"கண்ணுதல் பாகம் ஆளுடையாள்" (12; 2)
"உமையொரு பாகத்தொருவனை" (28; 103)

ஆலமர்செல்வன்:- கல்லாலின் புடையமர்ந்து இறைவன் நான்குமறை ஆறு அங்கங்களின் பொருளை உணர்ந்த வல்லோர் நால்வர்க்கு இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டினன் என்பது புராணவரலாறு. இதனை,

"ஆலமர் செல்வன் பெயர் கொண்டு வளர்ந்தோய்" (23; 91)

ஆலமர் செல்வன் மகன்" (24; 15)
என்னுமடிகளில், அடிகள் குறிப்பிட்டுக் காட்டுவர்.

அனக நாடகனின் அரிய ஆடல்:- ஆடல் வல்லானுகிய நடனசபாபதி ஒரு சில குறிப்பிட்ட ஆடல்களை மன்பதைகள் உய்ய வேண்டிய ஆடியுள்ளான். அவற்றுள் கொடு கொட்டி, பாண்டரங்கம், கொட்டிச்சேதம் என்பன காணலாம்.

கொடு கொட்டி:- தேவர்கள் திரிபுரத்தை எரிக்க வேண்டி விண்ணப்பிக்க, எரிமுகத்தை உடைய பெரியதொரு அம்பு ஏவல் பணி கேட்டிட, உமையொருபாகனுக ஆடியது கொடுகொட்டி என்னும் கூத்து ஆகும்.

"திரிபுர மெரியத் தேவர் வேண்ட
எரிமுகப் பேரம்பு ஏவல் கேட்ப
உமையவ ளொருதிற னுக வோங்கிய
இமையவ னுடிய கொடுகொட்டி யாடலும்" (6; 40-43)

பாண்டரங்கக் கூத்து:- பாண்டரங்கம் என்பது பரமனின் பதினோராடலுள் ஒன்று. அது தேவர்களாகிய தேரின் முன் நின்ற பிரமன் காணும்படி பைரவி வடிவாகிய பரமசிவன் திரிபுரசங்கார காலத்தில் வெண்ணீற்றையணிந்து ஆடியது. இதனைச் சிலப்பதிகாரம்,

"தேர்முன் நின்ற திசைமுகன் காணப்
பாரதி யாடிய வியன்பாண் டரங்கமும்" (6; 44-45)

என்னுமடிகளில் நினைவுறுத்தும்.

கொட்டிச்சேதம்: — உமையவள் ஒரு திறனுக இருக்க ஓங்கிய இறைவன் ஆடிய கொட்டியாடலைக் 'கொட்டிச்சேதம்' என்னும் பெயரிட்டுப் பிறிதோரிடத்தும் அடிகள் பாடுவர்.

"திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
பரிதரு செங்கையிற் படுபறை ஆர்ப்பவும்
செங்கண் ஆயிரம் திருக்குறிப்பு அருளவும்
செஞ்சடை சென்று திசைமுகம் அலம்பவும்
பாடகம் பதையாது சூடகம் துளங்காது
மேகலை ஒலியாது மென்முலை அசையாது

வார்குழை ஆடாது மணிக்குழல் அவிழாது
உமையவள் ஒரு திறன் ஆக ஓங்கிய
இமையவன் ஆடிய கொட்டிச் சேதம்'' (28; 67-75)

வெள்ளி மன்றுள் ஆடியது: — நள்ளிருளில் நட்டம் பயின்றுடும் நாதன் வெள்ளிமன்றுள் ஆடிய சிறப்பு அடியிற்கண்டவாறு போற்றப்படுகிறது.

''கொன்றையஞ் சடைமுடி மன்றப்பொதியிலில்
வெள்ளியம்பலத்து.........'' (பதிகம்; 40-41)

அருந்தெறற்கடவுள்: — முத்தொழில் முதல் இறைவன்,
''செழும் பொழில்கள் பயந்து காத்தழிக்கும் மற்றை
மூவர்கோ ஞய்நின்ற முதல்வன் மூர்த்தி''

என்பது மணிவாசகம். அவன் அழித்தல் தொழில் செய்கின்றமையை ''அருந்தெறற்கடவுள்'' (13; 37) என்னும் காப்பியத் தொடர் குறிக்கும்.

நாதன் நாமம் நமச்சிவாயவே: ''வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது, நாதன் நாமம் நமச்சிவாயவே'' என்று திருஞானசம்பந்தப் பெருமானுல் போற்றப்பெற்ற 'நமச்சிவாய' என்னும் பஞ்சாட்சரத்தை (ஐந்தெழுத்தை) பரிந்துருகி ஏத்தி மொழிந்தால் நன்மை பெருகும், துன்பம் அகலும், இம்மை மறுமை இன்பமும் கிட்டும். அஞ்செழுத்தாம் ஆதிமந்திரத்தை, மறை மொழியை.

''அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும்
வருமுறை எழுத்தின் மந்திர மிரண்டும்''
(11, 128-129)

என்னும் பாடல் வரிகள் 'ஐந்து' என்றும் 'எழுத்தின் மந்திரம்' என்றுஞ் சுட்டிக் காட்டும். 'எட்டு' எழுத்தின் மந்திரமும் சைவர்க்குரிய மந்திரமே என்பதைப் பலர் அறியாதிருத்தல் கூடும். அதனையும் சுட்டிக் காட்டுவோம். 108 உபநிடதங்களில் பஸ்மஜாபால உபநிடதம் என்பது ஒன்று. இது திருநீறு எனப்படும் பஸ்ம மாஹாத்மியத்தை முக்கியமாக

உபதேசிக்க வந்தது. இதில் பஞ்சாக்ஷரம் ஓம் நமச்சிவாய என்றும் அஷ்டாக்ஷரம் ஓம் நமோ மஹாதேவாய என்றும் கூறப் பட்டுள்ளது.

"ஓம் இத்யக்ரே வ்யாஹரேத், நம இதி பச்சாத், மஹா தேவாயேதி பஞ்சாக்ஷராணி" என்பது இவ்வுபநிடத வாக்கி யம். இதன் பொருள் 'ஓம்' என்று முதலில் கூறுக. 'நம' என்று பின்னர், (அதற்கு மேல்) 'மஹாதேவாய' என்னும் ஐந்து எழுத்துக்கள் என்பதாம். இதனைச் சேர்த்து வாசிக்கும் போது 'ஓம் நமோ மஹாதேவாய' என்று வரும். பிரணவம் உள்ளிட்ட எட்டெழுத்து மந்திரம் இதுவாகும். எனவே "அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும், வருமுறை எழுத்தின் மந்திரமிரண்டும்" என்று சிலப்பதிகாரம் கூறுவது மேலே காட்டிய ஓம் நமச்சிவாய, என்ற பஞ்சாக்ஷரமும், ஓம் நமோ மஹாதேவாய என்ற அஷ்டாக்ஷரமும் ஆகும் என்று அறிந்து இன்புறுக.

சிவபரத்துவம் :- இதுகாறும் சிவபெருமான், அவன் நகரம், கோயில், மலை, அருட்செயல்கள், ஆடற்சிறப்புகள் ஆகியனபற்றிக் கண்டோம். இவையோடன்றி, வேறு ஒரு சிறப்பான குறிப்பும் காப்பியத்துள் காணக்கிடக்கின்றது. அதுதான் பரம்பொருளின் உயர்தனி முதன்மையை, மூவர் கோனாக நின்ற முதன்மையை, மூதாதையாந் தன்மையை அதாவது சிவபரத்துவ மேன்மையைச் செப்புவதாகும்.

பத்தினித்தெய்வத்துக்குக் கோயில் கட்டக் கல் எடுக்க வும், தமிழரசரை இகழ்ந்த வடவாரிய மன்னரைப் புறங்காண வும் சேரன் செங்குட்டுவன் வஞ்சி மாலையணிந்து போர்க்குப் புறப்படுகின்றான். ஆனால் வெற்றிக்கு முதன்மையாக — அனைத்துச் செயலுக்கும் ஆதாரமாக - உள்ள சிவபெருமானின் திருவடிகளை முடிமேல் சூடுகின்றான்.

"நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி
உலகுபொதி உருவத்து உயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலையொடு புனைந்து

இறைஞ்சாச் சென்னி இறைஞ்சி வலங்கொண்டு
மறையோர் ஏந்திய ஆவுதி நறும்புகை
நறைகெழு மாலையின் நல்லகம் வருத்தக்
கடக்களி யானைப் பிடர்த்தலை ஏறினன். (26; 54-60)

அச்சமயம் பாம்பணையில் பள்ளி கொள்ளும் திருமாலின் சேடத்தை (பிரசாதம்) சிலர் கொண்டு வந்து சேரனைப் போற்றி செய்தனர். சிவபெருமானின் திருவடி தங்குந்தலை யாகலின் திருமாலின் சேடம் அங்கு இடம் பெறுதல் தகுதி யுடையதாகாது. எனவே அதனை வாங்கித் தன் தோளில் தரித்தனன். இவ்வரலாற்றை,

"குடக்கோக் குட்டுவன் கொற்றம் கொள்கென
ஆடக மாடத்து அறிதுயில் அமர்ந்தோன்
சேடங் கொண்டு சிலர்நின்று ஏத்தத்
தெண்ணீர்க் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்
ஆங்கது வாங்கி அணிமணிப் புயத்துத்
தாங்கினன் ஆகித் தகைமையில் செல்வுழி" (26; 61-61)

என்ற காப்பியப்பகுதி பறை சாற்றும். இதனால் சேரன் செங்குட்டுவனது சிவப்பற்றும் இதன் வழி சிவபரத்துவமும் நிறுவப்படுகிறது.

சிலப்பதிகாரம் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர் கள் பதிப்பில் நூலாசிரியரான இளங்கோ அடிகள் வரலாறு என்னும் தலைப்பிட்டு அவர்கள் அடிகளது சமயம் பற்றி ஆய்ந்து வெளியிட்டுள்ள பகுதியை[4] ஈண்டு ஒப்பு நோக்கல் தகுதியாகும்.

'நிலவுக் கதிர் முடித்த........இறைஞ்சி வலங்கொண்டு' எனவும், "ஆடகமாடத்தறிதுயில் அமர்ந்தோன்.........அணி மணிப்புயத்துத் தாங்கினன்" எனவும், 'செஞ்சடை வானவன்' எனவும், "ஆனேறு ஊர்ந்தோன் அருளினில் தோன்றிய" எனவும் கூறியிருத்தலால் இவரது சமயம் சைவம் என்று

தோன்றுகின்றது. "குணவாயிற் கோட்டத்து" என்பதில் கோட்டம் என்றதற்கு 'அருகன் கோயில்' என்று அடியார்க்கு நல்லார் பொருள் செய்திருத்தலையும், இந்நூலில் சிலவிடத்துச் சைனமதக் கொள்கையை இவர் மிகுத்துக் கூறியிருத்தலையுங் கொண்டு இவரது சமயம் சைனமென்று ஐயுறுதற்கும் இடம் உண்டு.

தொகுப்புரை: — சிலம்பில் நகை முதலாய எண்சுவைகள் இயைந்துள்ளன. கருத்துச் செறிவும் உண்டு. உவமம், உருவகம், தற்குறிப்பேற்றம் முதலிய அணியழகுகள் நிரம்பவுண்டு. இருசுடர்த் தோற்றம், நகர் வருணனை, பொழில் விளையாட்டு முதலியனவும் பேசப்படுகின்றன. ஆயினும் அவற்றையெல்லாம் பருந்தின் வீழ்வாய்ப் பாய்ந்து இறங்கி ஒதுக்கி, என்றென்றும் நின்று நிலவும் 'ஒன்றுய' பரம்பொருளின் உயர் முதன்மையை ஒல்லும் வகையான் உரைக்க முற்படுவதே இப்படைப்பின் நோக்கமாகும்.

டாக்டர் ஐயரவர்கள் வரலாற்றுக் குறிப்புரையில் "இவரது சமயம் சைனமென்று ஐயுறுதற்கும்" என 'உம்'மை கொடுத்து எழுதியுள்ளமையாலும், நூலில் சமண மதக்கருத்துக்கள் கூறப்பட்டபோதிலும், 'பெரியோன்', 'கடவுள்', 'கண்ணுதலோன்' எனப்பலவிடத்தும் சிவபிரான் திருநாமங்களும் அவன்தன் அருட்செயல்களும் பிறவும் பரக்கக் கூறப்படுவதாலும் இளங்கோவடிகளது சமயம் சைவமே என்றும், இவர் சிவபரத்துவத்திலேயே நாட்டமுடையவரென்றும் துணிந்து கூறலாம். அதற்கு, முதலும் முடிவும் முத்தாய்ப்பானதும் ஆன சான்று, சேரன்செங்குட்டுவன் சிவபெருமானின் சேவடியைத்தன் திருமுடியிலும், திருமாலின் சேடத்தைத் தன் தோளிலும் தாங்கிய சிறப்பு ஒன்றேயாகும்.

முடிவுரை :- எங்கும் எதிலும் முதலும் முடிவுமாக இருப்பவன் சிவபிரானே. அவன்தன் மாட்சிமைகள் எல்லா இலக்கியங்களிலும் வெளிப்படையாகவும், உள்ளுறைப் பொருளாகவும் கலந்துள்ளன. அவற்றில் சில கண்டுணர்ந்

தாம். எல்லாங் காணமுயன்று தற்செருக்குக் கொள்ளின் குன்று முட்டிய குரீஇப் போலவும், குரிச்சிபுக்க மான் போல்வும், இடர்ப்பட நேரிடும். அடிகள் தந்த அரிய இத்தமிழ்க் காப்பியத்துள் இசைச்சுவை முதலான நயங்கள் ஊடுருவி உள்ளது போலவே உலக முதல்வனின் ஒண்புகழும் ஒட்டி உறைகின்றது.

அடிக்குறிப்புகள் :-

1. சிலப்பதிகாரம்—அடியார்க்கு நல்லாருரை பக் : 246
2. ,, ,, ,, பக் : 348
3. ,, ,, ,, பக் : 190
4. ,, ,, ,, டாக்டர் உ. வே. சா. அவர்களின் 1968-ஆம் ஆண்டுப் பதிப்பு' இளங்கோவடிகள் வரலாறு, பக்கம்-17.

சிவம்.

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# சிவப்பிரகாசர் காட்டிய சிவப்பிரகாசம்

ஸ்ரீ ராமகதாரத்ன வே. தியாகராஜன்
சிருங்கேரி ஆஸ்தான வித்வான், சென்னை-61

காஞ்சிபுரத்தைச் சேர்ந்த குமாரசுவாமி தேசிகர் என்ற பெரியாருக்கு சிவப்பிரகாசம், வேலாயுதம், கருணைப்பிரகாசம் என்ற மூன்று புதல்வர்களும் ஞானம்பிகை என்ற புதல்வியும் பிறந்தனர். மூத்தவரான சிவப்பிரகாசர் சைவப்பற்றும் தமிழறிவும் மிகுந்தவர். சிறிதுகாலம் துறைமங்கலம் என்ற ஊரில் பிறந்த அண்ணாமலை ரெட்டியார் என்பவருடன் தங்கியதால் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் எனப்பெயர் பெற்றார். அவரது அழகிய நூல்களின் பலவித நயங்களைக் கண்டு மகிழ்ந்த சிலர் கற்பனைக்களஞ்சியம் சிவப்பிரகாச சுவாமிகள் என அழைத்தனர்.

திருவண்ணாமலையில் சிலவருடங்கள் தங்கிய போது, அத்தெய்வீகமலையை ஒரு முறை வலம் வருவதற்குள் 100 பாடல்களைப்பாடினார். கற்பனை வளம் நிரம்பிய அந்நூல் சோணசைலமாலை என விளங்குகிறது.

''சோணசைலநாதரே! திருவாரூர் பிறக்க முத்தி – காசி இறக்க முத்தி- தில்லை தரிசிக்க முத்தி- எனினும் நினைத்தாலே முத்தியளிக்கும் நின் திருவண்ணாமலைக்கு நிகரேது? ஓடத்திற்

செல்வோர் கரையடைய கலங்கரை விளக்கத்தைக் குறித்துச் செல்வர். முத்தியாகிய கரையை நோக்கி வருவோர் திரு வண்ணமலையை நோக்கி வருவர்'' என்கின்றார்.

துவக்கற அறிந்து பிறக்கும் ஆரூரும்
துயர்ந்திடாது அடைந்து காண்மன்றும்
உவப்புடன் நிலைத்து மரிக்கும்ஓர் பதியும்
ஒக்குமோ நினைக்கும் நின்னகரை?
பவக்கடல் கடந்து முத்தியங் கரையிற்
படர்பவர் திகைப்பற நோக்கித்
தவக்கலம் நடத்த உயர்ந்தெழும் சோண
சைலனே! கைலை நாயகனே!

வாழ்வெனும் வெள்ளச்சுழியில் அகப்பட்டோர் முத்தியான கரையை அடையத் தவமெனும் ஓடம் ஏறுக எனக் குறிக்கிறார்.

ஆசை காரணமாகப் பிறவியான சேற்றில் அகப்பட்டுள் ளேன். உன் கருணையான வெய்யிலால் பிறவிச் சேற்றை உலர்த்தி, எனது மனமான தாமரையை மலரச் செய்யும் ஆதவன் அன்றோ நீ! இறைவனே! உன் கோயில் கைலைமலை. உன்கையில் வில்லாக விளங்குவது மேருமலை, உன் மாமனோ இமயமலை, இத்தகைய நீ திருவண்ணமலையாகவும் காட்சி யளிக்கின்றாய் என்கிறார்.

மயலினால் அழுந்தும் பிறவியாம் அளற்றை
வளர்தரு நின்பெருங் கருணை
வெயிலினால் உலர்த்தி எனதுளக் கமலம்
விரிக்கும் ஒண்பரிதி நீயலையோ?
பயிலும் ஆலயம் ஓர்சைலம் ஓர்சைலம்
பகைப்புலம் உருக்கு கார்முகம்;ஓர்
சைலம் மாதுலனும் எனக்கொள்ளும் சோண
சைலனே! கைலை நாயகனே.

இறைவனைக் கதிரவனாகவும், அவனது அருளை வெய்யி லாகவும், நம் பிறவியைச் சேறாகவும், மனத்தை தாமரைக்கு

உவமை கூறுவதுடன், இறைவனுக்கு மலைகள் எந்தெந்த விதங்களில் பயன்பட்டன என்பதை வெகு நயத்துடன் விவரிக்கிருர்.

"மலை போன்ற தெய்வத்திற்கு மலையளவு நாம் செய்ய முடியுமா? கடுகளவு தான் செய்ய முடியும்" என்பர். திருவண்ணமலையே இறைவன். மலையான அப்பெருமானுக்கு அடியார்கள் நிறைய மலர்களிட்டு மலை போன்ற சாமிக்கு மலை போல மலரிட்டு விட்டார்கள் எனக்கூறுவதன் மூலம் அடியார்களின் மிகுதியைக் காட்டினர்.

பாயும்வெண் திரைசூழ் ஆழி சூழுலகில்
பழமொழி ஒழிய! மெய்யடியன்
ஆயுமென் மலர் ஓர்மலையளவு அணிய
அமர்ந்தநின் கோலம் யான்மறவேன்.

"மலையத்தனை சாமிக்கு மலையத்தனை செய்ய முடியாது" என்ற பழமொழி திருவண்ணமலையில் பொய்யாகி விட்டது என்கிருர்.

"உலகத்தவர் யாது காரணத்தாலோ, திருமணஞ்செய்து கொண்டு மணமக்கள் வணங்கும் காலத்தில் 'நல்ல ஆண் குழந்தையைப் பெற்றுக் கொண்டு நீடுழி காலம் வாழ்க' என வாழ்த்துகின்றனர். இத்தகையோர் பெண்ணின் அருமை அறியாதவர் போலும்! பெண்ணின் பெருமை உலகறியவும், பெண்ணைப் பெறுதல் அவ்வளவு உயர்ந்ததல்ல என்பவர் வெட்கும்படியாக, பர்வதராசன் உன்னை மகளாகப் பெற்றுப் பெருமை கொண்டான்" எனப் பெண்மக்களைப் பெறுவதும் உயர்வே என்ற கருத்தையமைத்து பெரியநாயகியார் கலித்துறை என்ற நூலிலே பாடுகிருர்.

கற்ருர்அறிவார் மக்கள் தப்பேறு எனக் கட்டுரைத்த
சொல்தான் ஒருபெண் ஒழித்த தென்பாரொடு
தொல்லுலகில்

நற்ருண் மகப்பெறுக என்றுஆசி சொல்பவர்நாணஉனைப்
பெற்ருன் மலையரையன் குன்றை வாழும் பெரியம்மையே.

"என் மனம் ஒரு காடு போன்றது. அதில் ஆசையான தீயும், கோபமான புலியும், சிற்றின்ப மென்னும் மதயானையும் உள்ளன. இத்தகைய மிருகங்கள் நிறைந்த காட்டிற்குள் வர பயமாயிருக்கிறதா! அன்னையே! கையில் நெருப்பை வைத்துக் கொண்டு ஆடுபவரும், புலித்தோலை அரைக்கசைத்து யானைத் தோலைப் போர்த்துக் கொண்டுள்ளவருமான உனது நாயகனுடன் வருக!"

காம மென்கின்ற கதுவு வெந்தீயும்
கடுஞ்சினம் எனப்படும் புலியும்
களிப்பெறும் சிறுகண் புகர்முகப் புழைக்கைக்
கரையடிக் களிநல் யானையுமே
தாமிகும் எனது மனமெனும் வனத்தில்
தனிவரல் வெருவினையாயின்
தழலினின் ருடிப் புலிகரி யுரிபோர்
தடுத்தஆண் துணையொடு வருக!

என அம்மையப்பஞக இறைவனைக் காணும் தமது ஆவலை வெளிப்படுத்துகிருர் தமது பெரியநாயகியம்மை விருத்தத்திலே.

பிற்காலத்தில் மகாவித்துவான் திரிசிரபுரம் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் இதே கருத்தை "அடியேன் கொடியவன் என்று என் முன் வர அச்சமாயிருந்தால் யமனையே எட்டி உதைத்த உனது நாயகனுன சிவபெருமானுடன் வருக. உலகத்தின் துணையான அவன் உனக்கும் உற்ற துணையாவானே!" என்ற கருத்தை

அடியனேன் கொடியன் என்றுமுன் வருதற்கஞ்சினை.
என்னின் வெங்கூற்றம்
மடியமுன் உதைத்தான் துணையடைந்தேனும்
வருதி மற்று அது நினக்கரிதோ?

எனத் தனது அகிலாண்டநாயகி மாலையில் பாடுகிருர்.

சிவப்பிரகாச சுவாமிகள் செய்த மற்றொரு பெரிய காரியம் உண்டு. தமது ஆசிரியரின் கட்டளையால், திருச்செந்தூரில் எல்லா வித்துவான்களையும் ஏளனம் செய்து கொண்டு தருக்குடன் விளங்கிய ஒரு வித்துவானிடம் சென்று, உதடுகள் ஒட்டாத வண்ணம் முப்பது பாடல்களைப்பாடி அவரைத் தோல்வியடையச் செய்தார். திருச்செந்தூர் முருகப்பெருமான் மீது பாடப்பெற்ற அந்நூல் திருச்செந்தில் நிரோட்ட யமக அந்தாதி என இன்றும் விளங்குகின்றது. மேற்படி அந்தாதியில் ஒரு பாடலைக் காண்போம்.

கணக்காக நாய்கடின் காயநிலையெனக் கண்ணியென்ன
கணக்காக நானலைந் தெய்த்தேன் எழிற்செந்திற் கந்த நெற்றிக்
கணக்காக ஞர்தந்த நின்றனையே யினிக்காதலினுற்
கணக்காக ஞநிகர்த்தேயழி அங்கத்தின் காதலற்றே.

(இந்தப் பாடலைப் பாடிப் பாருங்கள் - உதடுகள் ஒட்டாது - இதை இதழகல் அந்தாதி என்றே குறிப்பர்).

இதன் பொருள்

கணக்காகம் = காக்கைக்கூட்டமும், நாய்களும் தின் காயம் = உண்கின்ற உடலை, நிலையென்று (கண்ணி) நினைத்து, என்ன கணக்காக நான் அலைந்து (எய்த்தேன்) இளைத்தேன். எழில் செந்திற் கந்த! நெற்றிக்கண் அக்கு ஆகனார் = நெற்றிக் கண்ணையும் எலும்பணிந்த உடலுமுடைய சிவனார் தந்த நின்றனையே! = உன்னையே. இனிக் காதலினால் = விருப்புடன் க(ண்)ண = தியானிக்க, கா = காத்தருளுக. கனாநிகர்த்த = ஸ்வப்னம் போன்ற, அழி அங்கத்தின் காதல் அற்றே = அழிகின்ற உடம்பின் மீதுள்ள விருப்பம் நீங்குவேனாக.

கருத்து :- அழியும் உடம்பின் மீது வைத்துள்ள என் ஆசையை நீக்கிக் காத்தருள்க.

சிவப்பிரகாச சுவாமிகள் 32 நூல்கள் வரை அருளியுள்ளார்கள். திருக்காளத்தி புராணத்திலுள்ள கண்ணப்பர், நக்கீரர் வரலாறுகள் இப்பெரியார் அருளியவை. நாட்டில் மறைந்துள்ள பல சுவை மிகுந்த நூல்களில் சில சிவப்பிரகாச சுவாமிகளுடைய நூல்களும் உண்டு. அறிஞர் பெருமக்கள் இத்தகைய நூல்களை ஆராய்ந்து பதிப்பித்து வெளியிடுவது தமிழுக்கு மேலும் வளந்தருவதுடன் இப்பெருமக்களையறிய உதவுவதுடன் தமிழின்பத்தை மக்களுக்கு அதிகமாக உண்டாக்கும். நம் நூல்கள் பல நானிலத்தில் பரவத் தமிழ்த் தெய்வமான ஆலவாயப்பனும் அங்கயற்கண்ணியும் அருளுக.

தடவரை முனிவன் ஈன்ற தமிழ்க் கொழுங் குழவிதன்னை
படர்வெயில் உமிழுஞ் சங்கப் பலகையாம் தொட்டிலேற்றி
நடைவர வளர்த்தும் ஞால நனந்தலை மறுகின்விட்ட
மடனறு புலமையோரை மனத்துயான் நினைத்துமன்றே.

இமயத்தின் எல்லை கண்ட
எந்தாய் மொழி வாழ்க!

வாழிய தமிழ் மொழி வாழிய வடமொழி
வாழிய பிற மொழியே.

---

## சோகாமாஏவாதா

சோகாமா ஏவாதா சொல்லின்மனைக் கூட்டியுமை
பாகார்ந்த தில்லைப் பரமேசர் - வாகாய்த்
தரித்தார் எரித்தார் தறித்தார் உதைத்தார்
உரித்தார் கணைபடைத்தார் ஊர்க்கு.

(காளமேகப்புலவரின் இப்பாடலுக்குப் பொருள் விளங்காவிடில் இதே மலரில் வேறு ஒரு பக்கத்தில் கண்டு அறிந்து மகிழுங்கள். — பதிப்பாசிரியர்)

சிவம்

Sivamayam
Sri Mahadevajayam



# AN IDEAL TEMPLE-PRIEST

(A short story by Sri K. G. Mallya)

After offering a collective prayer, the trustees of the temple went to the conference chamber to chalk out the programme during the forthcoming car festival spread over five days.

As soon as everyone sat down comfortably, Venkanna, one of the trustees, stood up and said, "Friends, as usual the first day's pooja to the deity will be offered by me and I will bear all the expenses!" Before he finished his last word, from the opposite seat, suddenly Ramanna, another trustee, stood up and said, "Friends, this time, the first day's pooja should be mine. Why should Venkanna have that privilege every year? When all of us are trustees of equal standing, it should be the privilege of everyone to have it by turn!"

"But," Venkanna said, "you know, ever since the temple is here it has been the tradition of our family to

bear the expenses of the first day's pooja. My grandfather did it. My father followed it and I have been carrying on the tradition for years. Please don't come in the way! If you like, offer the pooja on the next day as usual!"

But Ramanna seemed adamant. Raising his voice he shouted: "A temple is a public institution. Nobody should have any right or monopoly here!" The other trustees looked at each other, surprised.

"Why?" An elderly person among them asked, "why should there be so much of competition?"

But .... I don't allow him to have it this time!" a stubborn Ramanna said.

"I too will not allow you to have it!" an equally stubborn Venkanna retorted.

A few joined Ramanna's side and the remaining trustees Venkanna's. For the first time a split came to surface and trying to avoid it, the elderly trustee Ranganna advised, "Brothers, this is a temple—the sacred place of worship. There should not be any rivalry or 'politics' here. You must know God is someone above all these pettymindedness!" But his words were drowned in their shouts. With tears in his eyes, Ranganna said again, "Brothers, Shiva came and dwelt in this temple listening to the prayers of our forefathers. When you quarrel like this I am afraid he may even leave this place for ever. Pray don't quarrel! God blesses peace-loving people and curses the quarrelsome ... !"

"But, the first day's pooja is the right of my family! I don't want to renounce it!"

"Let me see how you'll exercise your right!" Again a challenge! After some time the exchange of hot words, turned into personal abuses and the meeting was wound up abruptly with an announcement from both the sides, "There will not be any car festival this year!"

Ranganna went to the priest and said, "Bhattre, this time there will be no car festival !"

"Why?" Priest Keshava Bhatta asked greatly astonished.

"You know, these trustees, Venkanna and Ramanna, are rivals in their trade. They brought personal rivalry into the temple, barked like dogs and made a mess!"

"But how can you stop the car festival?" Keshava Bhatta asked innocently: "It is an annual feature and people from all the nearby villages come in hundreds. Will they not become unhappy and go back disappointed if there is no festival?"

"But, Bhattre," Ranganna said, "You know both of them are giants. All these years they are the two persons who have been sharing all the expenses equally! When they are quarrelling among themselves who can bear the expenses and have the festival?"

"But the festival cannot stop!" Looking fixedly at the *Shivalinga* the priest declared: "My Shiva will have the festival as usual. I want this village should prosper and I want more and more people should visit the temple and win His grace ... !"

Ranganna asked, "How are you going to have it?"

"He will guide if He desires! After all we are only instruments in His hands!"

To Ranganna it seemed a mystery.

Waving camphor Keshava Bhatta finished the afternoon pooja and in a dejected mood returned home.

"Why do you look so sad today?" his wife, Saraswati asked.

"What can I say?" Keshava Bhatta told in a voice full of agony: "The trustees quarrelled among themselves and decided not to have the annual car festival !"

"What?" she gaped unbelievingly: "No car festival? How can they treat God like that?"

"That's what I am telling! Everybody knows all about Lord Shiva's prowess. If He opens His third eyes out of anger all the three worlds will be reduced to ashes in a moment. Because of their wealth those merchants must have become blind to this very fact ...."

"But, you know," Keshava Bhatta slowly said, after sometime "I have challenged that we are going to have the festival at all cost!"

"That is a good decision!"

"Yes! But we must have money—at least Rs. 2,500 for flowers, festoons, fire-works and feasts!"

"Why do you worry! God is always great! He may give us later in a different form. Come on, take this!" Saying so without any delay Saraswati took out her gold bangles, ear rings, chain and even the sacred 'thali.'

Keeping them before him, she said, "Kindly sell and from the sale proceeds organise the car festival!"

Keshava Bhatta did not believe his eyes! He looked at his wife fixedly and then putting them together in his shawl went straight to the goldsmith.

As usual, the car festival—the annual event in the village—drew huge crowds but none of the trustees except Ranganna participated.

The decorated idol of Lord Shiva was taken out in a grand procession and at night it was seated on the tall "Brahma Ratha" and hundreds of villagers drew the 'ratha' around the temple. Clay lamps adorned the temple 'gopuram' and the fire works were a big attraction In a jovial mood everyone invoked the blessings of Lord Shiva. After the night-long programme, the idol was taken back to the *Sanctum sanctorum* and kept back on the usual pedestal below the *Shivalinga.* To mark the end of the celebrations when camphor was waved in the early morning, Keshava Bhatta's eyes became wet. He prostrated before the deity and said, "Lord, you have done it! But what about the next year if these trustees behave like this? Why can't you grant them wisdom?"

The month of Vaishakha fled away and with it the summer, too. In Ashadha the rainy season set in. In the beginning there were light showers and after a week, without any pause it started raining heavily, with frequent thunder and lightning The sky remained overcast and there was no trace of the sun. Braving the rain, however, Keshava Bhatta was going to the temple regularly to offer pooja three times a day.

After four days suddenly the villagers found that the river bordering the village had swollen, and in all its fury the flood waters had started entering the village. As they watched, minute by minute the water level rose and before long there was water everywhere.

To save their lives, the villagers ran to a nearby hill leaving behind everything.

Next three days there was torrential rain. And from the top of the hill the villagers could see their entire village looking like a vast lake. Everything was under water except the Gopuram of the temple!

At that moment of crisis everybody remembered Shiva and Keshava Bhatta looking fixedly at the Gopuram offered prayer after prayer invoking Shiva's grace but the rain seemed unrelenting.

An elderly person openly declared that it was Shiva's fury that had brought in so much of calamity to them. The two trustees Venkanna and Ramanna remembered that fateful day when they quarrelled in the temple. "Oh God, forgive us this time! We shall never repeat it again!" They repented!

On the tenth day the rains receded and so also the flood waters. By evening the tide had rolled back and the villagers climbing down the hill slowly entered the village. Though the entire village was under water, they were amazed to see that the flood had not caused much damage and almost everything was intact! "All this could be possible only because of Shiva's grace!" they thought and to offer Him prayers collectively the villagers enthusiastically walked towards the temple led by Keshava Bhatta. But when they reached the temple square, all their enthu-

siasm vanished as, to their sight came only the 'gopuram' of the temple standing on four robust pillars and everything else—the *Shiva linga*, the idol of Shiva, lamps, candelabras—had been washed away, beyond anybody's imagination!

"Shiva! Shiva! What is this!" Keshava Bhatta was about to swoon away when all others bowed down their head knowing not what to do!

"Shiva, I never thought that you would do it!" Keshava Bhatta lamented, "What made you leave all of us? Did you observe that we are not sincere and earnest in our devotion to you?"

Ranganna came forward and consoled, Bhattre, Shiva's kindness has no limit. See, how he spared everybody's home while allowing His own to be washed away! Let all of us join together, rebuild His temple and instal another *Shiva linga*!"

"Yes! Yes! We will do it! Hara! Hara! Mahadeva!" Everybody cheered. But Keshava Bhatta felt that he had lost his heart. For a while he spoke not a word. After some time in a feeble tone he said, "Saraswati, without Shiva I can't live. The villagers have banished and rendered Him homeless....!" One by one the villagers left the place but Bhatta thought of staying on there.

A month elapsed. The trustees thought of reconstructing the temple. Cart-loads of sand, granite, lime, timber and other things were brought and stored. In the meantime, Keshava Bhatta was spending sleepless nights.

It was a full moon's day and the sky was clear and the full moon was shining in all splendour. Bhatta sat

watching the moon and when the moon had crossed the middle of the sky he developed a strange urge : "Without Shiva I must not live on and let me commit suicide!" He stood up and thought of plunging into the river: "Yes! Let me jump into the same river that swallowed my Shiva!"

He decided and ran to the river! On reaching the bank full of trees and shrubs he stood there for a while looking at the water flowing gently reflecting thousands of moons. He got down the bank chanting "Shiva! Shiva!" and his feet touched warm water. Chanting he waded further and further into the water getting deeper and deeper and when the water touched his shoulder, suddenly his right leg touched something beneath. With his fingers he held his nose tightly lest water should enter his nostrils and went down in the water to find out what it was. His fingers ran on a smooth object and before long Keshava Bhatta could feel and recognise what it was!

He stood erect jubilantly and shouted cheerfully: "How fortunate I am to find out my Shiva secretly hiding here! Shiva, are you really angry with us?"

With both of his arms he devoutly pulled the large *Shiva linga* to the bank and, sending high joyous shouts about the find, he ran to the village!

*Editor's Note*: We have great pleasure in reproducing here, for the benefit of our readers, this story from Bhavan's Journal, VOL. XXIV, No. 13, Jan. 29, 1978, with grateful acknowledgements, original title of this story is "THE DELUGE". —ANGIRASAN)

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# வில்லி பாரதத்தில் சிவபிரான் பெருமை—1

சங்கரனடிமை ஆங்கிரஸ சர்மா

வில்லிபாரதம் என்பது வில்லிபுத்தூரார் எனவும் வில்லி புத்தூராழ்வார் எனவும் வழங்கப்படும் ஒரு பெரும்புலவரால் இயற்றப்பட்ட தமிழ் பாரத நூல் ஆகும். வடமொழியில் வேதவியாஸர் என்ற மாமுனிவரால் ஆக்கப்பட்ட மஹா பாரதம் என்ற பேரிதிகாசத்தை இப்புலவர் பெருமான் தமிழ் விருத்தப்பாக்களினால் பாடியுள்ளார். வால்மீகி ராமாயணத் தைத் தமிழில் பெருங்காப்பியமாகப் பாடிய கம்பர், கவிக் கூற்ருகவும் கதாபாத்திரங்களின் வாயிலாகவும், எங்ஙனம் சிவபிரான் பெருமையைப் பாடியுள்ளார் என்பதைக் கிருட்டின கிரிப் பேராசிரியர் வித்துவான் திரு பெ.கு. வரதராசனுர் அவர் கள் சில ஆண்டுகளாக நமது மலர்களில் தொடர் கட்டுரைகள் மூலம் விளக்கி வருவதை வாசகர்கள் படித்து இன்புற்று வரு கின்ருர்கள். அதே முறையில், வில்லிபுத்தூராழ்வார் தாம் மிக அழகாகப் பாடியுள்ள பாரதக் காப்பியத்தில் தம் கூற்ரு கவும் பாத்திரங்களின் கூற்ருகவும் சிவபிரானை எங்ஙனம் போற்றிப் பாடியுள்ளார் என்பதைக் காட்டுவதே இக்கட்டுரை யின் நோக்கம். இவ்வாராய்ச்சியும் தொடர் கட்டுரைகளாகத் தொடர்ந்து சில ஆண்டு மலர்களில் பிரசுரிக்கப்படும்.

வில்லிபுத்தூரார் நடுநாடென்று வழங்கிய திருமுனைப்பாடி நாட்டில் (இப்பொழுதைய தென்னுற்காடு மாவட்டம்) வீர ராகவாசாரியார் என்ற திருமண் இடும் வைணவப் பிராமண ருக்குக் குமாரராய்ப் பிறந்தவர். இவரது இயற்பெயர் வில்லி புத்தூராழ்வார் என்பதாம். இவர் கல்வி கேள்விகளில் மிக்க வராய், அக்காலத்தில் கல்விச் செருக்கடைந்திருந்த புலவர் களைத் தம் பெரும் புலமைத் திறத்தால் வென்று அவ்வெற்றி யின் சின்னமாகத் தோற்றுப்போன புலவர்களின் காதுகளைத் துறட்டுக் கோலால் மாட்டியிழுத்து அறுத்துவந்தார் என்ற வொரு செய்தியும் "...குறும்பியளவாய்க் காதைக் குடைந்து தோண்டி, எட்டினமட்டறுப்பதற்கோ வில்லியில்லை...." என்ற ஒரு தனிப்பாடற்பகுதியால் தெரிய வருகிறது. பின்னர் இவர் அருணகிரிநாதரோடு அவர் பாடிய கந்தரந்தாதிக்குப் பொருளுரைக்கும் போட்டியில் ஈடுபட்டு அவரிடம் தோற்றுப் போனுர் என்றும் தெரிய வருகிறது. இவரது காலம் கி. பி. பதினுன்காம் நூற்ருண்டின் பிற்பகுதியாம் என்று கூறுவர்.

இத்தகைய பெரும் புலவராகிய வில்லிபுத்தூராரை, அக் காலம் திருமுனைப்பாடி நாட்டை வக்கபாகை என்னுமூரைத் தலைநகராகக் கொண்டு அரசுபுரிந்து வந்த வரபதியாட் கொண்டான் என்னுமரசன் தனது அவைக்களப் புலவராக்கி ஆதரித்து வந்தான். அங்ஙனமிருக்கையில் ஒரு சமயம் அரசன் வடமொழியில் வியாஸ முனிவரால் மிக விரித்துரைக்கப்பட்ட மஹாபாரதத்தைச் செந்தமிழில் விருத்தப்பாக்களால் சுருக்க மாக ஒரு காப்பியமாகப் பாடவேண்டுமென்று இவரைக் கேட்டுக்கொள்ள அவ்வண்ணமே இவர் சொற்சுவை, பொருட் சுவை மிக்க நாலாயிரத்து முன்னூற்று முப்பத்தியாறு பாடல் களினுல் இந்நூலைப் பாடினுர் என்று கூறுவர். [இவர் இந் நூலைப் பாடியது பற்றி வேறு வகையான கதையும் வழங்கு கிறது. நமது ஆராய்ச்சிக்கு அக்கதை மிகையாதலால் இங்குக் குறிப்பிடாது விடுத்தோம்].

வில்லிபுத்தூராருக்கு திருக்குறள் சொன்ன முறையில் மகன் தந்தைக்காற்றும் உதவியைச் செய்த குமாரர் வரந்

தருவார் (வரதன் என்ற வடமொழிச் சொல்லின் தமிழாக்கம்) இருந்தார். பெரும் புலவராய்த் திகழ்ந்த வரந்தருவார் தமது தந்தையாரின் அரிய நூலுக்குச் சிறந்ததொரு பாயிரம் வழங்கித் தந்தையைச் சிறப்பித்துத் தானும் புகழ் பெற்ருர். இருபத்துநாலு பாடல்கள் கொண்ட இப்பாயிரத்தில் ஒரு பாடலில் சிவபிரான் பெருமையையும் அப்பெருமையை உலகறியக் காட்டிப் பாடிய தேவார ஆசிரியர் மூவரையும் வாய் கொள்ளாமல் போற்றிப் புகழ்ந்துள்ளார். இதோ அப் பாடல்:-

பாவரும் தமிழால் பேர்பெறு பனுவல்
பாவலர் பாதிநாள் இரவில்
மூவரும் நெருக்கி மொழிவிளக்கு ஏற்றி
முகுந்தனைத் தொழுதநன் ஞடு:
தேவரும் மறையும் இன்னமும் காணுச்
செஞ்சடைக் கடவுளைப் பாடி
யாவரும் மதித்தோர் மூவரில் இருவர்
பிறந்தநாடு இந்த நன்ஞடு.

(சிறப்புப்பாயிரம், 9-ம் பாடல்)

இப்பாடலில் முதலிரண்டு அடிகளில் முதலாழ்வார்கள் எனப்படும் மூன்று வைணவ ஆழ்வார்களைச் சிறப்பித்தார். வைணவராகிய வரந்தருவாருக்கு இது தக்கதே. மூன்ரும் அடியில் சிவபிரானை "தேவரும் மறையும் இன்னமுங் காணுச் செஞ்சடைக் கடவுள்" என்று இவர் பாடியது தான் குறிப்பிடத் தக்கது. திருமாலும் நான்முகனும் தேடி அடிமுடி காணுத சிவ பெருமான் என்ற குறிப்பு தேவரும் என்ற சொல்லால் பெறப் படுவது காண்க. "காணுச் செஞ்சுடர்க் கடவுள்" என்று ஒரு பாட பேதமுண்டு. இப்பாடபேதப்படி இக்கருத்து மேலும் உறுதிப் படுகின்றதன்ருே? "திருமாலும் நான்முகனும் தேர்ந் துணராது அன்று அங்கு, அருமாலுற அழலாய் நின்ற பெருமான்" என்ற சேரமான் பெருமான் நாயஞரின் வாக்கை நினைவு கூறச் செய்கின்றதன்ருே? மேலும் இவர் இப்பாடலில் திருமாலைக் குறிப்பிடும் போது 'முகுந்தனைத் தொழுத' என்று

பெயர் மட்டுமே கூறி, சிவபிரானைக் கூறும் போது 'தேவரும் மறையும் இன்னமுங் காணுச் செஞ்சடைக் கடவுள்' என்று சிறப்பித்துக் கூறியது இவரது மெய்ப்பொருள் உணர்ந்த உள்ளத்தைப் புலப்படுத்துகின்றதல்லவா?

அடுத்த நான்காமடியில் அந்தக் கடவுளைப் பாடி அதன் காரணத்தால் யாவராலும் மதிக்கப் பெற்ற மூவரில் இருவர் பிறந்த நாடு என்று திருமுனைப்பாடி நாட்டைச் சிறப்பிக்கின்ருர். மூவர் என்றது திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியவராம். இவர்களில் இருவராகிய அப்பரும், சுந்தரரும் இந்த நாட்டிலே அவதரித்தவர்கள். இவ்விருவரும் அவதரித்த காரணத்தால் அந்த நாடு பெருமையடைந்தது என்பது புலவரின் பாடற்கருத்து. இக்கருத்து சேக்கிழார் பெருமானின் கீழ்க்கண்ட பாடலின் பொருளை ஒத்து இருப்பதும் கண்டு இன்புறுக. இதனுல் இப்புலவர்பெருமான் சிவபிரானை எந்த அளவுக்குப் போற்றுவதில் ஈடுபட்டு இருந்தார் என்பது மட்டுமல்லாமல் மூவர் முதலிகளது தேவாரப் பாடல்களையும், சேக்கிழார் பெருமானின் பெரிய புராணத்தையும் நன்கு கற்றுத் துறைபோனவர் என்பதையும் ஊகித்து உணரலாம். திருமுனைப்பாடி நாட்டினைப் போற்றிய சேக்கிழாரின் தெய்வ மணங் கமழும் பாடலையும் இதோ பாருங்கள். இதனை அடியொற்றியது போலிருக்கும் கருத்துடைய வரந்தருவார் பாடலுடன் ஒப்பிட்டு மகிழுங்கள்.

மறந்தருதீ நெறிமாற மணிகண்டர் வாய்மை நெறி
அறந்தருநா வுக்கரசும் ஆலால சுந்தரரும்
பிறந்தருள உளதாஞல் நம்மளவோ பேருலகில்
சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடுஞ் சீர்ப்பாடு.

திருநாவுக்கரசரும் (அப்பர்) சுந்தரரும் பிறந்ததனுல் திருமுனைப்பாடி நாட்டுக்குப் பெருமை என்ற இப்பாடற் கருத்தைத் தான் மூவரில் இருவர் பிறந்த நன்ஞடு எனத் தம் பாடலில் வரந்தருவார் போற்றிஞர் எனக் கொள்க.

மகனுராகிய வரந்தருவாரது உண்மையறிவையும் சிவ பிரானையும் அவனடியார்களையும் மனமாரப் போற்றும் உயர்ந்த பண்பினையும் சிறிது கண்டோம். இனித் தந்தை யாராகிய நூலாசிரியர் வில்லிபுத்தூராரின் பாரதப் பெருங் காப்பியத்துள் நுழைந்து ஆண்டுக் கமழும் சிவமணத்தை நுகர்ந்து ஆனந்தமடைவோம். அதற்கு முன்னுகச் சில செய்திகளை நாம் நினைவிற் கொள்வது நலம். சைவர் எனக் கருதப்படுகிற கம்பர் தாம் பதினுயிரம் பாடல்களில் பாடிய இராமாயணத்தில் சிவபிரானை 395 பாடல்களில் குறிப்பிட் டுள்ளார். ஆனுல் 4336 பாடல்களில் பாரதம் பாடிய, நாம மிடும் பரம வைணவராகிய வில்லிபுத்தூரார் சிவபிரானை 270 இடங்களில் பாடியுள்ளார். எனவே விகிதப்படி கணக்கிட் டால் வைணவ வில்லிபுத்தூராரே சைவக் கம்பரை விடச் சிவபெருமானை அதிகமாகப் பாடியுள்ளார் என்பதை அறிந்து கொள்ளலாம். இந்த 270 இடங்களிலும் வில்லியார் கவிக் கூற்ருக மட்டும் கூறியுள்ள இடங்கள் 199 ஆகும். வில்லி புத்தூராரின் சிவவுணர்வுக்கு இது மேலும் சான்ருகும்.

மற்றுமொரு விஷயத்தையும் நினைவுபடுத்த நாம் கடமைப்பட்டுள்ளோம். வில்லிபுத்தூரார் நாமம் தரிக்கும் வைணவ குலத்துப் பிறந்தவர். அக்குலத்து வழிபடு கடவுள் ஆதலாலும், தாம் பாடும் காப்பிய நாயகர்களான பாண்ட வர்க்கு உறவும் நட்புமாகி அவர்களுடனே இருந்து உற்றுழி உதவியவர் என்பதாலும் திருமாலையும் அவரது பூரண அம்ச மாக வைணவர்களால் போற்றப்படும் ஸ்ரீகிருஷ்ணனையும் காப்பியத்தில் பல இடங்களில் பலவாருக இவர் துதித்திருப் பது இவருக்குப் பொருந்துவதேயாம். ஆனுல், அந்த காப்பிய நாயகர் ஐவர்க்கும், கண்ணனுக்கும், திருமாலுக்கும், மற்றும் அனைவர்க்கும் வழிபடும் மேலான தெய்வம் சிவபிரானே என்ற மெய்யுணர்வினைத் தமது கூர்த்த மதியினுல் பெற்றுச் சிவபிரானைத் தம் கூற்ருகவும் பாத்திரங்களின் வாயிலாகவும் போற்றிப் பாடியிருப்பது இவரது பெருமைக்கும் நடுநிலை தவருத உள்ளத்துக்கும் சிறந்த சான்ருகின்றது, திருமால்

தொடர்பான காப்பியத்தைப் பாடவந்த திருமாலடியாரான இவர் சிவபிரானைப் பாடாதிருக்கவோ, பாட மறக்கவோ இயலாத உள்ளத்தினராய் இருந்தார் என்பதையும் நாம் ஊகித்து உணரலாம். இனிக்காப்பியச் சோலைக்குள் நுழைவோம்.

வியாஸ பாரதம் 18 பருவங்கள் கொண்டதென்றாலும் இவர் பாடியது 10 பருவங்களேயாகும். இந்தப் பத்துப் பருவங்கள் ஒவ்வொன்றிலும் நுழைந்து நுணுகிப் பார்க்கும் கடப்பாட்டினையுடைய நாம் ஆதி பருவத்தில் கவிக்கூற்றாக உள்ள சிவபிரான் பெருமையை மட்டும் இம்மலரில் காண்போம்.

வில்லிபுத்தூரார் தம் நூலுக்குத் தாம் பாடிய தற்சிறப்புப் பாயிரத்தில் முதலில் விநாயகப் பெருமானுக்கு வணக்கஞ் செய்துள்ளார். இது வைணவ மரபுக்கு ஒவ்வாதது.

நீடாழி யுலகத்து மறைநாலொ(டு)
ஐந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன்
மாபார தஞ்சொன்ன நாள்
ஏடாக மாமேரு வெற்பாக
வங்கூரெ ழுத்தாணிதன்
கோடாக வெழுதும்பி ரானைப்
பணிந்தன்பு கூர்வாமரோ.

(தற்சிறப்புப்பாயிரம், கடவுள் வாழ்த்து.)

இப்பாடலில் தன் காப்பியம் இடையூறின்றி இனிது முடியச் சைவ மரபினையொட்டி விநாயகப் பெருமானை வணங்கியுள்ளது இன்புறுதற்குரியது. ''மாபாரதம் சொன்ன நாள் எழுதும் பிரான்'' என்று விநாயகரைக் கூறியதனால், யான் தமிழ்ப் படுத்தும் இதனையும் இடையூறு இன்றி முடியுமாறு அவன் அருள்வான் என்ற கருத்துக் குறிப்பிக்கப்படும் என்று உரைகாரர் திரு வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் (இவரும் வைணவரே) தம் உரை விளக்கத்தில் குறிப்பிட்டுள்ளதும் இங்குக் கருத்திற் கொள்ளத்தக்கதாம். இன்னொரு

பாடலும் விநாயகர் வணக்கமாகவே இப்பகுதியில் காணப்படு கிறது.

தற்சிறப்புப் பாயிரமென்ற இப்பகுதியில் அடுத்து முதற் கடவுளின் வாழ்த்து என்ற தலைப்பில் உள்ளது பின்வரும் பாடல்.

ஆக்கு மாறய னுமுத லாக்கிய உலகம்
காக்கு மாறுசெங் கண்ணிறை கருணையங் கடலாம்
வீக்கு மாறர னுமவை வீந்தநாள் மீளப்
பூக்கு மாமுத லெவனவன் பொன்னடி போற்றி.

(தற்சிறப்புப்பாயிரம், கடவுள்வாழ்த்து: 3)

',உலகத்தைப் படைக்கின்ற பிரமனுகவும், அப்படிப் படைத்த உலகத்தைக் காக்கின்ற சிவந்த கண்களை உடைய கருணைக் கடலாகிய திருமாலாகவும், அந்த உலகத்தை அழிக்கின்ற அரனுகவும், அவ்வுலகம் அழிந்தகாலத்து அதனை மீளவும் உண்டாக்கும் சிறந்த முதல்வனுகவும் உள்ளவன் எவனே, அவனுடைய பொன் போனற திருவடிகட்கு வணககம்'' எனபது மேற்படி பாடலின் பொழிபபுரையாகும். இப்பாடலில் வில்லிபுத்தூரார் அயனை, அரி, அரனை எனற மூவ ரையும் அவர்தம் தொழிலாகிய ஆக்கல், அளிததல், அழித்தல் என்ற முத்தொழிலையும் குறிப்பிட்டு, நான்காவதாக ''மீளப் பூக்கும் மாமுதல்'' எனப் பாடியுள்ளார். வைணவ வழக்கில், அயன், அரன், அரி என்ற மூவரே உண்டு. அம்மூவரில் அரி உயர்ந்தவன் என்பது வைணவர் தம் கொள்கை. நான்கா வதான துரியமூர்த்தி வைணவ சம்பிரதாயத்தில் உளதாக நாமறிந்த வரையில் தெரியவில்லை. சைவ சம்பிரதாயத்தில் தான் அயன், அரி, அரன், மகேசுரன், ஸதாசிவன் என்ற ஐந்து மூர்த்திகள் உள்ளனர். இவரது தொழில் முறையே ஆக்கல், அளித்தல், அழித்தல். மறைத்தல், அருளல் என்ப தாம். மூன்ருவதான அழித்தலிலேயே மறைத்தலையுமடக்கி, ஐந்தாம் மூர்த்தியையே நான்காம் மூர்த்தியாகக் கொள்வது முண்டு. அந்த முறையில் அனுக்கிரஹம் என்றும் அருளல்

என்றும் வழங்கும் ஐந்தாவது தொழிலைச் செய்யும் ஸதர சிவனையே மீளப்பூக்கும் மாமுதல் என்று இங்குக் கவி பாடியுள் ளார் என்று கோடலே ஏற்புடையதாகும்.

இத்தற்சிறப்புப்பாயிரப் பகுதியிலேயே தாம் பாரதம் பாட இசைந்ததன் காரணத்தைக் கவி ஒரு பாடலால் விளக்கு கிருர். அக்கவி வருமாறு:-

முன்னு மாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பனனு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்
மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கும்
என்னு மாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்.

(தற்சிறப்புப்பாயிரம் 8-ம் பாடல்)

இப்பாடலில் மூன்ருமடியில் உள்ள 'மன்னு மாதவன்' என்பதை 'மன்னு-மா-தவன்' எனப் பிரித்து பெருமை பொருந்திய திருமகளின் கொழுநனுகிய திருமாலின் கதை இக்காப்பியத்தின் இடையிடையே வழங்கும் என்னும் ஆசை யால் பாடலுற்றேன் என்று கவி கூறுவதாக உரைகாரர் திரு. வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் கூறுகின்ருர். அது! பொருந்துவதே, ஆயினும் இதே சொற்ருெடரை 'மன்-உமா-தவன்' எனப் பிரித்து, இரட்டுறமொழிதல் என்னும் உத்தி யால், நிலைபெற்ற உமாதேவியாரின் கணவனுகிய சிவபெரு மானின் கதைகளும் இடையிடையே வழங்கப் பெறுதலால் யானும் இப்பாரதம் பாட இசைந்தேன் என்றும் கவி கூறு வதாகக் கொள்ளலாம் என்பதை உரைகாரர் எடுத்துக்காட்டி ஞரில்லை. சிவபிரான் சரிதங்களும் பாரதத்தில் இடையிடையே வழங்கி வருதலை யாரே மறுக்க வல்லார்?

இனி, மாபாரதம் முதல் பருவமான ஆதி பருவத்தில் முதலாவதான குருகுலச்சருக்கம் ஆரம்பமாகின்றது. சந்திர குலத்தில் பிறந்த குரு என்ற பிரசித்தி பெற்ற அரசனின் குலத்தைப் பற்றிய சரிதமடங்கிய சருக்கம் (நூலின் உட்பிரிவு) என்பது இதன் பொருள். குருகுல முதல்வனுன சந்திரனைப்

பாட வந்த புலவர், அச்சந்திரனைச் சிரத்தில் சூடியருளிய சிவ பிரான் பெருமையைப் பாடி அப்பெருமானது தலையில் இருந்த வானவன் (இங்குச் சந்திரன்) பெருமையை யாரே அறிந்து சொல்ல வல்லார் என்று பாடுகிறார்.

"திருந்த வானவர்க்கு அரியவன்
செஞ்சடை முடிமேல்
இருந்த வானவன் பெருமையை
யார்கொலோ இசைப்பார்."

(ஆதிபருவம், குருகுலச்சருக்கம், 2-ம் பாடல்)

என்பது அப்பாடற்பகுதி. 'வானவர்க்கு அரியவன்' என்ற தொடரால் அவன் திருமாலுக்கும் நான்முகனுக்கும் கூட அரியவன் என்னும் பொருளைக் குறிப்பாகப் புலப்படுத்தி யருளிய வில்லிபுத்தூராரின் செம்மையுள்ளத்தைப் பாராட்டா திருக்க முடியுமா? "அரியயனுக்கு அரியானை" என்பது சேக் கிழார் வாக்கு.

இதே சருக்கம் 83-வது பாடலில் சந்தனு மன்னன் கங்கா தேவியிடம் தான் பெற்ற மைந்தனாகிய தேவவிரதன் தன் முன்னே வர, அவனைத் தன் மகனென அறியாது இவன் யாரோவென அயிர்த்தபோது, "விடையவன் குமரன் என்று அயிர்க்கும்" என்றும், 108-வது பாடலில் தானும் விடையவன் ஆதலால் என்ற சிலேடை மொழியாலும் சிவபெருமானை நினைவுறுத்திப் பாடியுள்ளமை அறிந்து இன்புறுதற்குரியது.

ஆதி பருவம், சம்பவச் சருக்கம், 48 வது பாடலில் பாண்டு மன்னன் வேட்டையாடும்போது அவனது இளைப்பை இமய மலையினின்றும் புறப்பட்ட காற்று நீக்கியது என்ற செய்தியைக் கூற வந்த வல்லிபுத்தூரார் அங்குச் சிவபிரானைத் தானும் நினைந்து நம்மையும் நினைவுகூரச் செய்கிறார். பாண்டு வெண்ணிறமான மேனியையுடையவன். அவன் மீது வேட்டையில் தெறித்த இரத்தத்துளி வெண்மலையாகிய கயிலை யில் மலர்ந்த நறுமணங் கமழும் குங்குமப்பூவின் தாது

(பொடி) போல இருந்தது என்கிறுர். கயிலையைக் கூற வந்தவர் மேருவை வில்லாக வளைத்த சிவபிரானது கயிலை என்று பெருமிதம்படக் கூறுகிறுர். இந்த இடத்தில் கவி ஏன் சிவபிரானை, அவனது மலையை வளைத்த வீரத்தைக் குறிப்பிட வேண்டும், என்ற விஞ எழின், சிவபிரானை அவ்வப்பொழுது பாடாதிருக்க அவரால் இயலவில்லை என்பதே விடையாகக் கூடும். அந்தப் பாடல் முழுமையையும் இதோ படித்துச் சுவையுங்கள்.

மெய்யில் தெறித்த குருதித்துளி மேருவில்லி
சையத்து அலாந்த கமழ்குங்குமத் தாதுமானக்
கையில் சிலையோடு உலவுங்கழல் காளைகேதம்
பையத் தணித்தான் இமநாக பவனனென்பான்.

(சம்பவச் சருக்கம், 48 வது பாடல்)

(மேருவில்லி சையம் — மேருமலையை வில்லாக உடைய சிவபிரானது மலையாகிய கயிலாயம்)

அடுத்து இதே சருக்கத்தில் 112 வது பாடலில் வீடுமனை (பீஷ்மர்) கங்கையாளகுமரன என்ற பெயரால் குறிப்பிட முனைந்தவர், மீண்டும் சிவபிரானை நினைவு கூர்கிறுர். எப்படி? அப்பெருமானது அடையாள மாலையாகிய கொன்றைப் பூமாலையை குறிப்பிடும் முறையால் அதனைச் சூடும் பெருமானை நினைவு படுத்துகிறுர். சிவபிரான் திருமுடியில் தங்கிய கங்கை அப்பெருமானின் திருமுடிமாலையாகிய கொன்றை மாலையிலும் படிகின்ருள் அன்ருே? கொன்றை மலர் பிரணவபுஷ்பம் எனப் படும். சிவபிரானும் பிரணவப் பொருள் ஆவான் அல்லவா? ''கந்தவான் கொன்றை தோயும் கங்கையாள் குமரன்'' என்பதே இச்செய்தி கூறும் பாடற்பகுதியாகும்.

ஆதி பருவம், வாரணுவதச் சருக்கத்தில் 54 வது பாடல், துரோணர் தன் மாணுக்கர் கல்வியை அனைவர்க்குங் காட்டும் பகுதியில், அந்த யுத்தரங்கத்தில் அனைவரும் வந்து சேர்ந்து தத்தம் ஆசனங்களில் அழகாக அமர்ந்த போது அச்சபை

யானது தேவர்கள் பலர், சித்தர் முதலியோர், சிவபிரான், கரு நிறம் வாய்ந்த திருமால், பிரமன், இந்திரன் முதலிய பலர் கலந்த அகன்ற வானுலகத்தை ஒத்திருந்தது என்பதைக் கூறு கின்றது. அப்பாடல் பகுதி பின் வருமாறு.

தெரிவுற விமானமனை தோறும்உறை தேவர்பலர்
சித்தர்முத லோர் பரனெடும்
கரியநெடு மால்பிரமன் இந்திரன் முதல்பலர்
கலந்தஅகல் வான் நிகருமே.

இப்பாடலில் கரிய நெடுமால், பிரமன் என்று பிரித்துக் கூறிவிட்டபடியால் பரனெடும் என்ற சொல்தொடர்க்குச் சிவ பிரான் என்பதல்லது வேறு எப்பொருள் கொள்ளக் கூடும்? (பரன்-அனைவரினும் மேலானவன், சிவபிரான்). வைணவ ராகிய உரைகாரருக்கு பரன் என்று சிவபிரானைக் குறிப் பிட்டது பிடிக்கவில்லை போலும். எனவே, அவர் தமது பதிப் பில் பலரொடும் என்ற வேறு பாடத்தைப் புகுத்திச் சிவபிரானை இங்கு இருட்டடிப்புச் செய்து விட்டிருக்கிறார். திருமால், பிரமன் என்றிருவரைக் குறிப்பிட்ட கவி, அதுவும் நடுநிலை தவறா உள்ளம் படைத்த வில்லிபுத்தூரார், சிவபிரானைக் கூறாது விடுவரோ? வேறு பாடத்தைப் புகுத்தியும், உரைகாரர், பலரொடும் என்றவிடத்துப் 'பரரொடும்' என்று பிரதிபேதம் எனக்குறிப்பிட்டது அவரது மனச்சாட்சி உறுத்தியதாலோ என்னவோ, நாமறியோம்! நாம் கொண்ட பரனெடும் என்ற பாடம் சிவமணி, திரு. ராய. சொ. அவர்களது பதிப்பில் கண்டது என்பதையும் ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறேம்.

வாரணவதச் சருக்கத்தில் 72-வது பாடலில் கர்ணன் - துரியோதனன் இவரது நட்பைக் கூற வந்த போதும் தனத னும் சிவனும் போல நட்புப் பூண்டு ஒழுகினர் எனக் கவி காட்டுகிறார். இதே சருக்கம் 91-வது பாடலில் திரௌபதி பாஞ்சாலமன்னன் துருபதராசனின் யாகாக்கினியினின்றும் அவன் மகளாய்த் தோன்றிய பொழுது ஆகாயத்தில் எழுந்த ஓர் அசரீரி வாக்கைக் குறிப்பிடும்போது வில்லிபுத்தூரார்

''வாமநுதல் கண் மேலின்றுமிவள் பிறந்தாள்'' என்று பாடிச் சிவபிரானை நமக்கு நினைவூட்டுகிறார். (வாமன்—சிவபிரான்; நுதல்கண் — நெற்றிக்கண்). வைணவராகிய உரைகாரர் இங்குத் தம்மையும் மறந்து, 'வலக்கண் சூரியனும், இடக்கண் சந்திரனும் நெற்றிக்கண் அக்கினியுமாக இறைவனுக்குக் கண் மூன்றும் முச்சுடராதலால் நெருப்பை வாம நுதற்கண்' என்று சைவ சம்பிரதாயத்தை ஒட்டி விளக்கஞ்செய்துள்ளார். எல்லார்க்குந் தலைவன் என்ற பொருளைத்தரும் இறைவன் என்ற சொல்லை உரைகாரர் இங்குச் சிவபிரானுக்கு ஆக்கியதும் குறிப்பிடத்தக்கது.

துரியோதனாதியர் பாண்டவர் மேல் பொருமை கொண்டு அவர்களை வஞ்சனையால் அழிக்கத் தீட்டிய திட்டம் வாரணாவதத்து அரக்குமாளிகையாம். பாண்டவரை அதில் குடிபுகச் செய்து தக்க சமயத்தில் அதனைத் தீ வைத்து அழித்துவிட்டால் அதனுள் வைகும் பாண்டவரும் அழிந்து விடுவர் என்பதே துரியோதனாதியரது தீய எண்ணம். அதன்படி பாண்டவர்கள் வாரணாவதத்துக்கு அனுப்பப்படுகிறார்கள். அங்குச் செல்லும் பாண்டவர்கள் சிவபக்தர்களாகையால் வாரணாவதத்துக் கோயில் கொண்ட விசுவேசப் பெருமானைத் தரிசிக்கின்றனர் என்பதைக் கவி மறக்காது கூறுகின்றார். (வாரணாவதம் — காசி) இதோ அப்பாடல்:

ஆர மார்புடை ஐவருங் குந்தியும்
பூர ஞான புரோசன நாமனும்
சேர வெண்பிறைச் செஞ்சடை வானவன்
வார ணாவதம் சென்றுவணங் கினார்

(வாரணாவதச் சருக்கம், 115 ம் பாடல்)

பஞ்சபாண்டவர்களும், குந்தியும் உடன் வந்த புரோசனன் என்னும் அமைச்சனும் ஒன்றாக வெள்ளை நிறம் வாய்ந்த பிறைச்சந்திரனைச் சூடிய சிவந்த சடையையுடைய சிவபிரானை வாரணாவதம் சென்று வணங்கினார்கள் என்பது மேற்படி பாடலில் போந்த செய்தியாகும். சுருக்கமாகவே பாரதக்

கதையை அமைத்துக்கொண்டு வரும் கவி, இங்கு ஐவரின் சிவ வணக்கத்தைப் பாடாமலேயே கதையைத் தொடர்பு படுத்திச் செல்லக் கூடும் என்றாலும், வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம் சிவபிரானைத் தாமும் நினைந்து வாசகர்களுக்கும் நினைப்பூட்டும் தமது மரபின்படி இங்குச் சிவனை வணங்கிய செய்தியைப் பாடியுள்ளார் என்பதே நமது கருத்தாகும். மற்றும் சிவபிரானைக் குறிப்பிட வேறு எத்தனையோ சொற்றொடர்கள் இருப்பினும் இங்கு, 'வெண்பிறைச் செஞ்சடை வானவன்' என்று குறிப்பிட்டதில் ஒரு நயமுங் காண்கின்றோம். அஃது தனது மாமனாகிய தக்ஷனால் சபிக்கப்பட்டு, எங்கும் புகல் கிடைக்காது, சிவபிரானைச் சரணடைந்து அவரால் சந்திரன் காப்பாற்றப்பட்டான் என்ற கந்தபுராணம் தக்ஷகாண்டச் செய்தியே போல், தம் தந்தையுடன் உடன் பிறந்த திருதராஷ்டிர குமாரர்களால் ஆபத்தடைந்த பாண்டவர்களும் சிவபிரானருளால்தான் காப்பாற்றப்பட வேண்டியவர்கள் என்பதையே கவி இங்குக் குறிப்பாகப் புலப்படுத்துகின்றாரோ என்பதேயாகும். வாரணாவதத்தில் தங்களுக்கென அமைக்கப்பட்ட அந்த அரக்கு மாளிகையில் குடிபுக்க செய்தியைச் சொன்ன அடுத்த பாடலிலும், கவி ''அங்கு அவன்றன் அருள் பெற்று'' என்று சிவபிரானது அருளைப் பெற்று மாளிகையில் குடியேறினார்கள் என்று கூறியதும் மேற்கண்ட கருத்துக்கு வலியூட்டுகின்றது. காசி விசுவநாதன் தன் தலத்துக்கு வந்த தன் பக்தர்களையும் அழியவிடுவானோ? அவர்கள் தப்பி உய்ந்ததையும் பார்ப்போம்.

துரியோதனனுதியரது வஞ்சகத்தைச் சிற்பி ஒருவன் மூலம் அறிகிறான் வீமன். பாண்டவரது நலத்தைக் கோருபவனான விதுரன் ஏவலால் இச்சிற்பியும் அந்த அரக்கு மாளிகையமைக்கும் சிற்பிகளில் ஒருவனாகத் தொழில் பட்டு, அந்தமாளிகையின் ஒரு தூணின் கீழ் அந்தரங்கமான ஒரு வழியை அமைத்திருந்தான். இந்த ரகசியத்தை அறிந்து கொண்ட வீமன், ஓர் இரவு புரோசனன் என்னும் அவ்வஞ்சனையமைச்சனை அழைத்து, நெடுநேரம் இரவில் அரசியல் ஆராய்வான் போல்

பேசி, அவனை அன்றிரவு அங்கேயே படுக்கச் செய்கின்ருன். புரோசனன் ஆழ்ந்த உறக்கத்திலிருக்கும்போது, மாளிகைக்கு தீ வைத்துவிட்டுத் தன் உடன் பிறந்தோர்களையும் தாயையும் அழைத்துக் கொண்டு தான் முன்னமே சிற்பியின் மூலம் அறிந்து வைத்திருந்த அந்தரங்க வழியாகத் தப்பி ஒரு காட்டினையடைந்து விட்டான். துர்மந்திரியான புரோசனனுடனும், துரியோதனுதியரால் பாண்டவர்க்கு விஷங்கலந்த தேனைக்கொடுக்க அனுப்பப்பட்ட ஐந்து வேடர்களும் அவர்கள் தாயும் அன்று இரவு அங்கே தங்க, அவர்களோடும் சேர்ந்து அரக்கு மாளிகை தீப்பற்றி எரிந்தொழிந்தது. தெய்வ சங்கல்பத்தின் முன் மனித சங்கல்பம் மடிந்து போமன்ருே?

இங்ஙனம் அரக்கு மாளிகையைக் கொளுத்திவிட்டுத் தாயுடனும் உடன்பிறந்தோருடனும் அந்தரங்க வழியாகத் தப்பிச் சென்று அகன்ற காட்டினைச் சென்று சேர்ந்த வீமன், மூன்று கண்படைத்த அற்புதனை சிவபிரான் கோபித்து அழித்த முப்புரத்தினின்றும் எரியாது தப்பிய மூன்றுபேரை ஒத்துக் காணப்பட்டான் என்று கவி இச்சருக்கத்து 131ம் பாடலில் கூறுகின்ருர். "முக்கண் அற்புதன் முனிந்த ஊர் மூவரோடு ஒப்பான்" என்பது இச்செய்தி கூறும் பாடற் பகுதி.

இங்கு வில்லிபுத்தூரார் சிவபிரானை முக்கண் அற்புதன் என்று பாடிய சிறப்பை எப்படிப் புகழ்வோம்? 'முக்கண் அற்புதன்' என்ற சொற்றெடருக்கு 'மூன்று திருக்கண்கள் உடைய விசித்திர சக்தியுடையவனை சிவபிரான்' என்று உரைகாரர் பொருள் எழுதியதையும் பாராட்டக் கடமைப் பட்டுள்ளோம். பாரதம் பாடியவரும் ஒரு வைணவர், உரையெழுதியவரும் ஒரு வைணவர் என்பதை இங்கு நாம் நினைவு படுத்திக் கொள்ள வேண்டும்.

இனிச் சிவபிரான் முக்கண் அற்புதன் என்று போற்றப் பட்டதன நயத்தைச் சிறிது பார்ப்போம். முப்புரமெரித்த விரிசடைப் பெருமானின் இவ்வீரச் செயலைப் பின்னர் விரிவாக எழுத இருப்பதால் இங்குத் தேவைக்கேற்பச் சுருக்கமாகவே

கூறுவோம். திரிபுர சங்காரத்தினைச் சிவபிரானேயன்றி பிரம்ம விஷ்ணுவாதி தேவர்கள் எவராலும் செய்ய இயலாது என்பதையறிந்த தேவர்களனைவரும் அப்பெருமானிடம் சென்று, ''நாங்களெல்லோரும் பசுக்கள், தேவரீரே பசுபதி. திரிபுரத்தசுரர்களையழித்து எங்களைக் காப்பாற்ற வேண்டும்'' என்று பிரார்த்திக்க பெருமான் அதற்கு உடன்பட்டு ஒரு விசித்திரமான யுத்தஸன்னுகத்துடன் போருக்கு எழுந்தருளினார். இதை ஸ்காந்தமஹாபுராணம், சங்கர ஸம்ஹிதை, சிவரஹஸ்யகண்டம், தக்ஷகாண்டத்தின் மங்கள சுலோகம் பின் வருமாறு கூறுகிறது.

மௌர்வீ மூர்த்நிரதச்சராசன சிரஸ்ஸஞ்சாரி சக்ரத்வயம்
சக்ராந்தர்நிஹிதச் சரஸ்ததுதரே ஸூதஸ்ததாஸ்யேஹயா:
தேஷாமேவசிர: பதேஷுவஸதிஸ்ஸ்வஸ்யேதி யஸ்யச்ருதம்
தேவச்சித்ர பரிச்சதஸ்ஸபகவான் குர்யாத்ஸதாமங்களம்.

இந்த சுலோகத்தின் பொருள்:- நாண் கயிற்றின் தலைமீது இருக்கும் ரதத்தையும், வில்லினுடைய தலைமீது ஸஞ்சரிக்கின்ற இரண்டு சக்கரங்களையும், சக்கரத்துக்கு உள்ளேயிருக்கின்ற பாணத்தையும், அந்த பாணத்தின் வயிற்றிலிருக்கும் ஸாரதியையும், அந்த ஸாரதியின் வாயிலிருக்கும் குதிரைகளையும், அக்குதிரைகளின் தலைகளில் குடியிருத்தலையும் ஆகிய இப்படிப்பட்ட விநோதமான யுத்தஸன்னுகத்தைக் கொண்ட ஸ்ரீ பரமேச்வரன் எப்பொழுதும் மங்களத்தைச் செய்யட்டும்.

இதன் கருத்து:- சிவபெருமான் திரிபுரஸம்ஹாரம் செய்யும்போது ஆதிசேஷனை நாண்கயிருகவும், அந்த ஆதிசேஷன் தலைமீதிருக்கும் பூமியை ரதமாகவும், மஹாமேரு மலையை வில்லாகவும், அந்த மஹாமேரு மலையின் மீது ஸஞ்சரிக்கும் ஸூரிய சந்திரர்களைச் சக்கரங்களாகவும், அந்த ஸூரிய மண்டலத்தின் நடுவில் விளங்கும் திருமாலைப் பாணமாகவும், அவர் வயிற்றிலிருந்து உண்டான பிரம்மதேவனைத் தேரோட்டியாகவும், அந்த பிரம்மதேவனுடைய நாக்கில்

விளங்கும் வேதங்களைக் குதிரைகளாகவும் வைத்துக் கொண்டு அந்த வேதங்களின் உச்சியாகிய உபநிடதங்களைத் தன் வாசஸ்தலமாகவும் கொண்ட பரமசிவனார் முப்புரங்களை எரித்தார். அத்தகைய விநோதமான யுத்த ஸன்னாகத்தைக் கொண்ட பரமசிவன் நமக்கு எப்பொழுதும் நன்மையையே செய்யட்டும் என்பதாம்.

இத்தகையதான துணைக்கருவிகளுடன் போர் மேல் சென்றும் இவையொன்றும் பயன்படாமல் தம் சிரிப்பினாலேயே முப்புரத்தை எரித்தருளினார். இதனைப் புஷ்பதந்தர் என்பவர் தமது சிவமஹிம்ன ஸ்தோத்ரத்தில் கூறும்போது "ஈசனே! உமக்கு அற்பமான புல்லைப் போன்ற முப்புரங்களை எரிக்க நீர் விரும்பியபோது பூமி தேராகவும் பிரம்மதேவன் ஸாரதியாகவும், மேருமலை வில்லாகவும், மற்றும் சந்திர சூரியர்கள் இரண்டு தேர்ச்சக்கரங்களாகவும், சக்ரபாணியான திருமால் அம்பாகவும் இருந்தனர். இத்தகைய ஆடம்பரங்கள் உமக்கு எதற்காக? (முப்புரங்களை இறைவன் புன்னகையால் எரித்தான் என்பது வரலாறு) ஒரு பிரபுவானவர் ஒரு பொழுதும் தன் கீழுள்ளவர்களை எதிர்பார்த்து இருப்பதில்லை. (அவர்களை எதிர்பார்ப்பது போல் காட்டி) விளையாடுவார் என்று கூறுகிறார். மாணிக்கவாசகர் தம் திருவாசகத்தில்,

ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்
ஓரம்பே முப்புரம் உந்தீபற
ஒன்றும் பெருமிகை உந்தீபற
(திருவாசகம் திருவுந்தியார் — 2)

என்று பாடியுள்ளார். திருமாலாகிய ஓரம்பும் அவர்க்குப் பயன்படாது ஒழிந்தது. என்னை? முப்புரங்களும் எரியுறும்படிச் சிரித்தே செய்தனராகலின் என்க என்பது மேற்படி பாடலின் கருத்தாகும். திரிபுரஸம்ஹாரத்தைப் பற்றிப் பாடாத கவிகள் இல்லை என்றே கூறலாம். வேதத்திலும் இவ்வரலாறு கூறப்பட்டுள்ளதே இதன் மகத்துவத்துக்குச் சான்றாகும். எனவே

திரிபுர ஸம்ஹாரத்தின் இத்தனை நுட்பங்களையும் மகத்துவத்தையும் உள்ளடக்கி ஒரே சொல்லால் அற்புதன் என்று ஏத்திய வில்லிபுத்தூராழ்வாரின் கவித்திறத்தைப் பாராட்டுவதா? அன்றி அவரது சிவபக்தியைப் போற்றுவதா? தாம்பாடிய பாரதத்தில் மேலும் பல இடங்களிலும் சிவபிரான் திரிபுரம் எரித்த திறனைத் திறப்படப் போற்றியுள்ளார் என்று மட்டும் கூறி விரிவஞ்சி இதனை இத்துடன் நிறுத்தி மேற்கொண்டு ஆராய்ச்சியில் புகுகின்றோம்.

அடுத்து வேத்திரகீயச் சருக்கம் என்ற பகுதியைப் பார்ப்போம். அரக்கு மாளிகையினின்றும் தப்பிய பாண்டவர் ஐவரும் தாயுடன் ஒரு வனத்தையடைகின்றனர். அங்கு இடிம்பன் என்னுமரக்கனை வீமன் கொன்று, அதன் பின்னர் இடிம்பனின் தங்கையான இடிப்பி என்னுமரக்கியை மணந்து கொண்டு அவள் மூலம் கடோத்கஜன் என்னும் குமாரனைப் பெற்றான் என்று கதை தொடருகிறது. பின்னர் பாண்டவரும் தாயும் பிராமண வேடம் பூண்டு வேத்திரகீயம் என்ற ஊரை அடைகிறார்கள். ஓரந்தணன் வீட்டில் தங்கியிருக்கிறார்கள். அவ்வூரில் விருந்துண்டு காலங்கழிக்கும் நாட்களில் ஒரு நாள் அவர்கள் தங்கியிருந்த வீட்டு அந்தணன் மனைவி மூலம் பகாசுரன் என்பவனைப் பற்றியும் அவனுக்கு அன்று அவர்கள் வீட்டில் ஒருவர் உணவுடன் சென்று பலியாக வேண்டும் என்பதையும் அறிந்து ''வீமனைப் பலியாகக் கொடுக்க'' என்று குந்தி கூறியவளவில், அந்தணனும் அவன் மனைவியும் பகன் என்னுமசுரனுக்கு அனுப்ப உணவு தயாரித்தலை மேற்கொண்டனர். இச்செய்தியைக் கூறும் வில்லியாரின் பாடலைக் காண்மின்.

அவனையிடுபலி அருளுகெனமொழி
அளவில்மறலியும் உளைவுறச்
சிவனைவழிபடும் மகவையருளிய
செனகசெனனியர் நிகரெனத்

தவனில்முதிர்தரு முனியும்வழுவறு
தனதிலறனுடை வனிதையும்
துவனியறமன மகிழ்வொடினிதறு
சுவைகொளமுதடு தொழிலராய்.
(வேத்திரகீயச்சருக்கம், 47ம்- பாடல்)

"அந்த வீமனைப் பலியாகக் கொடுக்க" எனக் குந்தி கூறியவளவில், இயமனும் வருந்தும்படிச் சிவபெருமானை வழிபட்ட மார்க்கண்டனைப் பெற்ற தாய் தந்தையர்க்கு ஒப்பெனத் தவத்தினால் முதிர்ச்சியடைந்த முனிவனாகிய அவ் வீட்டு அந்தணனும் பழுதில்லாதவளாகிய அவன் மனைவியும் தமது அழுகையொலி நீங்க, மனமகிழ்ச்சியுடன் அறுசுவை உணவு சமைக்குந் தொழிலை மேற்கொண்டார்கள்" என்பது மேற்காட்டிய பாடலின் திரண்ட பொருளாகும். இறைவ னுடைய வீரச்செயல்களுள் திரிபுரசங்காரத்தை முன் கூறிய கவி, இப்பாடலில் அப்பெருமானின் காலஸம்ஹார வீரச் செயலை எத்துணை நயம்படக் கூறியுள்ளார் என்பதைச் சிறிதே பார்ப்போம்.

மிருகண்டு முனிவனது தவப்பேறாய்ப் பிறந்த மார்க் கண்டேயன் இடைவிடாது சிவபூசனை செய்து கொண்டு வளர்ந்து வருகின்றான். பதினாறு பிராயம் முற்றுமளவிலே தாய்தந்தையர் 'இவனை நாம் இழக்க நேருமே' என்று மிகக் கலங்க, கலக்கத்தின் காரணத்தையறிந்த மார்க்கண்டேயர் பெருமானை மேலும் இடைவிடாது பூசித்து வந்தார். சிவபூசையின் நடுவில் இயமன் வந்து காலபாசத்தாற் கட்டி இழுக்கும் வேளையில் அப்பெருமான் சிவலிங்கத்தினின்றும் வெளிப்பட்டு இயமனைக் காலால் உதைத்து மார்க்கண்டேய ருக்கு என்றும் பதினாறு ஆகத் தீர்க்காயுள் அருளி அவரைச் சிரஞ்சீவியாக்கினார் என்பது கந்தபுராணம், அசுரகாண்டம், மார்க்கண்டேயப் படலத்தில் குறித்த வரலாறு. (விரிவு ஆண்டுக் கண்டு கொள்க). இந்த வரலாற்றினையே சூத்திரம் போன்ற சுருங்கிய சொற்களால், "மறலியும் உளைவுறச் சிவனை

வழிபடும் மகவு" என வில்லிபுத்தூரார் பாடியுள்ளது சிவநேயச் செல்வர்களது உள்ளத்தை மலர்விக்கும் என்பதில் ஐயமுண்டோ? கந்தபுராணம் போன்ற சிவபுராணங்களில் வில்லிபுத்தூரார் எத்துணைத் தோய்வு உடையவராயிருந்தார் என்பதையும் இது எடுத்துக் காட்டும்.

மார்க்கண்டேயரின் தாய்தந்தையர்க்கு, இவ்வந்தணத் தம்பதியரை உவமித்ததன் உட்கருத்து யாதெனின் அவர்கள் மார்க்கண்டேயர் மூலம் சிவனருளால் இயமனை உதைபட்டு வீழும்படிச் செய்தது போல இவ்வந்தணத் தம்பதியரும் சிவனருள் பெற்ற வீமனைக் கொண்டு பகன் என்னுமரக்கனை அழிக்கப் போகின்றனர் என்பதாம்.

வீமன் பகாசுரனைக் கொன்று வெற்றியுடன் வீடு திரும்புகிறான். திரும்பி, தான் தங்கியிருந்த வீட்டு அந்தணர் தம்பதியரை வணங்குகின்றான். இச்செய்தியைக் கூறுமிடத்து வில்லிபுத்தூரார், அவ்வந்தணத் தம்பதியரை "ஈசனோடு உமை எனத் தவம் புரியும் இருவர்" என்று கூறியதன் கருத்தை உரைகாரர், 'இல்லறத்தில் நின்றபடியே நல்லொழுக்கத்தை மிகச்சிறப்பாக நடத்துதற்கு ஈசனும் உமையும் உவமை கூறப்பட்டனர்' என்று விளக்கியுள்ளதும் பொருந்துவதே. ஈசனும் உமையும் ஆதி தம்பதிகள், அவர்களே ஆதர்ச தம்பதிகளுமாவர் அல்லவா?

ஆதிபருவத்து ஐந்தாவதாக வருவது திரௌபதி மாலையிட்ட சருக்கம் என்பதாம். ஐந்து பாண்டவர்கள் ஒரே பெண்ணை மணஞ்செய்து கொண்ட வரலாறு ஐந்தாவதாக வந்ததும் ஒரு பொருத்தம் போலும். பாஞ்சால மன்னன் துருபதன் தன் மகட்குச் சுயம்வரம் அமைக்கின்றான் என்ற செய்தியைப் பாண்டவர் அறிந்து வேத்திரகீய நகரினின்றும் பாஞ்சாலம் நோக்கிப் புறப்பட்டனர். பாஞ்சால மன்னனின் சுயம்வர மண்டபத்தையடைந்து அங்கு இருந்தனர்.

துருபத புத்திரனை திருஷ்டத்யும்னன் என்பான் சுயம்வர மண்டபத்துக் கூடியிருந்த அரசர்களை நோக்கி, ''சக்கரவடி வாய் வேகமாகச் சுழலும் இயந்திரத்தின் நடுவேயுள்ள இலக்கை இதோ இந்த வில்லால் எய்பவருக்கே திரௌபதி உரியவள் ஆவாள்'' என்று கூறினன். பல அரசர்கள் முயன்று தோல்வியுற்றதைப் பாரதம் விரித்துக் கூறும். அவை நம் ஆராய்ச்சிக்கு உரியனவன்ருகையால் அவற்றை விரித்தோ மல்லோம். கடைசியாகத் துரியோதனனின் நண்பனுன கன்னன் (கர்ணன்) வில்லை வளைத்தும் இலக்கினை எய்ய மாட்டாது தோல்வியுற்றதைக் கவி, ''அரன் இருந்த கயிலை யென்னும் மலை வருத்தம்அற எடுத்த நிருதன் என்ன'' என்று கன்னனைக் கயிலையெடுத்த இராவணனுக்கு ஒப்பாகக் கூறு கின்ருர், (த்ரௌபதி மாலையிட்ட சருக்கம், 53ம் பாடல்). வில் வளைத்த கன்னனின் தோல்வியை வேறு வகையாற் குறிப் பிடலாமெனினும், எவ்வாற்ருனும் சிவபிரானை நினைந்து பாட வேண்டும் எனற கருத்தினர் ஆகலின் இங்கு ''அரன் இருந்த கயிலைமலை'' எனப் பெருமானையும் அவனது இருப்பிடத்தை யும் சுட்டிப் பாடினர் என்று கொள்க. இராவணன அன்று அடைந்தது தோல்வியே, அதுபோலக் கன்னனும் இங்குத் தோல்வியே அடைந்தான் என்பதையும இவ்வுவமை எடுத்துக் காட்டும்.

கன்னன் தோல்வியுற்று வீழ்ந்ததைக் கண்ட, பிராமண வேடத்திலிருந்த அருச்சுனன், ''அரசரேயன்றி அந்தணரும் இவ்விலக்கை எய்தால், திரௌபதி மாலை சூட்டுவளோ'' என்று வினவ, திருஷ்டத்துய்மனும் ''அது பெருமையேயன்றித் தாழ்வாகாது'' என மறுமொழி இயம்ப, அருச்சுனன் வில்லை யெடுத்தான் என்பதை இக்கவிஞர் பெருமான் ''ஈசன் மேருகிரி எடுத்ததென விரைவில் கொண்டான்'' (திரௌபதிமாலையிட்ட சருக்கம், 59ம் பாடல்) என்று பாடியதன் பெருமை அறிந்து இன்புறற்குரியது. எவராலும் எய்யமுடியாத இலக்கை எய்யமுற்பட்டு வில்லை எடுத்த விசயன் செய்கைக்கு, எவராலும் வெல்ல முடியாத முப்புரத்தையெரித்த சிவபிரான் மேரு

மலையை வில்லாகத் தூக்கியதை உவமித்ததின் நுட்பத்தைப் பாராட்டாதிருக்க இயலவில்லை. இறைவனின் திரிபுர ஸம்ஹார வீரம் இக்கவிஞர் மணியின் உள்ளத்தை எவ்வளவு கவர்ந்து விட்டது என்பதற்கு இப்பாடலும் ஒரு சான்றாகும். மேலும், அர்ச்சுனன் சுயம்வர மண்டபத்து வில்லைத் தூக்கியதற்கு, திருமால் சாரங்கம் என்ற வில்லையெடுத்தது போல என்றோ, இராமன் சீதை சுயம்வரத்தில் பணயமாக வைக்கப்பட்ட வில்லைத் தூக்கி வளைத்தது போன்று என்றோ உவமை கூறுது ஈசன் மேருகிரி எடுத்ததென என்று உவமித்த தன் மூலம், இதுவே அனைத்திலும் அரிய பெரிய செய்கை என்பதைத்தாம் நன்கு அறிந்திருந்தார் என்பதை வில்லி புத்தூரார் இங்குத் தெளிவுபடுத்தியுள்ளார் என்று கொள்க.

அடுத்து, அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கத்தில் வில்லிபுத்தூராழ்வார் சிவபெருமானைப் போற்றுவதில் தமக்குள்ள அடங்காத பேரார்வத்தை எங்ஙனம் புலப்படுத்தியுள்ளார் என்பதையும் சிறிது காண்போம். பாண்டவர் ஐவரும் திரௌபதியை மணந்துகொண்டபோது நாரதமுனிவர் வந்து, ''நீவிர் ஒவ்வொரு வருடத்துக்கு ஒருவராக த்ரௌபதியுடன் கூடி வாழுங்கள். அவ்வாறு வாழும் நாட்களில் மற்றைய நால்வரும் அவளைக் காணுதல் கூடாது. அங்ஙனம் காண நேரிட்டால், அந்த தோஷத்திற்குப் பரிகாரமாக, மாறு வேடத்துடன் ஒரு வருட காலம் தீர்த்தயாத்திரை செய்ய வேண்டும்'' என அவர்க்கு ஒரு நியமத்தினை வகுத்துச் சென்றார். இந்த முறைப்படி அவர்கள் வாழ்ந்து வருகையில் தரும புத்திரனுடன் பாஞ்சாலி வாழும் நாட்களில் ஓர்நாள் அருச்சுனன் திரௌபதியைத் தருமனுடன் காண நேரிட்டு விட்டது. நாரதர் வகுத்த நியம்படி அத்தோஷ பரிகாரமாகப் புண்ணிய தீர்த்தயாத்திரை செய்யப்புறப்பட்டு, முதலில் அவன் கங்கைநதியில் நீராடிய செய்தியைச் சொல்ல வந்த புலவர், புரவிசயன் சூடம்தரு பாகீரதி (தீர்த்தயாத்திரைச் சருக்கம், 7ம் பாடல்) எனக் கங்கையைக் குறிப்பிடும்முகத்தால் மீண்டும் இறைவனது முப்புரம் வென்றருளிய அரிய

வீரத்தையே நினைவு கூர்கின்றார். 'முப்புரங்களையும் வென்றரு ளியவராகிய சிவபிரானது சடைமுடியினால் தரப்பட்ட கங்கா நதி' என்பது இதன் பொருளாகும்.

பின்னர் பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடிய அருச்சுனன் காஞ்சிபுரம் வந்து சேர்ந்தான் என்ற செய்தியைக் கூறும் வில்லிபுத்தூராழ்வாரின் அருமையான பாடலை ஒரு முறையல்ல, பலமுறை படித்து மகிழுங்கள்.

இச்சைப்படி தன்பேரற மெண்ணான்கும் வளர்க்கும்
பச்சைக்கொடி விடையோனொரு பாகந்திறை கொண்டாள்
செச்சைத்தொடை யிளையோனுகர் தீம்பால்மணம் நாறும்
கச்சைப்பொரு முலையாளுறை கச்சிப்பதி கண்டான்.

(அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம், 13ம் பாடல்)

இப்பாடலைப் பல முறைகள் திரும்பத் திரும்பப் படித்தும் எமது ஆசை அடங்கவில்லை. பாடலின் சொற்சுவையும் பொருட்சுவையும் நாவையும் மனதையும் விட்டு நீங்கவில்லை. 'பச்சைக்கொடி விடையோனொரு பாகந் திறைகொண்டாள்' என்னும் இரண்டாமடி சைவத் தெய்வத் திருமுறையாசிரியர் களின் வாக்கினை நினைவூட்டுகிறது. திருநாவுக்கரசு சுவாமிகள் திருவையாற்றிலே திருக்கயிலாயக் காட்சியைக் கண்டார். அப்போது அவர் சிவபெருமானை உமையம்மையாரோடு ஒரு சேர வீற்றிருந்தபடி தரிசனம் செய்தார் என்பதைத் தெய்வப் புலவர் சேக்கிழார் பெருமான், தம் பெரியபுராணத்தில்,

வெள்ளி வெற்பின் மேல் மரகதக் கொடியுடன் விளங்கும்
தெள்ளு பேரொளிப் பவளவெற் பெனஇடப் பாகம்
கொள்ளு மாமலை யாளுடன் கூடவீற் றிருந்த
வள்ள லாரைமுன் கண்டனர் வாக்கின்மன் னவனார்.

(திருநாவுக்கரசுநாயனார் புராணம், 379ம் பாடல்)

என்ற தெய்வம் மணக்கும் பாடலினால் காட்டுகின்றார். இத் திருப்பாடலில் உள்ள மரகதக்கொடி என்பது பச்சைக்கொடி

என வில்லிபுத்தூராரால் பாடப்பட்டுள்ளது அறிந்து இன்புறு தற்குரியது.

இனி, வில்லிபுத்தூரார் பாடலின் பொருளைப் பார்ப்போம். தனது விருப்பத்தின்படி சிறந்த முப்பத்திரண்டு அறங்களையும் வளர்க்கின்ற பச்சைக்கொடி போன்றவளும் இடபவாகனனுகிய சிவபிரானது திருமேனியில் ஒரு பாகத்தைத் தன் தங்குமிடமாகப் பெற்றவளும், வெட்சிப் பூமாலையையுடைய இளையோனுகிய முருகக்கடவுள் அருந்திய இனிய பாலின் மணம் கமழ்கின்ற கச்சினை மோதுகின்ற திருமுலைகளையுடையவளுமாகிய காமாக்ஷியம்மையார் கோயில் கொண்ட மாநகரைப் பார்த்தான் (அடைந்தான் என்றபடி).

இப்பாடலின் பொருளைக் காணும்போது, அருச்சுனன் காஞ்சியம்பதியை அடைந்தான் என்று கூற முற்பட்ட வில்லி புத்தூராருக்கு, 'காஞ்சி' என்றதுமே விடையோனும் அவன் ஒரு பாகத்து உறையும் உமாதேவியாரும், குமரனுமே முதன் முதலில் நினைவுக்கு வந்தனர் என்பதையும், இதனுல் அவர் உள்ளத்தில் எப்பொழுதும் சிவனுணர்வே முற்பட்டு உள்ளது என்பதையும் ஊகித்துணரலாம். காஞ்சி மாநகரில் விடையோன் ஸ்ரீ ஏகாம்பரநாதர் எனவும் உமையம்மையார் காமாக்ஷி என்வும் துதிக்கப்படுவர். இளையோனுகிய முருகன் குமரகோட்டம் என்னும் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ருன். காஞ்சீபுரத்தில் காமாக்ஷியம்மைக்கு உள்ள தலைமை தோன்ற "அவளுறையுங்கச்சிப்பதி" என்றுங் கூறினுர் என்ற உரை ஆசிரியரின் விளக்கமும் போற்றற்குரியதே. இந்த ஒரு பாடலில், உமையம்மையார் காஞ்சியில் ஈசனைப் பூசித்தது, முப்பத்திரண்டு அறங்கள் வளர்த்தது, ஈசனின் இடது பாகத்தைப் பெற்றது, சரவணப் பொய்கையில் தோன்றிய இளங்குழந்தை வடிவாகிய குமரக்கடவுளுக்குப் பால் அருத்தியது முதலிய பல வரலாறுகளைத் தொகுத்துரைத்த நூலாசிரியரின் புலமைத்திறத்தையும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்ருேம்.

பொதுவாக வைணவர்களுக்குக் காஞ்சீபுரம் என்ருல் வரதராசப் பெருமாள் கோயில் தான் நினைவுக்கு வரும். சில வைணவர்கள், 'காஞ்சிக்குப் போய் வந்தேன்' எனச் சொல்ல நேரும் போது, காஞ்சி என்று சொல்லாது, 'பெருமாள கோவிலுக்குச்' சென்று வந்தேன் என்று தான் கூறுவார்கள். அம்மாதிரி வைணவர்கள் கூறியதைப் பலமுறை யாமுங் கேட்டிருக்கின்ருேம். இத்தகைய வைணவ மரபிலே வந்த வில்லிபுத்தூராழ்வார் காஞ்சீபுரம் என்றதும் வரதராசப் பெருமாளை முதன் முதலில் நினைவுபடுத்தாது, விடையோனையும் அவன் பாகம் திறைகொண்ட உமையம்மையாரையும், இளையோனுகிய முருகப்பெருமானையுமே நினைவு படுத்தியது அவரது மெய்யுணர்வு பெற்ற தன்மைக்குச் சிறந்த சான்ருகத் திகழ்கின்றது.

அடுத்த பாடலில் (பாடல் 14) வரதராசப்பெருமாள் திருக்கோயிலைத் தரிசித்து பின் ஒற்றை மாமர நீழலின் கீழ் உறைகின்ற எட்டுத் தோள்களையுடைய சிவபெருமான் காட்சியளிக்கின்ற திருமேனிக்கோலத்தையும் உள்ளன்போடு வணங்கி அந்த நகரத்தில் உள்ள நற்பயன்களையளிக்கும் தன்மை வாய்ந்த ஏழு நதிகளிலும் நீராடினுன் என்று கவி கூறுகிருர். இங்குச் சிவபிரானை எண்புயனுர் உறை மெய்க் கோலம் என வில்லிபுத்தூரார் பாடியது திருநாவுக்கரசர் பெருமான் தமது திருவங்கமாலையில் எண்டோள் வீசி நின்ருடும் பிரான் எனப் போற்றியுள்ளதை நினைவு படுத்துகின்றது அல்லவா?

அடுத்தபாடலில் காஞ்சிக் கோயில்களை வணங்கிய பிறகு, அருச்சுனன் திருவண்ணுமலையை வணங்கின செய்தியைக் கூறும் பாடலைக் கீழே கொடுத்துள்ளோம்.

பெற்ருள்சக தண்டங்கள் அனைத்தும் மவைபெற்றும்
முற்ருமுகிழ் முலையாளொடு முக்கண்ணர் விரும்பும்
பற்ருமென மிக்கோரிகழ் பற்றென்றினு முண்மை
கற்ருர்தொழு மருணசலம் அன்போடு கைதொழுதான்.
(அருச்சுனன் தீர்த்தயாத்திரைச்சருக்கம், 15ம் பாடல்)

அனைத்து உலகங்களையும் பெற்றெடுத்தும் தான் முதிர்ச்சி அடையாத முகிழ்த்த உண்ணாமுலையம்மையோடு முக்கண்ண ரான அருணாசலேச்வரர் விரும்பி உறைகின்ற திருத்தலமாகும் இது என்ற காரணத்தால், மேலோர் இகழ்கின்ற இவ்வுலகப் பற்று தம்மைப் பொருந்திய காலத்தும், உண்மைப் பொருள் கற்றறிந்தவர்கள் தொழுகின்ற திருவண்ணாமலையை அன் புடன் அருச்சுனன் கும்பிட்டான் என்பது மேற்காட்டிய பாடலின் திரண்ட பொருளாகும்.

''சிவபிரான் தன்னுடைய பராசக்தியான அம்பிகையினது உதவியைக் கொண்டே பிரபஞ்சங்களைப் படைத்தருளுத லாலும், இச்சாமாத்திரத்தால் அவையனைத்தும் உண்டாதல் பற்றி 'பெற்றுள்சகதண்டங்கள் அனைத்தும், அவைபெற்றும் முற்றாமுகிழ் முலையாள்' என்றார்'' என்பது உரைகாரரின் விளக்கம். இப்பகுதி ''... ... உலகுயிரெல்லாம் ஈன்றும் பவன் பிரமசாரியாகும், பான்மொழி (அம்பிகை) கன்னியாகும் ....'' என்ற சிவஞானசித்தியார் கருத்தை ஒத்து இருத்தல் காண்க.

இப்பாடலின் பிற்பகுதிக்கு உரையாசிரியர் கூறும் விளக்க மும் சீரியதேயாம். அதையும் இங்குத் தருவோம். ''உலகப் பொருட்பற்று முத்திபெறுதற்குத் தடையாதல் பற்றி ஒழிக்கத் தக்கதாதலால் 'மிக்கோர் இகழ்பற்று' எனப்பட்டது. பற்று ஒன்றினும் தொழுதலாவது பிரபஞ்ச சம்பந்தமான உண்ணல், உடுத்தல், உறங்கல் முதலிய தொழில்களைச் செய்யும் பொழுதும் இடைவிடாது சிந்தித்தல். இது தன்னை நினைத்த மாத்திரத்தில் முத்தியளிக்கும் தலமாதலால், அவ்வுண்மை உணர்ந்தோரால் பற்றற்றே தொழவேண்டுமென்ற நியதி யில்லாமல், பற்று அறாத பொழுதும் தொழவேண்டு மென்க''. உரைகாரரின் இந்த விளக்கம், நூலாசிரியர் அருணாசல க்ஷேத்திரத்தின் பெருமையைத் தாம் எவ்வாறு உணர்ந்து பிறர்க்கும் உணர்த்துகிறார் என்பதைக் காட்டுகிறது. திருமால் தலத்தைத் தொழுதான் என்று சொல்லும்போது ஆசிரியர் காட்டும் ஆர்வத்தைவிடச் சிவத்தலத்தைக் கூறும் போது

அவரது பேரார்வம் மிக்குத்தோன்றுதலையும் கண்டு கொள்க. அடுத்து வரும் பாடல்களிலும் இங்ஙனமே வருதலையும் காண்க.

இதே சருக்கம் 16வது பாடலில் அருச்சுனன் பெண்ணை யாற்றில் நீராடி திருக்கோவலூர் உலகளந்த பெருமாளையும், திருக்கோவலூர் வீரட்டானேச்வரரையும் தரிசித்தான் என்று கூறுகிருர். இந்தச் செய்தியைக் கூறும் அப்பாடற் பகுதியைக் கீழே காண்க.

கருகுங்கரு முகில்மேனியர் கவிஞானியர் கண்ணில்
பருகுஞ்சுவை அமுதானவர் பாதந்தலை வைத்தான்.

''கருமை நிறங்கொண்ட பெரிய மேகம் போன்ற நிறத்தையுடையவராகிய திருமால், கவிமட்டுமல்லாது சிவ ஞானியராகவும் விளங்கிய திருஞானசம்பந்தர் அப்பர் ஆகிய தேவார ஆசிரியர்கள் கண்ணினுல் உண்ணும் சுவை மிக்க அமுதம் போன்றவராகிய சிவபெருமான் ஆகியோரது திருவடிகளைப் பார்த்தனை தன் தலைமீது கொண்டான்'' என்பது இப் பகுதியின் பொருளாகும். சிவபிரானைச் 'சுவை அமுதானவர்' என்று கூறிய வில்லிபுத்தூராரின் மெய்யுணர்வைப் பாராட்ட வார்த்தைகள் கண்டிலேம்! இவ்வாறின்றி, கவிஞானியர் என்பதற்கு முதலாழ்வார்கள் மூவர் என்றும் சுவை அமுதான வர் என்பதற்குத் திருமால் என்றும் பொருள் கூறியுள்ள உரை காரரின் கூற்றும் பொருந்துமோ?

அடுத்து, அருச்சுனன் திருவெண்ணெய்நல்லூர், திரு வதிகை ஆகிய இரு சிவத்தலங்களையும் திருவஹீந்திரபுரம் என்னும் திருமால் தலத்தையும் தரிசித்தான் என்பதை இச் சருக்கம் 17-ம் பாடல் கூறுகிறது. அப்பாடலைக் கீழே காண்க.

ஐயானனனியல் வாணனை அடிமைகொள மெய்யே
பொய்யாவண மெழுதும்பதி பொற்போடு வணங்கா

மெய்யாகம வதிகைத்திரு விரட்டமு நேமிக்
கையாளன கீந்திரபுரமுங் கண்டுகை தொழுதான்.

"ஐந்து திருமுகங்களையுடைவரான சிவபிரான் இயற்றமிழ்ப் புலவரான சுந்தரமூர்த்தி நாயனரை தடுத்தாட் கொள்ளும்பொருட்டு பொய்யாகிய அடிமையோலையை மெய் போலவே எழுதிய தலமாகிய திருவெண்ணெய்நல்லூரையும், உண்மையான சிவாகமங்களிற் கூறப்பட்ட விதிப்படி அருச் சனைகள் நடைபெறுகின்ற திருவதிகை வீரட்டானம் என்ற தலத்தையும், சக்கராயுதத்தைக் கையிலேந்திய திருமாலினது திருவகீந்திரபுரம் என்னும் தலத்தையும் தரிசித்து கைகள் கூப்பி வணங்கினன். தலத்தை வணங்குதல் என்பது அத் தலத்துக் கோயில் கொண்ட இறைவனை வணங்குதல் என்பதாம்.'

இத்திருப்பாடலின் முதலிரண்டு அடிகளின் மூலம் வில்லிபுத்தூரார் சிவபிரானையேயன்றி அவனது அடியார் களையும் மதித்துப் போற்றும் இயல்பினர் என்பதும் தெய்வப் புலவர் சேக்கிழார் பெருமானின் பெரியபுராணத்தை நன்கு கற்றவர் என்பதும் தெளிவாகின்றது. விரிவஞ்சி இங்கு நாம் சுந்தரரைப் பெருமான் தடுத்தாட்கொண்ட வரலாற்றை எழுதவில்லை. திருவதிகை வீரட்டானத்தை மெய்யாகம அதிகை எனப் போற்றியதன் மூலம் அத்தலம் அக்காலத்தில் மிக்க சிறப்புடன் ஆகமவிதிகள் தவருது பூசனைகள் இயற்றப் பெற்றுச் சிறந்திருந்ததென்பதைக் காட்டுகின்ருர் எனக் கொள்க.

சைவசம்பிரதாயத்தில் கோயில் என்ருலே நினைவுக்கு வருவதும், தரிசிக்க முக்தி எனச் சாத்திரங்களால் போற்றப் படுவதுமாகிய சிதம்பரத்தலத்தின் பெருமையைக் கவிஞர் எந்த அளவுக்கு அறிந்திருந்தார் என்பதற்குச் சான்று பகரும் பாடல் இதோ காண்மின்.

இன்னம்பல பலயோனியில் எய்தாநெறி பெறவே
முன்னம்பல ரடிதேடவு முடிதேடவு மெட்டா
அன்னம்பல பயில்வார்புன லணிதில்லையு ளாடும்
பொன்னம்பல நாதன்கழல் பொற்போடு பணிந்தான்.

(அருச்சுனன் தீர்த்தயாத்திரைச்சருக்கம், 18ம் பாடல்)

''முற்காலத்தில் திருமாலும் நான்முகனும் முறையே திருவடியையும் திருமுடியையும் தேடவும் அவர்களுக்கு எட்டாத திருவுருவங் கொண்டிருந்தவரும், பல அன்னப் பறவைகள் தங்குதலையுடைய நீர்வளம் மிக்க அழகிய தில்லை எனப்படும் சிதம்பரத்தலத்திலே திரு நடனஞ் செய்கின்ற பொன்னம்பல நாதனுமாகிய சிவபிரானது திருவடிகளை, மீண்டும் பலவகைப்பட்ட பிறப்புக்களில் பிறவாத தன்மையை யடையவேண்டி அன்போடு வணங்கினான்'' என்பது இப் பாடலின் பொருளாகும்.

பிரமதேவன், திருமால் என்ற இருவர் தேடியதைப் பலர் என்றது தமிழ்வழக்கின்படியாகும். ஒன்றுக்கு மேற்பட்டது பல ஆகையாலென்க. இப்பாடலில் தேடியவர்களது பெயர் களைக் குறிப்பிடாதது, அடி முடி தேடியவர்கள் திருமாலும் நான்முகனுமேயாவர் என்பது ஸகல புராண பிரசித்தமான வரலாறு ஆகையால் என்று கொள்க. எனவே பரமவைணவ ராகிய வில்லிபுத்தூராழ்வார், லிங்கபுராணம் ஸ்காந்தபுராணம் போன்ற சிவபுராணங்களிலும் மற்றும் திருமுறைகளிலும், சைவநூல்களிலும் விதந்து ஓதப்பட்ட பிரமவிட்டுணுக்கள் சிவபிரானது திருமுடியையும் திருவடியையும் தேட முற்பட்டுத் தோல்வியுற்ற வரலாற்றை ஏற்றுகொண்டவராதல் காண்க. வேறுசில இடங்களிலும் வில்லிபுத்தூரார் இந்த வரலாற்றைப் பாடியுள்ளது வருமிடங்களில் காட்டுவோம். எனவே, சிவ பிரானுரது பரத்துவத்துக்கு வில்லிபாரதத்தில் இதனினும் மேலான சான்று வேண்டுமோ? தரிசிக்க முத்தியளிக்கும் தலம் சிதம்பரம் என்பதையும் அருச்சுனன் மீண்டும் பிறவாநெறி

அடையத் தில்லையம்பலத்துள் பொன்னம்பலநாதனின் திரு வடிகளைத் தரிசித்து வணங்கினுன் என்று கூறுவதன் மூலம் நிலைநாட்டியுள்ளதும் கண்டு கொள்க. சிதம்பரம் என்றுலே சைவர்கள் அடையும் ஆனந்தத்தில் தாம் ஒரு சிறிதும் குறை யாதவர் என்பதையும் இப்பாடலின் மூலம் புலப்படுத்துகின்ரு ரன்ருே?

அடுத்தபடியாக அருச்சுனன் திருவரங்கம் முதலான சோழநாட்டுப்பதிகள் பலவற்றைத் தரிசித்துப் பின் மதுரை வந்து சேர்ந்தான். மதுரைமாநகரம் வைகை நதியின் கரை யில் உள்ள சிவராஜதானியாகும். அதனைப்பாடும் புலவர் எவரும் வைகை நதியைப் பாடாமலிரார். வில்லிபுத்தூராரும் மதுரையைக் குறிப்பிடும்போது வைகையையும் நினைவு கூர்கிருர். வைகைநதி என்றதுமே அவரது நினைவில் வருவது திருஞானசம்பந்தப் பெருமான் 'வாழ்க அந்தணர்' எனத் தொடங்கும் திருப்பாசுரத்தை எழுதி வைகையில் இட்ட ஏடு நதியின் வெள்ளத்தை எதிர்த்து நீரைக் கிழித்துக் கொண்டு சென்ற வரலாறேயாம். இதனுல் வில்லிபுத்தூரார் சைவ சமயாசாரியர்களின் அருள்வரலாற்றைப் போற்றும் பண்புடை யவர் என்பதையும் அறிந்து கொள்ளலாம். இதோ, அப் பாடற் பகுதியைப் பாருங்கள்.

இளவண்டமிழ் எழுதேடுமுன் எதிரேறிய துறைசூழ்
தளவங்கமழ் புறவஞ்செறி தண்கூடல் புகுந்தான்.

(அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம், 20ம் பாடல்)

''இளமையையும் வண்மையையுமுடைய தமிழ்ப்பாசுரம் எழுதப் பெற்ற ஏடு முன்பு கரையெதிர்த்துச் சென்ற (வைகை யாற்றின்) துறையையடுத்ததும் முல்லை மலர் மணம் வீசப் பெற்ற காடுகள் சார்ந்ததுமான குளிர்ச்சி பொருந்திய கூடல் என்ற ஒரு பெயரையுமுடைய மதுரை மாநகரத்துள் சென்று சேர்ந்தான்'' என்பது மேற்காட்டிய இரண்டு அடிகளின் திரண்ட பொருளாகும்.

அருச்சுனன் மதுரை சென்றடைந்து பாண்டியராஜனைக் கண்டான் என்பதை ஆசிரியர் பின் வரும் பாடலாற் கூறுகின்றார்.

குன்றிலிள வாடைவரும் பொழுதெல்லா
மலர்ந்ததிருக் கொன்றைநாறத்
தென்றல்வரும் பொழுதெல்லாஞ் செழுஞ்சாந்தின்
மணநாறுஞ் செல்வவீதி
நன்றறிவார் வீற்றிருக்கு நான்மாடக்
கூடல்வள நகரியாளும்
வென்றிபுனை வடிசுடர்வேல் மீனவனை
வானவர்கோன் மதலைகண்டான்.
(அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம், 21ம் பாடல்)

இப்பாடலில் முதல் வரியில் குன்று எனக்குறிப்பிட்டது திருக்கயிலாய மலையையாகும். வாடைக்காற்று திருக்கயிலாய மலையினையும் கொன்றையின் நறுமணத்தால் அதன் மீது வீற்று இருக்கும் பெருமானையும் நினைவூட்டுகின்றது என்பதே முதலடியின் கருத்தாமெனக் கொள்க. தென்றற்காற்று சிவபெருமானின் பக்தரான அகத்தியர் எழுந்தருளியிருக்கும் பொதிய மலையைச் சந்தன மணத்தால் நினைவூட்டுகின்றது. இது இரண்டாமடியால் பெறப்படும் செய்தி. அடுத்து மூன்றாமடியில் நன்றறிவார் வீற்றிருக்கும் நான்மாடக்கூடல் என்பதில் நன்றறிவார் என யாரைக் குறிப்பிட்டுள்ளார் என்பது பற்றிச் சிறிதே சிந்திப்பாம். உரைகாரர் இதற்குப் பொருள் ''நன்மையையறியும் மேன் மக்கள்'' எனக் கூறியுள்ளதும் பொருந்துமோ? சிவபிரானையே நன்றறிவார் எனப்பாடியுள்ளார் கவி எனக் கொள்வதில் உள்ள குறைதான்யாதோ? திருஞானசம்பந்தப் பெருமான் சிவபிரானை 'நன்றுடையானைத் தீயதில்லானை' எனப் பாடியுள்ளதை இங்கு நினைவு படுத்துகிறோம். அதே முறையில் வில்லிபுத்தூராரும் உலகத்து உயிர்கள் அனைத்துக்கும் நல்லன எவையோ அவற்றை அறிபவர், அறிந்தவண்ணம் அருளுபவர் என்ற பொருளிலேயே சிவபிரானை நன்றறிவார்

எனப் போற்றியுள்ளார் எனக்கோடலே தக்கதாகும். நான்மாடக்கூடல் என்ற மதுரையின் மற்றொரு பெயரைக் கூறியவர் அதன் வரலாற்றையறியாதிருப்பரோ? ஒரு காலத்தில் வருணன் சோமசுந்தரக் கடவுளின் வல்லமையைச் சோதிக்கவெண்ணி, ஏழு மேகங்களையும் பெருமழை பொழிந்து மதுரையை அழிக்கும்படி ஏவ, அங்ஙனமே வந்து அளவின்றி மழை பொழிந்த ஏழு மகங்களின் செயலைத் தடுக்கும் பொருட்டு அக்கடவுளின் கட்டளையால் அவரது சடைமுடியினின்றும் புறப்பட்ட நான்கு மேகங்களும் மேலுயர்ந்து நான்கு மாடங்களாகக் கூடி மழையைத் தடுத்ததால் நான்மாடக் கூடல் என்னுமொரு பெயர் அந்த நகரம் பெற்றது. இங்ஙனம் மதுரையின் மாஹாத்மியத்தை முற்றிலும் அறிந்திருந்த பெரியாராகலின் மதுரைச் சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளிய மதுரை என்ற பொருளிலேயே நன்றறிவார் வீற்றிருக்கும் நான்மாடக்கூடல் என்று பாடியுள்ளார் என்று கொள்க.

மதுரைமாநகரின் மாஹாத்மியத்தைக் கூறும் நூல்களுள் சிறந்தவை வடமொழியில் உள்ள ஹாலாஸ்ய மாஹாத்மியமும், தமிழில் பரஞ்சோதி முனிவர் பாடியருளிய திருவிளையாடற்புராணமுமாம். இவ்விரண்டிலும் வில்லிபுத்தூரார் மிக்குப் பயிற்சியுடையார் என்பது மட்டுமல்லாது சிவபெருமானின் முதன்மையையும் அருளாடல்களையும் கூறும் சைவப் பெருநூல்களைப் பெரிதும் போற்றிய பண்பினருமாவர் என்பது முன் 21ம் பாடலில் 'நான்மாடக்கூடலான' வரலாற்றைச் சொன்னவர், பின்னர் 23ம் பாடலில் 'இந்திரன்முடி மீது வளையெறிந்த' வரலாற்றை 'வெய்தின் மகபதி முடியில் வளையெறிந்து மீண்ட நாள்' என்றும், இவ்வரலாற்றுடன் 'கடல் சுவற வேல் விட்ட' வரலாற்றைச் சேர்த்து இதே சருக்கம் 34ம் பாடலிலும் அருமையாகக் கூறியுள்ளமையால் புலனாகின்றது. இரண்டு வரலாறுகளும் ஒருங்கே கூறப்பட்ட 34 வது பாடலைக் கீழே காணுங்கள்.

ஐந்தருவின் நீழலில்வாழ் அரியுடனே
ஓரரியா சனத்தின் வைகிப்
புந்தியுற வொருவருமுன் பூணாத
மணியாரம் பூண்ட கோமான்
அந்தவுரை செவிப்படலும் அதிதூரம்
விழைவுடன் சென்றுடு தீர்த்தம்
வந்ததுநந் தவப்பயன் என்றுட்கொண்டான்
மகோததியும் வணங்குந் தாளான்.

(அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம், 34 ம்பாடல்)

"தெய்வீகமான ஐந்து மரங்களின் நிழலில் வாழ்கின்ற இந்திரனுடனே ஒரு சிங்காதனத்தில் உடன் வீற்றிருந்து முன் ஒருவரும் அணிந்திராத இரத்தின மாலையை மனம் மகிழ அணிந்து கொண்ட தலைவனும், பெரிய கடலும் வணங்கிய திருவடிகளையுடையவனுமான அப்பாண்டியவரசன் தன்னுடைய செவிகளில் அந்தவுரைபட்டவுடனேயே, வெகுதூரம் சென்று விருப்பமுடன் செய்யும் தீர்த்தயாத்திரையை முன்னிட்டு இங்கு அருச்சுனன் வந்தது நமது தவத்தின் பயனே எனவெண்ணி மகிழ்ந்தான்" என்பது மேலே காட்டிய பாடலின் திரண்ட பொருளாகும்.

முதலில் அருச்சுனன் என்று அறியாது அவனை தீர்த்த யாத்திரை செல்லும் ஓர் வைதிகமுனி என்று மட்டுமே அறிந்த பாண்டியன் பின்னர் அருச்சுனன் பாண்டியன் மகள் சித்திராங்கதையைக் காந்தருவ முறையில் கூடி மகிழ்ந்த பின்னர், அச்சித்திராங்கதையின் செவிலித்தாயார் மூலம் வந்தவன் பாண்டவரில் ஒருவனான அருச்சுனனே என்ற வார்த்தையைக் கேட்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தான். இச்செய்தியைக் கூறிய இப்பாடலில் பாண்டியனைக் குறிக்குமிடத்துத் திருவிளையாடற் புராணச் செய்திகளைக் குறிப்பிட்டுப் பாடியுள்ளார் என்பது சைவர்கள் அறிந்து மகிழ வேண்டியதொன்றாகும். அவ் வரலாறுகளையும் சிறிது இங்குக் கூறுவோம்.

மலயத்துவச பாண்டியனது மகளாகிய தடாதகைப் பிராட்டியாரைத் திருமணம் புரிந்துகொண்டு சுந்தரபாண்டிய ராகிப் பாண்டியநாட்டை அரசுபுரிந்துவந்த சோமசுந்தரக் கடவுள் (மதுரையில் சிவபிரானது திருநாமம்) அவளிடம் தனக்குப் பிறந்த குமாரனும் முருகனது அம்சமானவனுமான உக்கிரகுமார பாண்டியனுக்கு முடிசூட்டி, அவனுக்குப் பகை யாகப்போகும் கடலையும், இந்திரனையும், செருக்கடைந்த மேருமலையையும் வெல்லுமாறு முறையே வேல், வளை, செண்டு ஆகியவற்றைக் கொடுத்துப் போயினன். பின்னர் உக்கிரகுமார பாண்டியன் அரசுபுரிந்த காலத்தில் தமிழ்நாடு முழுவதும் பன்னிரண்டு வருஷங்கள் மழைபொழியாது பஞ்சம் உண்டாயிற்று. அது கண்டு வருந்திய சேர, சோழ, பாண்டிய ரென்னும் முடிமன்னர் மூவரும் பொதிய மலை சென்று அகஸ்தி யரிடம் முறையிட்டு, அவர் உபதேசப்படி சோமவார விரத மிருந்து, விண்வழியே செல்லும் ஆற்றல்பெற்று, மழை பெய் விப்பவனாகிய இந்திரனது சபா மண்டபத்தைச் சென்றடைந் தனர். இவர்களது வரவையறிந்த இந்திரன் இவர்கள் அமரும்பொருட்டுத் தன் ஆசனத்தினும் தாழத்தனியே மூன்று சிங்காதனங்கள் இடுவித்தனன். சேரன் சோழன் ஆகிய இரு வரும் இந்திரன் இடுவித்திருந்த ஆசனங்களில் அமர்ந்தனர். உக்கிரகுமாரனோ அங்ஙனமின்றித் தேவராஜனது அரியாச னத்தில் ஏறி அவனுக்குச் சமமாக வீற்றிருந்தனன். அது கண்டு பொறாத இந்திரன் மற்றை இருவரையும் விசாரித்து வந்த காரியமறிந்து அவர்கள் நாட்டிற்கு மழை பொழியுமாறு வரந்தந்து அனுப்பினன். பாண்டியனை அவமானப்படுத்தக் கருதி ஒரு சூழ்ச்சியை மனதில் எண்ணி அவனுக்கு ஒரு சிறப்பு செய்வான் போல எண்ணிறந்த தேவர்கள் சுமக்கலாற்றாது வருந்திக் கொணர்ந்த மிக்க பாரமுடைய பெரியதொரு மாலையை அவனுக்குக் கொடுத்தனன். உடனே பாண்டியன் அதனைத் தனது பெருவலிமையால் எளிதில் வாங்கிப் பூமாலை போன்று தன் கழுத்திலணிந்து கொண்டனன். இந்திரன் அதனைக் கண்டு பெருவியப்புற்றுப் பாண்டியனை நோக்கி "இன்று முதல் உலகமெல்லாம் உன்னை ஆரம் தாங்கு

பாண்டியன் என்று மதிப்பதாக'' என்று புகழ்ந்து கூறினன். உக்கிரகுமார பாண்டியன் அப்புகழ்ச்சியைச் சற்றும் பொருட் படுத்தாது, இந்திரனை மதித்துத் தான் வந்த காரியத்தையும் கூருது, அவனரியணையினின்றும் இறங்கித் தனது நகரம் அடைந்தான். இதனுல் மற்ற இரு நாடுகளிலும் மழை பெய்யப் பாண்டியநாடு மட்டும் மழையின்றி இருந்தது. அச்சமயம் பொதியமலைச்சாரலில் வேட்டையாடச் சென்றிருந்த பாண்டியன் அங்கு மேய்ந்து கொண்டிருந்த மேகங்களைப் பிடித்துத் தளையிட்டுச் சிறையிலடைத்தனன். அதனுல் கோபங்கொண்ட இந்திரன் பாண்டிய நகரைச் சூழ்ந்து கொடும்போர் புரிந்து, பாண்டியன் மீது தனது வச்சிரப் படையை ஏவினன். உடனே பாண்டியன் சிவபிரான் தனக் களித்த வளை யென்னும் சக்கரப்படையினை இந்திரன் மேல் செலுத்த. அப்படை இந்திரனது வச்சிராயுதத்தை வீழ்த்தி இந்திரனுடைய மகுடத்தைக் கீழேதள்ளிச் சிதைத்தது. இந்திரன் அஞ்சித் தோற்ருேடி பாண்டியனிடம் சமாதானம் செய்துகொண்டு மேகங்களை விடுவிக்கப்பெற்று அதற்கு ஈடாக மழையைப் பெய்வித்தான். இதுவே இந்திரன் முடி மீது வளையெறிந்த படலத்தின் சுருக்கம். விரிவு திருவிளை யாடற் புராணத்தில் காண்க.

மகோததியும் வணங்குந் தாளான் என்பதால் குறித்த வரலாறு அதே திருவிளையாடற்புராணத்துக் கடல்சுவற வேல் விட்ட படலத்துச் செய்தியாகும். உக்கிரகுமார பாண்டியன் அசுவமேதயாகங்கள் தொண்ணூற்ருறு செய்து முடித்ததும் இந்திரன் பொருமை கொண்டு, கடலரசனுன வருணனை அழைத்து மதுரையை அழிக்குமாறு ஏவினன். அங்ஙனமே நள்ளிரவில் கடல் மதுரையை நெருங்கினபோது, பாண்டியன் தனது தந்தையார் அளித்த முப்படைகளுள் ஒன்ருன வேற் படையை கடல் மீது எறிய அது பட்டவுடனே கடல் வறண்டு பாண்டியன் கால் மட்டமாயிற்று. அது தோற்றவன் வென்ற வனை வணங்குதல் போல அமைந்தது. அதனுல் பெருங் கடலும் வணங்கும் பாதங்களையுடையவன் எனக்

குறிப்பிட்டார். இவ்விரண்டு வரலாறுகளும் உக்கிரகுமார பாண்டியனது ஆயினும் அவற்றை சித்திரவாகனன் என்னும் பாண்டியன் மீது ஏற்றியது கவிமரபு எனக் கொள்க, திருவிளையாடற்புராணத்து இவ்வரலாறுகளைக் குறிப்பிடாமலேயே கதையைத் தொடர்புபடுத்திச் செல்லக்கூடுமாயினும், வில்லிபுத்தூரார் இவைகளைக் குறிப்பிட்டது சிவபிரானையும், சிவ புராணங்களையும் எவ்வளவு தூரம் அவர் மதித்துப் போற்றிய நற்பண்பினராய், நடுநிலையாளராய் இருந்தார் என்பதற்குச் சான்ருகின்றது.

பாண்டியன் தன் மகள் சித்திராங்கதையை அருச்சுனனுக்கு மணஞ்செய்து கொடுக்க ஒருப்பட்டு அங்ஙனமே இருவரும் திருமணம் செய்து கொண்டார்கள் என்பதைப் பின்வரும் பாடல் கூறுகிறது.

இந்திரனுஞ் சசியுமென இறையோனும்
உமையுமென எம்பி ரானும்
செந்திருவு மெனக்காம தேவுமிர-
தியுமெனவெஞ் சிலைவ லோனும்
சந்தணிபூண் முலையாளும் சதுர்மறையோர்
சடங்கியற்றத் தழல்சான் ருகத்
துந்துபியின் குலமுழங்கச் சுரிசங்கின்
குழாந்தழங்கத் துலங்க வேட்டார்.

(அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம், 41ம் பாடல்)

"இந்திரனும் இந்திராணியும் போலவும், இறையோனுகிய சிவபிரானும் பார்வதியும் போலவும், எமது தலைவனுகிய திருமாலும் அழகிய இலக்குமி தேவியும் போலவும், மன்மதனும் இரதியும் போலவும், அருச்சுனனும் சித்திராங்கதையும் நான்கு வேதங்களில் வல்லவர்களான அந்தணர்கள் விவாகச் சடங்குகளைச் செய்விக்க, அக்கினி சாக்ஷியாகத் திருமணஞ் செய்து கொண்டார்கள்" என்பது மேற்படி பாடலில் போந்த செய்தியாகும். இப்பாடலில் சிவபிரான், திருமால்

ஆகிய இருவரும் குறிப்பிடப்பட்டுள்ளனர். நாம் முன்னரே எடுத்துக் காட்டியபடி திருமால் வில்லிபுத்தூரார் பிறந்த குலத்துக்கு வழிபடு கடவுளாவர். எனவே எம்பிரான் என்று திருமாலைக் குறிப்பிட்டது முற்றிலும் சரியே. அதே பாடலில் சிவபிரானை இறையோன் எனக்குறிப்பிட்டது தான் சிறப்பு. வில்லிபுத்தூராரின் உள்ளத்தில் சிவபிரானே முழுமுதற் கடவுள் என்ற எண்ணம் உறுதியாக இருந்தது. அதனாலேயே சிவபிரானை இறையோன் என்றும், திருமாலைத் தமது தலைவர் என்ற அளவுக்குட்படுத்தியும் பாடியுள்ளார் என்பது நாம் அறிந்து இன்புற வேண்டியதாகும். தனியாகத் திருமாலை மட்டும் பாடும்போது, எங்ஙனம் பாடியிருப்பினும், ஒரே சமயத்தில் இருவரையும் பாடும்போது சிவபிரானுக்கே ஏற்றம் கொடுத்துப் பாடியுள்ளார். வேறு சிலவிடத்தும் இம் மாதிரியுள்ளது வரும்போது காட்டுவோம்.

பின்னர் அருச்சுனன் திருமாலிருஞ்சோலை, சேது முதலிய தலங்களையும் மேலும் சில புண்ணிய தீர்த்தங்களையும் தரிசித்தும் நீராடியும் மேற்குக் கடற்கரையில் உள்ள கோகர்ணம் என்ற சிவத்தலத்தை அடைந்தான் என்பதைக் கூறும் பாடல் இதோ தருகிறோம்.

அந்நெடுந் திசைப்புனல்கள் ஆடுநாளில்
ஐந்துதடத் தரம்பையர்ஓர் ஐவர்சேர
இந்திரன்வெஞ் சாபத்தால் இடங்கராகி
இடருழந்தோர் பழையவடி வெய்தநல்கி
சிந்துதிரை நதிபலவுஞ்சென்று தோய்ந்து
திங்களுடன் அரவுறவு செய்யும்வேணிக்
கொந்தவிழும் மலரிதழித் தொடையோன்வைகும்
கொடிமதில்சூழ் கோகன்னம் குறுகினனே.

(அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம், 48ம் பாடல்)

"அந்த நீண்ட திக்குகளில் உள்ள தீர்த்தங்களில் எல்லாம் ஆடுங்காலத்தில், ஐந்து தடாகங்களில் தேவேந்திரனால் உண்டான ஒரு கொடிய சாபத்தால் முதலைகளாகித்

துன்பத்துள்ளாகியிருந்து உழன்று கொண்டிருந்த தேவமாதர் கள் ஐவர் பழைய வடிவம் அடையுமாறு செய்து, மேலும் அலை வீசுகின்ற நதிகள் பலவற்றிலும் சென்று நீராடி, சந்திர னுடனே பாம்பு உறவாடுகின்ற சடாமகுடத்தில் கொத்துக்கள் விரிந்த கொன்றைமலர் மாலையை அணிந்த சிவபிரான் உறை கின்ற திருக்கோகன்னம் என்ற திருத்தலத்தை அடைந்தான்'' என்பது மேற்படி பாடல் கூறும் செய்தியாகும். இப்பாடலின் ''திங்களுடன் அரவு உறவு செய்யும் வேணி'' என்ற பகுதி திருநாவுக்கரசு நாயனாரின் திருவதிகை வீரட்டானத்துப் போற்றித் திருத்தாண்டகம் 4வது திருப்பாடலில் உள்ள ''பாம்பும் மதியும் புனலுந் தம்மிற் பகை தீர்த்துடன் வைத்த பண்பா போற்றி'' என்னுமடியை நினைவூட்டுகின்றதன்றோ? இங்ஙனம் சிவபிரானைத் திருமுறை ஆசிரியர்களை அடியொற்றி வில்லிபுத்தூரார் பாடியுள்ளது அவரது மெய்யுணர்ந்த உள்ளத்துக்கு மேலும் சிறந்த சான்றாகும். ''கொந்தவிழும் மலரிதழித் தொடையோன்'' என்று பாடியுள்ளதும் சிவபிரா னின் அடையாள மாலையும் பிரணவ புஷ்பம் என்று போற்றப் படுவதுமான கொன்றை எந்த அளவுக்கு ஆசிரியரின் உள்ளத் தைக் கவர்ந்திருந்தது என்பதைப் புலப்படுத்துகின்றது.

கோகன்னத் திருப்பதியில் சிவபிரானைப் பார்த்தன் வணங்கினான் என்பதைக் கூற வந்த கவி தம் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்த சிவபிரானது முப்புரமெரி செய்த வீரத்தை மீண்டும் போற்றியுள்ளதை இதே சருக்கம் 49ம் பாடலின், ஆகன்னமுறச் செம்பொன் வரைவில் வாங்கி அவுணர்புரம் கட்டழித்தோன் அடியில் வீழ்ந்து என்ற முதல் அடியில் காணலாம். ''காதளவு பொருந்துமாறு செவ்விய பொன் மலையை வில்லாக வளைத்து, அவுணர்களின் முப்புரத்தை முற்றிலும் அழித்தவனாகிய சிவபிரானது திருவடிகளில் வீழ்ந்து வணங்கி'' என்பது இப்பாடற்பகுதியின் பொருளா கும். முப்புரம் எரிசெய்த வீரம் பற்றி நாம் முற்கூறியவற்றை யும் இங்குக் கொள்க.

பின்னர் அருச்சுனன் ஸ்ரீகிருஷ்ணனது தங்கையான சுபத்திரை என்னும் மங்கைநல்லாளை மணஞ்செய்து கொள்ளும் விருப்பத்தால் துவாரகை செல்ல விரும்பித் துறவியின் கோலத்தில் சென்ருன். ஆனல் நேரே துவாரகை செல்லாது அதைச் சார்ந்த ரைவதம் என்னும் மலையில் ஓர் ஆலமரத்தின் நிழலில் தங்கித் தன் உயிர்த் தோழனை கண்ணனை நினைத்தான். இங்கு ரைவதமலையில் ஆலமரத்து நிழலில் அருச்சுனன் அமர்ந்திருந்த காட்சியைப் பாட எண்ணிய ஆசிரியருக்குத் திருக்கயிலாயமலையில் ஆலமர நிழலில் அன்று சனகாதியர்க்கு ஞானேபதேசம் செய்ய மோனமுத்திரையுடன் வீற்றிருந்த தக்ஷிணமூர்த்தியாகிய சிவபெருமானின் திருக்கோலமே மனக்கண்ணில் தோன்றியது போலும். தோன்றவே, அங்ஙனமே பாடலாக வந்தது. இந்தக் கட்டத்தில், சிவபிரானைக் குறிப்பிட வேண்டிய அவசியம் ஏதும் கதைப் போக்கில் இருக்கவில்லை. ஆயினும் ரைவதமலை, ஆலமரம், துறவிக் கோலம் இவற்றைக் கண்டவுடன் திருக்கயிலை, அங்குக் கல்லால மரம் அதன் கீழ் தக்ஷிணமூர்த்தி திருக்கோலம் ஆசிரியரது கண் முன் தோன்றி விட்டனவே! எனவே சிவபிரானைப் பாடாதிருக்க அவரால் இயலவில்லை சிவபிரானின் முழுமுதன்மை எந்த அளவுக்கு அவரால் உட்கொள்ளப் பட்டிருந்ததென்பதற்கு இத்தகைய பாடல்களே பெருஞ் சான்ருகும். அப்பாடல் முழுவதையும் படித்து மகிழுங்கள்.

யதியாகி அவணிருந்த தோழன்தன்னை
யதுகுலநா யகன்பரிவோ டிறைஞ்சவன்பால்
அதியான நெடுஞ்சுருதி ஆசிகூறி
ஆகமுறத் தழீஇமகிழ்வுற் ருலநீழல்
மதியார்செஞ் சடைமுடியோன் என்னவைகி
வந்தவாறு உரைப்பநெடு மாலுங்கேட்டு
துதியாடிக் காலையிலே வருதுமென்று
சொற்றிமைப்பின் மீளவும்போய்த் துவரைசேர்ந்தான"

"துறவிக் கோலத்துடன் அங்கு வீற்றிருந்த அருச்சுனனை இடையர் குலத்தலைவனுகிய கண்ணன் அன்புடன் வணங்க,

அன்பால் மேம்பட்ட மறை வழக்கப்படி ஆசிகள் கூறி, மெய் பொருந்தத் தழுவி மகிழ்ந்து, ஆலமரத்தின் நிழலில் நால்வர்க்கு மெய்ப்பொருள் உணர்த்த குருமூர்த்தியாய் வீற்றிருந்த பிறைச்சந்திரனையணிந்த சிவந்த சடையினையுடைய சிவபெருமானைப் போல அருச்சுனன் வீற்றிருந்து, தான் வந்த வரலாற்றைக் கூற அதுகேட்ட கண்ணனும் அவனைத் துதிசெய்து "காலையில் வருகின்றோம்" எனச்சொல்லி மீண்டும் துவாரகை நகரையடைந்தான் என்பது இப்பாடலின் பொருளாகும். இங்கு அருச்சுனனைக் கல்லால் நீழலமர்ந்த தக்ஷிணாமூர்த்தியென உவமித்ததில் மற்றொரு நயமுங்காண்கின்றோம். துறவிக்கோலத்தில் இருந்தமையால் அக்கோலத்துக்குரிய பெருமையை உணர்த்த வேண்டி கண்ணனும் அருச்சுன சந்நியாசியை வணங்கினான் என்று கூற வந்த கவி, கண்ணன் தமது வழிபடு கடவுளாகையால் அவன் தன்னினும் கீழ்ப்பட்டோரை வணங்குதல் தகாது என்ற கருத்தினால் அருச்சுனனை உயர்ந்தோனாகிய சிவபெருமான் போல வீற்றிருந்தான் எனக் கூறியுள்ளார் என்பதே அந்த நயம் என்று கொள்க. இதனால் சிவபெருமான் கண்ணனைவிட உயர்ந்தவர் என்பதும், இப் பாடலில் கண்ணனை நெடுமால் என்று உரைத்தமையால் அக் கண்ணனுக்கு மூலமான மஹாவிஷ்ணுவையும்விட உயர்ந்தவர் என்பதும், வில்லிபுத்தூராரின் கருத்து என்பது தெளிவாகின்றதன்றோ?

அருச்சுனனுக்கும் சுபத்திரைக்கும் கண்ணன் உதவியால் திருமணம் நடைபெற்று, சுபத்திரை தேரோட்ட அருச்சுனன் தீர்த்தயாத்திரை முடிந்து இந்திரப்பிரஸ்தம் திரும்புகின்றான். அபிமன்யு, உபபாண்டவர் உற்பத்தி முதலியவற்றைக் கூறி இச்சருக்கம் முடிகிறது. பாரதக் கதை முழுவதும் தொடர்பாகக் கூறும் கடப்பாடிலேமாதலால் இவற்றை யாம் விரித்தெழுதவில்லை. சருக்க முடிவில் உள்ள பாடல் சிவனாரது நினைவுடன் முடிகிறது. அதனைப் பார்ப்போம்.

உரனு லழகா லுரையான்மற் றுவமை யில்லா
நரநா ரணர்க்கு நலங்கூர்தரு நண்பு போல்வான்
அரனுர் விழியா லழிந்தங்க மநங்க மான
மரனு ருடனண் பிசைந்தன்று வசந்த காலம்.
(அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம், 90-ம் பாடல்)

''வலிமையால், அழகால், சொல்லால், தமக்குத் தாமே யன்றி பிற உவமை சொல்ல முடியாத அருச்சுனனுக்கும் கிருஷ்ணனுக்கும் நன்மை மிக்க நட்புப் போல சிவபிரானது நெற்றிக் கண்ணுல் உடல் வெந்து உடலற்று அருவமான மன்மதனுக்குத் தோழமை பூண்டு வசந்த காலம் வந்தது'' என்பது இப்பாடலால் பெறும் செய்தியாகும். அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கத்தில் சிவபிரான் மஹிமையை வாய் கொள்ளாது பாடிய வில்லிபுத்தூரார் இச்சருக்கத்தை சிவ நினைவுடனேயே முடித்தது கவனித்தற்குரியதாம். தீர்த்த யாத்திரைச் சருக்கம் போலவே சிவபிரானின் முழு முதன்மை விளங்கப் பாடப்பட்டுள்ளது அருச்சுனன் தவநிலைச் சருக்க மாகும். அதனை அடுத்த மலரில் காண்போம்.

இனி, எட்டாவது காண்டவதகனச் சருக்கத்துள் வில்லி யார் சிவபிரானைப் போற்றும் இரண்டு இடங்களைக் குறிப் பிட்டு இக்கட்டுரையை முடிப்போம். சிவபிரானின் முப்புர மெரி செய்த அருஞ்செயலே வில்லிபுத்தூரார் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது என்பதை முன்னரே விளக்கியுள்ளோம். காண்டவவனம் அக்கினிதேவனுக்கு கிருஷ்ணுர்ச்சுனர்களால் உணவாக அளிக்கப்பட்டு அவனுல் எரிக்கப்பட்ட நிகழ்ச்சி யைக் கூறும் இச்சருக்கத்துள்ளும் இரண்டு பாடல்களில் கவி, இறைவனுர் முப்புரமெரி செய்த வீரத்தைப் பாடியுள்ளார்.

காண்டவவனம் எரிந்த பொழுது அங்கு வாழ்ந்த அசுரர் களில் தப்பிப் பிழைத்தவர்கள் யாரும் இல்லை என்று சொல்ல வந்த கவி, இச்சருக்கத்து 43-ம் பாடல் முதலிரண்டு அடி களால் முப்புரங்களை முனிந்த முக்கண்ணனைப் பாடியுள்ளது காண்க.

முப்புரங்களை முக்கணன் முனிந்தநாள்
மூவரம் முழுத் தீயில்
தப்பினர் உளர்காண்டவ அடவிவாழ்
தான வர்யார் உய்ந்தார்.

''முப்புரங்களை முக்கண்ணனாகிய சிவபிரான் கோபித்து எரித்தபோது தப்பினவர் மூவர் உள்ளனர். காண்டவ வனம் எரிந்த போது அதில் வாழ்ந்த அசுரர்களில் தப்பினவர் ஒருவருமிலர்'' என்பது மேலே காட்டிய பாடற் பகுதியின் பொருளாகும்.

அடுத்து, இதே சருக்கத்தில் 47-வது பாடலில் மீண்டும் வில்லிபுத்தூரார் தம்முள்ளத்தைப் பெரிதும் கவர்ந்த திரிபுர ஸம்ஹாரத்தைக் குறிப்பிட்டுச் சிவபிரானைப் போற்றியுள்ளது சிவநேயர்களைப் பெரிதும் களிப்படையச் செய்யும் என்பதில் ஐயமுண்டோ?

தானவர்புரங்கள் நீறெழ முனிந்த
தமனியச் சிலைக்கை வெள்ளூர்தி
ஆனவனமது புரத்தையுஞ் சுடுவான்
அழன்றனன் போலுமென் றஞ்சி
வானவர்நடுங்க வானவர்க் கரசாம்
வலாரியும் மனனுறத் தளர்ந்து
கானவருடனே தக்ககன் என்னும்
கட்செவி கெடுமெனக் கரைந்தான்.

''அசுரர்களின நகரங்கள் மூன்றும் எரிந்து சாம்பராகும் படிக் கோபித்த பொன்மலையாம் மேருவை வில்லாகக் கையிலேந்திய வெள்ளை விடையை வாகனமாகக் கொண்ட சிவபிரான் நமது நகரத்தையும் சுடுமாறு கோபித்துவிட்டனனே என்று பயந்து தேவர்கள் நடுக்கங் கொள்ள, அத்தேவர்க்கு அரசனாகிய இந்திரன், அக்காட்டில் வாழ்பவர்களுடனே தக்ஷகன் என்னும் பாம்பு அழிந்து விடுமே எனப் பெரிதும் கவலையடைந்தான்'' என்பது இப்பாடலின் திரண்ட பொருளாகும். சிவபிரானை எந்த அளவுக்குக் கவியின் உள்ளம்

மதித்துப் போற்றியது என்பது இப்பாடலின் சொற்களால் தெள்ளத் தெளிவாகின்றது. இதற்கு மாருக இற்றைநாள் வைணவர்களில் பெரும்பாலோர் சிவபிரானை நிந்தித்துப் பேசியும் எழுதியும் வருவது காலத்தின் கொடுமை போலும்.

இதுகாறும் நாம் எடுத்துக் காட்டிய ஆதி பருவத்துக் கவிமொழியாக அமைந்த பாடல்கள் சிவபிரானையே வில்லி யார் முழுமுதற்கடவுள் என்று உணர்ந்திருந்தார் என்பதைத் தெளிவாக்குகின்றன. இங்ஙனம் நாம் எழுதுவதால் வில்லி புத்தூரார் திருமாலைக் காவியம் முழுவதிலும் பலவாருகப் பலவிடங்களில் பாடியுள்ளதைப் பார்க்கவில்லையென்ருே, பார்த்தும் மறந்து விட்டோமென்ருே வாசகர்கள் நினைக்கக் கூடாது. மறந்தும் புறந்தொழார் எனப்படும் வைணவ மரபில் வந்தமையாலும், பாரதக் காப்பியநாயகர்க்குக் கண்ணன் உறவும் நட்புமாகிய காரணத்தாலும் திருமாலையும் அத்திரு மாலின் பூரணுவதாரமாக வைணவர் போற்றும் கண்ணனை யும் பாடுங் கடப்பாட்டினராகிய வில்லிபுத்தூரார், சிவபிரானை அத்திருமாலுக்கும் மேலான கடவுள் என்பதை உணர்ந்தது மட்டுமன்றி, சிறிதும் நடுநிலை தவருது, தமது காவியத்தில் சிவபிரானின் முழுமுதன்மை விளங்குமாறு தமது இதய பூர்வ மாகப் பாடிப் போற்றியுள்ளார் என்பதை எடுத்துக் காட்டு வதே இக்கட்டுரையின் நோக்கம். இதில் எவ்வளவு தூரம் நாம் வெற்றியடைந்தோம் என்பதை வாசகர்கள் தீர்ப்புக்கே விடுகின்ருேம்.

ஆதிபருவத்தில், கதாபாத்திரங்கள் வாயிலாகக் கவி, சிவ பிரானின் பெருமையைப் புலப்படுத்தியுள்ள பாடல்களையும், அவற்றைத் தொடர்ந்து அடுத்து உள்ள சில பருவங்களில் உள்ள கவிமொழியாக வமைந்த பாடல்களையும் அடுத்த ஆண்டு மலரில் ஆய்வோம்.

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# சிவாலய தரிசனம்

மஹேந்திரவாடி உமாசங்கரன்

## 1. திருப்பாசூர் உறைகின்ற வாசீச்வரர்

சாம்பல் பூசுவர் தாழ்சடை கட்டுவர்
ஓம்பல் முதுஎருது ஏறும் ஒருவனர்
தேம்பல் வெண்மதி சூடுவர் தீயதோர்
பாம்பும் ஆட்டுவர் பாசூர் அடிகளே.

—அப்பர் சுவாமிகள்

தொண்டை நாட்டின் பாடல் பெற்ற திருத்தலங்கள் முப்பத்திரண்டில் ஒன்ருன இத்திருத்தலம் திருவள்ளூர் என்று சொல்லப்படுகின்ற திருஎவ்வளூருக்கு வடமேற்கே சுமார் 4½ கல் தொலேவில் உள்ளது. ஈசன் இடதுகால் தூக்கி ஆடிய திருவாலங்காடும், கண் பார்வை இழந்த சுந்தரமூர்த்தி நாயனர் ஊன்றுகோல் ஈசனிடமிருந்து பெற்ற திருவுளம்பூதூர் என்னும் திருவெண்பாக்கமும், ஈசன் மணம் புரிந்து கொண்ட மணவூரும் அருகிலுள்ள அரிய தலங்கள். சென்னேயிலிருந்து பூந்தமல்லி வழியாகச் செல்லும் திருத்தணி பஸ்களேப் பிடித்தால் கோயில் வாயிலிலேயே இறங்கி இறைவனே எளிதாகத் தரிசிக்கலாம். இவ்வளவு சௌகரியம் இருக்கும்பொழுது அந்தக் கோயிலுக்கு ஏன் போகாமல் இருக்க வேண்டும்?

சிந்தை யிடையார் தலையின் மிசையார் செஞ்சொல்லார்
வந்து மாலை வைகும் போழ்தென் மனத்துள்ளார்
மைந்தா மணாள ரென்ன மகிழ்வா ரூர்போலும்
பைந்தண் மாதவி சோலை சூழ்ந்த பாசூரே.

என்று ஞானசம்பந்தப்பெருமான் பாடிய திருப்பாசூர் திருத் தலம் நம்முடைய வினைகளையெல்லாம் தீர்த்து வைத்து மங்களங்களைத் தரவல்லது. இத்தலத்தின் மீது ஞானசம்பந்தப் பெருமான் 1 பதிகமும், நாவுக்கரசர் 2 பதிகங்களும் (1 குறுந் தொகை, 1 திருத்தாண்டகம்) பாடியுள்ளார்கள்.

இத்தலத்தை உச்சிக்காலத்தில் தரிசித்தால் விசேஷம் என்று தலபுராணம் கூறுகிறது. ஏனைய தலங்களின் கலைகள் அங்கு வந்து அச்சமயத்தில் கூடுவதால் உச்சிக்கால தரிசனம் சிறப்பாகக் கருதப்படுகிறது. 'பாகப் பொழுதெல்லாம் பாசூர் தங்கி' என்ற வரி மூலம் இது கருதப்படுகிறது. பாசு என்றால் மூங்கில். ஒரு காலத்தில் இத்தலம் மூங்கில் காடாக இருந் திருக்கிறது. மூங்கில் இக்கோயிலின் தலமரம். சோழ அரசன் காட்டை அழித்து, நாடாக்கிய போது, வாசு என்னும் மரம் வெட்டும் கருவி கொண்டு மூங்கிலை வெட்டியபோது, ஒரு புதரிலிருந்து செங்குருதி வெளிப்பட்டது, அரசன் வெட்டு வதை நிறுத்தி விட்டு, சோதித்துப் பார்த்த பொழுது சிவலிங்கம் இருக்கக் கண்டான். தன்னுடைய தவறுக்கு வருந்தி ஒரு பெரிய கோயிலை எழுப்பினான். சிவலிங்கத்தின் மீது இன்றும் மரம் வெட்டும் போது ஏற்பட்ட தழும்புகள் அடையாளமாகத் திகழ்கின்றன. நீர் வளம், நிலவளம் காரணமாக இத்தலம் என்றும் பசுமையாக இருப்பதால் பாசூர் என்ற பெயர் பெற்றது என்றும் கூறப்படுகிறது. இறைவனுடைய திரு நாமங்கள்: பாசூர்நாதேச்வரர், பாசுபதேச்வரர் வாசீச்வரர். இறைவியின் திருநாமங்கள்: பசுபதிநாயகி, ஸ்வயம்புவல்லி, ஸ்வயம்மோகனாம்பாள், தன்காதலீச்வரி.

சந்திரன் இத்தலத்தில் இறைவனைப் பூஜித்துப் பேறுகள் பெற்றதாக புராணம் புகழ்கிறது. இதனை அப்பர் பெருமான்,

இத்தலத்து திருக்குறுந்தொகை முதற்பாடலில் கீழ்க்கண்ட வாறு குறிப்பிடுகிறார்.

முந்தி மூஎயில் எய்த முதல்வனார்
சிந்திப் பார்வினை தீர்த்திடும் செல்வனார்
அந்திக் கோன்தனக் கேஅருள் செய்தவர்
பந்திச் செஞ்சடைப் பாசூர் அடிகளே

மேலும் அப்பர் பெருமான் தான் அருளிச்செய்த திருத் தாண்டகத்தில், நாலாவது பாடலில் 'பட அரவு அது ஒன்று ஆட்டிப் பாசூர் மேய பரஞ்சுடர்' என்று பாடுகிறார். இது பற்றி இத்தலத்துப் புராணம் விவரமாகச் சொல்லுகிறது. குறும்பர் அரசன் ஒருவனுக்கும், கரிகாற்சோழனுக்கும் ஒரு முறை பெரும் போர் மூண்டது. கரிகாற்சோழன் தீவிர சிவபக்தன், குறும்பர்களுக்கு சமணர்கள் துணை நின்றனர். அவர்கள் ஆபிசார ஹோமம் வளர்த்து, தங்களுடைய மந்திர சக்தியால் சீறும் நாகம் ஒன்றைச் சிருஷ்டி செய்து, சோழராஜன் மீது ஏவினர். இது கண்ட சோழ அரசன் ஈசனைத் துதித்து உள்ள முருகி வேண்டினான். இறைவன் பாம்பாட்டியாக வந்து கொடிய நஞ்சுள்ள பாம்பை, அரசன் பொருட்டு அடக்கி பக்தனைக் காத்தருளினார் என்பது வரலாறு. சந்திரன் தவிர வியாச மஹரிஷியும் ஈசனை இங்கே பூஜித்திருக்கிறார்.

ஊருக்கு வடக்கே கோயில் இருக்கிறது. கோயிலுக்கு முன்பாக கோட்டை போன்ற அமைப்புடன் அழகான ஒரு சுற்றுலா மாளிகை. இக்கோயில் வெங்கடகிரி மஹாராஜா பொறுப்பில் இருந்ததாகவும், மன்னரின் குடும்பத்தினர் வந் தால் அங்கு தங்குவது வழக்கம் என்றும் கூறப்படுகிறது. மஹாராஜாவிற்கு அர்ச்சகர் தரிசனம் செய்து வைத்தாலும், மஹாராணி கோயிலுக்கு வரும் பொழுது அர்ச்சகரின் மனைவி தரிசனம் செய்து வைப்பது இங்கு கடைப்பிடித்து வந்த பழக்க மாம். சுற்றுலா மாளிகையைக் கடந்ததும் தென்புறம் நோக்கி நீண்ட மதில்களுடன், நடு நாயகமாக மூன்று நிலைகளுடன்,

கூடிய ராஜகோபுரத்துடன், கோயில் காலவெள்ளத்தைக் கடந்து கம்பீரமாக நிற்கிறது.

ராஜகோபுரத்துடன் போட்டி போட்டுக்கொண்டு கரு வறையின் விமானங்கள் அழகுடன் மிளிர்கின்றன. ஈசன் குடிகொண்ட கருவறையின் விமானம் கஜப்ருஷ்ட்ட அமைப்பைப் பறைசாற்றி சோழர் கலைத்திறனுக்கு எழிலூட்டு கின்றன. கோயில் பழமையாய் இருப்பதில் வியப்பொன்று மில்லை. ஆனல் நீண்டகாலமாக பாலாலயத்தில் இருக்கக் காரணம் என்ன என்று தெரியவில்லை. கோயில் வழிபாடுகள் சிவாகம நெறிப்படி நடத்தப்படுகின்றன. பாலாலயத்தில் மூர்த்திகளை நீண்டநாட்கள் வைத்திருக்க ஆகமம் இடம் தரவில்லை. திருத்தணி கோயிலின் ஆளுகைக்கு உட்பட்ட இக்கோயிலுக்கு விரைவில் குடமுழுக்கு நடைபெற்றல் சிவ நேசச் செல்வர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும்.

இக்கோயிலில் ஈசன், அம்பாள் சந்நிதிகள் கிழக்கு நோக்கி யிருப்பது தனிச்சிறப்பு. அம்பிகை நான்கு திருக்கரங்களுடன் பாசாங்குசம் ஏந்தி, அபய வரத முத்திரை காட்டி தரிசனம் தருகிருள். ஈசன் கோயில் கோஷ்ட மூர்த்திகளாக விநாயகப் பெருமான், தக்ஷிணுமூர்த்தி, பிரம்மா, ஆகியோரோடு துர்க்கை பிரயோக சக்கரத்துடன் கொலுவேற்று பரவசப் படுத்துகிருள். வீரபத்திரர், பைரவர் ஆகிய திருவுருவங்கள் அழகும், பக்திப் பெருக்கும் நிறைந்த சிலா் வடிவங்கள். இக்கோயில் சப்த மாதாக்களையும், நால்வரையும் தரிசிக்கலாம்.

ஈசனையும் அம்பிகையையும் தரிசித்துக் கொண்டு நடராஜர் சந்நிதிக்குப் போகும் வழியில் 'ஏகாதச' கணபதி யைத் தரிசிக்கலாம். இப்படி கணபதி சபை என்னும் வகையில் 11 கணபதிகளை ஒன்று சேர தரிசிக்கும் வாய்ப்பு நிச்சயமாக வேறு எந்த கோயிலிலும் கிட்டாது. இந்த விநாயகர் திருக் கூட்டத்தில் ஒரு பெரிய விநாயகர் இருக்கிருர். அவருக்குக் கீழே மூன்று சிறிய விநாயகர் வடிவங்கள். அந்த மூன்று

விநாயகரில் நடுவில் வீற்றிருப்பவர் வலம்புரி விநாயகர். விநாயகர் மண்டபத்தில் திருமால் வினைதீர்த்த ஈச்வரர் என்ற பெயரில் சிவலிங்கத் திருவுருவில் ஈசன் எழுந்தருளியிருக்கிறார். பெருமாள் சக்கராயுதத்தைத் தொலைத்துவிட்ட நேரத்தில், அவருக்கு சக்கராயுதம் கொடுத்துதவியவர் இந்த ஈசனே என்று சொல்லுகிறார்கள்.

கணபதி சபையைத் தரிசித்துக் கொண்டு, நடராஜர் சபைக்குள் நுழைந்தால் பாலாலய மூர்த்திகளைச் சித்திரவடிவில் தரிசிக்கலாம். ஆடும் கூத்தனின் அழகில் மனதைப் பறி கொடுத்து இவ்வுலகையே மறந்து இன்புறலாம். பக்கத்தில் வரிசையாகப் பல உற்சவ மூர்த்திகள். எல்லாம் நம்மை தெய்வலோகத்திற்கே அழைத்துச் செல்லும் அரிய படைப்பு கள். இக்கோயிலில் சுரங்கப்பாதை ஒன்று இருக்கிறது. அச்சுரங்கம் திருவாலங்காடு கோயில் வரை செல்லுவதாகச் சொல்லுகிறார்கள்.

இக்கோயிலிலுள்ள கல்வெட்டுகள் மூலம் அரசர்கள் இக் கோயிலுக்குச் செய்த தான தருமங்கள் தெரிய வருகின்றன. ராஜராஜன் பூஜைக்காக 47 பொன்காசுகள், விளக்கிற்காக 32 பசுவும், முரச வாத்தியத்திற்காக 1 எருதும் அளித்தான் என்றும் குலோத்துங்கன் காலத்தில் ஒரு மாது திரு ஆபரணத் திற்காக 30 பொன்காசும், நாள் ஒன்றுக்கு 2 படி அரிசியும் கொடுத்ததாகத் தெரியவருகிறது.

பட்டு மென்மையானது. அதைத் தன் பெயராகக் கொண்ட சிவத்திரு பட்டுசுவாமி குருக்கள் குழந்தை உள்ளம் படைத்தவர். கணீரென்ற தன் குரலில், ஈசனை 108 நாமாக்களைச் சொல்லி அவர் அர்ச்சித்துச் செய்த பூஜை இன்றும் என் மனக்கண் முன்னே நிற்கிறது. இவர் போன்ற சிவாச்சாரியார்களின் வாழ்க்கைத்தரம் உயரவேண்டும். இது போன்ற கோயில்களுக்கு அடிக்கடி செல்லுமாறு சிவபக்தர் களை வேண்டுகிறேன்.



''கோபுர தரிசனம் கோடி புண்யம்''
பஞ்சேஷ்டி அகத்தீச்வரர் ஆலய ராஜகோபுரம்

## 2. பாவங்கள் தீர்க்கும் பஞ்சேஷ்டி

ஒருவனுடைய தாகத்தைத் தீர்த்து வைத்தாலே பெரும் புண்ணியம். கோடிக்கணக்கான மக்களுடைய தாகத்தை ஒரு சிறு கிராமம் தீர்த்து வைக்கிறது. அது சாதாரண கிராமம் அல்ல. அகத்தியர் யாகத்தால் அருள் சுரக்கும் அற்புத பூமி. அகத்தியர் அங்கு ஒரு யாகம் செய்யவில்லை. ஐந்து யாகம் செய்தார். இஷ்டி என்ருல் யாகம், 'பஞ்சேஷ்டி' என்ருல் ஐந்து யாகம் என்று பொருள். அகத்தியர் யாகத்தால் பெருமை பெற்ற அந்த தலம் 'பஞ்சேஷ்டி' என்றழைக்கப்பட்டு தற்பொழுது 'பஞ்செட்டி' என்று வழங்குகிறது. அங்குள்ள நிலத்தடி நீரைக் கொண்டு சென்னை நகரின் தண்ணீர் பஞ்சம் தீர்க்கப்படுகிறது.

அந்தத் தலத்திற்குச் செல்ல அதிகக் கஷ்டப்பட வேண்டாம். சென்னை பேஸின் பிரிட்ஜ் பஸ் நிலையத்திலிருந்து புறப்படும் 112, 131, 132, 133, 58C, 90 முதலிய பஸ்களில் ஏதாவது ஒன்றைப் பிடித்தால் போதும். நேராக பஞ்சேஷ்டியை அடையலாம்.

காவிரி ஆறு பிறந்ததற்கும், அகத்திய முனிவருக்கும் தொடர்பு இருப்பது போல், இத்தலத்திற்கும் கங்கைக்கும் தொடர்பு உண்டு. அத்தொடர்பு அகத்தியரால் ஏற்பட்டது. இத்தலத்தில் அகத்தியர் வேண்டுகோளுக்கிணங்க, சர்வ பாபங்களையும் போக்கவல்ல கங்கை மிகுந்த வேகத்துடன் பூமியிலிறங்கி, முனிவருக்கு முன்பிருந்த ஒரு குசை (தர்பை புல்) யின் நுனியிலுதித்து ஆருகப் பெருகி வளம் சேர்க்கிருள். அன்று முதல் இத்தலத்திற்கருகே ஓடும் ஆறு 'குசஸ்தலையாறு' என்று வடமொழியிலும் 'குடத்தலையாறு' என்று அழகு தமிழிலும் அழைக்கப் பெறுகிறது.

பஞ்சேஷ்டி நீர்வளம், நிலவளம் மிக்க எழில் குலுங்கும் அமைதியான தலம். ஈசன் கோயிலுக்குப் போவதற்கு முன்பே நம்மை வழிமறிக்கும் ஆலயம் பஞ்சேஷ்டி அம்மன் கோயில்,

கொடுக்காததால், எரியும் தீச்சுவாலைக்குள் இறங்கினான். பிரம்மா காட்சி கொடுத்து அவன் கேட்டபடி யாராலும் பிளக்க முடியாத ஒரு கவசமும், கதையும் வில்லும் அம்பும் கொடுத்தார். இந்த வரங்களைப் பெற்றுக் கொண்ட சுகேது ஸர்வலோகங்களையும் ஆட்டிப்படைத்தான். கைலாயம் சென்று ஈசனைப் பரிகசித்தான். இதன் விளைவால் குமரப் பெருமானால் சபிக்கப்பட்டு அரக்கனானான். மாண்டுகி என்ற பெயருடன் இந்துவரனுக்கு மகளாகப் பிறந்து வளர்ந்து வந்த தன்னுடைய மனைவியோடு சேர்ந்து மூன்று பிள்ளைகளைப் பெற்றான். நாளுக்கு நாள் அவர்களுடைய கொடுமைகள் அதிகம் ஆயிற்று.

இதற்கு ஒரு முடிவு கட்ட எல்லாம் வல்ல பராசக்தியிடம் தேவர்களும், முனிவர்களும் முறையிட்டனர். அகத்தியர் மூலமாக இதற்குப் பரிகாரம் ஏற்படும் என்று தேவி அருள் மழை பொழிந்தாள். இதற்கிடையில் சுகேது கடலுக்குள் புகுந்து மறைந்தான். அவனைத் தேடும்பொருட்டு அவனின் மனைவியும் மூன்று குமாரர்களும் கடலைக்கலக்கினர். இதனால் கடல்நீர் பிரவாகித்து உயிர்களுக்குத் துன்பம் ஏற்பட்டது. அப்பொழுது கடல்நீர் முழுவதையும் அகத்தியர் குடித்தார். நீரோடு சேர்ந்து சுகேது முதலான ஐவரும் முனிவரின் வயிற்றில் போய்விட்டனர். கடல்நீர் வரண்டதால் வருணன் கவலையுற்று குபேரனுடன் சேர்ந்து முனிவரைப் பிரார்த்தித்தான். முனிவரும் நீரைக் கடலில் சேர்த்தார். அரக்கர்களும் சுயரூபம் பெற்று கடல் நீரோடு முனிவரின் வயிற்றிலிருந்து வெளி வந்தனர். அகத்தியரின் வேண்டுகோளுக்கிணங்க சமுத்திர ராஜன் கோயிலுக்குப் பக்கத்திலேயே 'அகஸ்திய தீர்த்தம்' என்ற பெயரில் ஒரு தடாகமாக விளங்கி வருகிறான். இராவண சம்ஹாரத்திற்காக இலங்கை செல்லும் வழியில் இராமனும், இலக்குவனும் இத்தலத்திற்கு வந்து அகத்திய முனிவரை தரிசித்து, ஈசன் அம்பிகை அருள் பெற்றுச் சென்றதாகப் புராணம் கூறுகிறது.

தற்பொழுது கோயில் முழுவதும் திருப்பணி செய்ய வேண்டிய நிலையிலுளள்து. இக்கோயிலைப் பழுதுபார்த்து திருப்பணி செய்பவர்களும், அருகிலுள்ள குசஸ்தலை ஆற்றில் நீராடி, அங்கிருந்து நீர் கொண்டு வந்து அகத்தீசனுக்கும் ஆனந்தவல்லிக்கும், அபிஷேகம் செய்விப்பவரும் நைவேத் தியம் சமர்ப்பிப்பவரும் எந்நாளும் கயிலைநாதன் வீற்றிருக்கும் கைலாய மலையில் ஈசனுடைய பாதகமலங்களில் வாழும் பேறு பெறுவார்கள் என்று தலபுராணம் புகழ் பேசுகிறது.

பஞ்சேஷ்டிக்கருகில் எருமைவெட்டிப்பாளையம் என்னும் துர்கைத் தலமும், ஞாயிறு, திருக்கள்ளில் போன்ற சிவத் தலங்களும், பெரியபாளையம் என்னும் பவானியம்மன் தலமும் உள்ளன. அங்கெல்லாம் சென்று இறைவனைத் துதித்துப் பலன் பெறுக.

## 3. மணவூர் திருநந்நீசுவரர்

தொண்டைநாட்டின் கோட்டங்கள் இருபத்திநான்கில் ஒன்ருன மணவூர் கோட்டம் பண்டைய நாட்களில் பெரும் புக ழோடு விளங்கி வந்த ஒரு பகுதியாகும். ஆதியில் குறும்பர் கள் தொண்டைநாட்டை ஆண்டு வந்தனர். சோழர்கள், பல்லவர்கள் ஆட்சியிலும், பிறகு வந்த விஜயநகர ராயர்கள் காலத்திலும் தொண்டைநாடு சிறப்புற்று இருந்தது. மணவூர் கோட்டத்திற்குத் தலைநகராக சிறப்புற்று இருந்தது மணவூர். சென்னையிலிருந்து அரக்கோணம் செல்லும் புகை வண்டித் தடத்தில் மணவூர் இன்று ஒரு சிற்றூராகக் காட்சியளிக் கிறது. மணவூர் ரயில் நிலையத்திற்குப் பக்கத்திலேயே ஊர் அமைந்திருக்கிறது. மணவூருக்கு அருகாமையில் உள்ள திருத்தலங்கள் திருவூறல், திருப்பாசூர், திருவாலங்காடு, திரு வுளம்பூதூர் என்ற பாடல் பெற்ற தலங்களாகும்.

திருவாலங்காடு பஞ்ச சபைகளில் ஒன்ருன ரத்னசபை. காளியின் கர்வத்தை இறைவன் அடக்கி, இடதுகால் தூக்கி

ஊர்த்துவ தாண்டவம் ஆடி அருளிய பதி திருவாலங்காடு. ஆடியது ஆலங்காட்டில், அமர்ந்தது திருவூறலில், மணந்தது மணவூரில் என்று ஒரு பழமொழி உண்டு. ஈசன் மணம் புரிந்து கொண்ட தலமாதலால் மணவூர் என்று இத்திருத் தலம் வழங்கலாயிற்று.

ஒரு சமயம் ஈசனுடைய கோபத்துக்கு நந்திபகவான் ஆளாக நேர்ந்தது. பூலோகத்தில் பல தலங்களில் ஈசனைக் குறித்துத் தவம் செய்து சாபம் நீங்கப்பெற்ருர். அவற்றுள், கர்நாடகா மாநிலத்தில் உள்ள நந்திமலை, ஆந்திர மாநிலத் திலுள்ள நந்தியால், வடஆற்காடு மாவட்டத்திலுள்ள நந்தி யாலம், செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள நந்திவரம் ஆகி யவை புகழ்பெற்ற தலங்களாகும். மணவூரிலும் நந்திபக வான் ஈசனைக்குறித்து தவம் செய்து லிங்கத்தை நிறுவி வழி பட்டார். நந்திபகவான் வழிபட்டதால் திருநந்தீசுவரர் என்ற பெயரில் ஈசன் வழங்கப்படுகிருர். அம்பிகையின் திருநாமம் ஆனந்தவல்லி. சோழர்கள் கலைச்சிறப்போடு கூடிய ஒரு உயர்ந்த விமானம் கோயிலை அலங்கரிக்கிறது. கோயிலின் பெரும் பகுதி பாழடைந்து காணப்படுகிறது. ஆனுல் இன்றும் பூஜைகள் தவருமல் நடந்து வருவது மகிழ்ச்சிக்குரிய விஷய மாகும்.

உற்சவ மூர்த்திகளில் வில்லேந்திய கண்ணப்ப நாயனுர் உருவமும் கண்டு களிக்கத்தக்கது. கண்ணப்ப நாயனுரின் உருவம் இங்கு இருப்பதால் அவருக்கும் இக்கோயிலுக்கும் உள்ள தொடர்பை ஊகிக்க முடிகிறது. முறையான தல புராணம் இக்கோயிலுக்கு இல்லாததால் அரிய பல செய்தி கள் கிடைக்க வழி இல்லாமல் போய்விட்டது.

ஊருக்கு ஈசான்ய பாகத்தில் மற்ருெரு சிவாலயம் பாழ டைந்த நிலையில் இருக்கிறது. அங்கு வீற்றிருக்கும் ஈசனை நண்டு பூசித்ததால் கற்கடகேசுவரர் என்று அழைக்கப்படு கிருர். அம்பிகையின் திருநாமம் வடிவாம்பிகை, காமாட்சி யம்மன். கோயிலுக்கு வெளியே உள்ள திருக்குளத்திற்கும்

கடக தீர்த்தம் என்ற பெயரே வழங்குகிறது. ஊருக்குத் தெற்கே ஒரு மடு பத்மசரோருஹம், சரவணப்பொய்கை என்ற பெயரில் வழங்குகிறது.

நந்தீசுவரர் கோயிலுக்கருகே முருகனுக்கு ஒரு தனிக் கோயில் உள்ளது. இக்கோயில் கந்தகோட்டம் என்று வழங்கப்பெறுகிறது. காஞ்சியிலே குமரகோட்டம், இங்கே கந்த கோட்டம். பிரணவத்திற்குப் பொருள் தெரியாத பிரம்மனை சிறையிலடைத்துவிட்டு கமண்டலமும், அக்ஷ மாலையும் தாங்கி முருகன் அளித்த கோலமே பிரம்ம சாஸ்தா என்னும் கோலமாகும். இவருக்கு நான்கு திருக்கரங்கள், இரு கரங்களில் அக்ஷ மாலையும், கமண்டலமும் தாங்கி, ஒரு கரத்தை அபயமாக வைத்துக் கொண்டு, இடது திருக்கரத்தினில் ஒன்றை இடுப்பிலே வைத்துக்கொண்டு திருமுருகன் காட்சி தருகிறார்.

கச்சியம்பதியிலே இருந்த சிற்பி ஒருவர் இதையும் இதே போன்று இன்னும் இரு உருவங்கள் செய்தாராம். மணவூருக்கு அருகாமையில் உள்ள பாகசாலையில் ஒரு உருவமும், விடையூர் நத்தத்தில் ஒரு உருவமும் பிரதிஷ்டை செய்யப்பட்டதாம். பாகசாலை முருகனை அருணகிரியார் திருப்புகழில் பாடியுள்ளார். மணவூரில் கொலுவிருக்கும் முருகன் மிகவும் உக்கிரமூர்த்தியாக இருந்தாராம். வள்ளி, தெய்வயானை யின்றி நின்ற கோலத்தில் கிழக்கு நோக்கியுள்ளார். சந்நிதி சைவவேளாளர் வீதியை நோக்கியுள்ளது.

அவ்வீதியில் எந்த சுபநிகழ்ச்சிகள் நடந்தாலும் அந் நிகழ்ச்சி தொடர்புடையதாக, முருகனுக்கு ஏதாவது சமர்ப்பிக்காமல் நடந்தால் அந்நிகழ்ச்சியே வெற்றியாக நடைபெறுதாம். குழந்தை பிறந்தால் முருகனுக்கு தொட்டில் கட்டுவதும், பெயர் சூட்டினால் பதுமை செய்து சமர்ப்பிப்பதும், குழந்தைக்கு அரைஞாண் கட்டினால், வெள்ளியிலே முருகனுக்கு அரைஞாண் கட்டுவதும், வயலில் விதை விதைத்தால், நெல்விதை முருகனுக்குக் கொடுப்பதும், மாடு கன்று போட்டால் ஒரு வேளை பால் அபிஷேகத்திற்குக் கொடுப்பதும்,

அறுவடை செய்தால், அறுவடை செய்ததில் ஒரு மூட்டை கோயிலுக்குத் தருவதும் அங்கே வழக்கமாம். ஒரு முறை காஞ்சி பெரியவர்கள் இவ்வூருக்கு விஜயம் செய்தபொழுது ஊர் மக்கள் முருகனின் உக்கிரத்தன்மையை சமனப்படுத்த வழி கேட்டபோது அவர் அம்மூர்த்திக்கு முன்பு சிறிய அளவில் அதேபோன்று பிரதிஷ்டை செய்யச் சொன்னாராம். அதேபோன்று செய்த பிறகு முருகன் காருண்யமூர்த்தியாக தற்பொழுது விளங்கி வருவதாகச் சொன்னார்கள்.

காஞ்சி பெரியவர், பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் பொன்விழா ஆண்டை ஒட்டி பல கோயில்களில் திருப்பணிகள் அவர் ஆதரவோடு நடைபெற்று வருகின்றன, அவற்றுள் இக்கோயிலும் ஒன்று. விரைவில் குடமுழுக்கு நடைபெற இருக்கின்றது. ஊர் மக்களின் ஒத்துழைப்பைக் கண்டு பெருமையும் மகிழ்ச்சியும் கொள்ளும் அதே நேரத்தில், பழுதுபட்ட இரண்டு புகழ்மிக்க சிவாலயங்களையும் புதுப்பிக்கவில்லையே என்ற ஏக்கமும் இருக்கத்தான் செய்கின்றது. இறைவன் திருவருளால் நம் எண்ணம் ஈடேற பிரார்த்திப்போம்.

மணவூருக்கு அருகாமையில் களியனூர் என்று ஒரு சிற்றூர் உள்ளது. சுமார் 2 கல் தொலைவு. அங்கே கடும்பாடி அம்மன் என்ற பெயரில் கிராம தேவதை எழுந்தருளியுள்ளாள். சின்னம்மன் என்ற பெயரில் கிராம மக்கள் வழங்குகிறார்கள். மிகவும் வரப்பிரஸாதி அவள். கண்டு தொழுது வரங்கள் பல வாங்கி வாருங்கள்.

பதிப்பாசிரியர் குறிப்பு : நேயர்கள் தங்கள் ஊர் சிவாலயம் பற்றிய குறிப்புகளும், தலபுராணமிருப்பின் அதன் சுருக்கமும், கோயில் புகைப்படத்துடன் அனுப்பினால் நமது அடுத்த ஆண்டு மலரில் பிரசுரிக்கப்படும்.

ஆங்கீரஸ சர்மா

சிவம்.

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருஞானசம்பந்தர்

கே. ஸரஸ்வதி, திருநெல்வேலி - 7

எல்லாம் வல்ல எம்பிரான், உமையொருபாகனான அர்த்த நாரீச்வரர். தன்னை வணங்குபவர்களுக்கு சகல வல்லமைகளையும் அளிக்க வல்லவன். இவ்வாறு அவனைப் பணிந்து அருள் பெற்ற அருளாளர்கள், அவ்வல்லமையை எம்பெருமானின் கருணையே என நினைக்கும் அளவில் அத்திறன் பெருகும். அஃதன்றி இது தன் ஒரே முயற்சியினால் கிடைத்த பேறு என்று இறுமாந்து போகும் அளவில் அடுத்த நொடியிலேயே அவ்வல்லமையெல்லாம் மறையும் அளவிற்கு சூழ் நிலையினை ஏற்படுத்தி, தன் நிலைத்ததன்மையினையும், உலகின் நிலையாத் தன்மையினையும், உணர வைத்துவிடும் காரண கர்த்தாவாகி விடுகிறான்.

பக்த பிரஹ்லாதனால் நாராயணா! நாராயணா! என்று அவரது நாமத்தை பூவுலகில் நிலைநாட்டச் செய்த காலம் ஒன்று. ஆனால் அந்நாராயண நாமத்திற்கு அதிபதியை பின்னொரு நாள் சம்ஹரித்து அவர் தோலைச் சட்டையாகத் தரித்து 'சட்டைநாதராக' சிவபிரான் சீர்காழியில் காட்சி அளிக்கும் காலமும் ஒன்று. காரணம் ஏன்? எல்லாச் சக்திக்கும் காரணமான சிவபெருமானை-எல்லாம் வல்லவனை நாராயணர் தற்பெருமையால் மறந்ததே. ஆயினும் படைத்த எம்பிரான் தன் குழந்தைகளுக்கு அறிவைக் கொடுத்துத் தன் நிலைத்த

தன்மையை உணர்த்தி அருள் புரிபவனுகிருன். அவ்வறிவினே — ஞானத்தைப் பெறும் வரை — அந்தச் சரணுகதி எனும் நிலேயை — தன் குழந்தைகள் உணரும் வரை அவர்கட்கு பெருமையுடன் சிறுமைகளேயும் வழங்கிக் கொண்டேதான் இருப்பான். இங்கு பெருமை சிறுமை என்று கூறியது இன்பங்களுக்கும், துன்பங்களுக்கும் காரணமானவை.

பக்த பிரஹ்லாதனின் தந்தையான இரணியன் ஆண்டாண்டு காலமாகத் தவமியற்றினுன். இறைவன் அவன் தவத்திற்கிரங்கி முன் தோன்றி, வேண்டும் வரம் யாது? என வினவினுர். தனக்கு 'இறவா வரம் வேண்டும்' எனும் நோக்கத்துடன், தனது முடிவு மனிதனுலோ, தேவராலோ, மிருகத்தாலோ சம்பவிக்கக் கூடாததாகவும், இல்லினுள்ளோ, வெளியிலோ, இல்லாததாகவும், இரவிலோ பகலிலோ நிகழாததாகவும், நீரிலோ நிலத்திலோ இல்லாததாகவும் எந்த ஆயுதத்தினுலும் சம்ஹரிக்க இயலாததாகவும், இருக்க வேண்டும் என்று வரம் கோருகிருன். எம்பெருமானும் அருள் பாலிக்கிருர். பக்தர்களுக்கு அருளுவது அவரது கருணே. ஆனுல் அக்கருணேயாளனின் கருணேயை மனதில் நிறுத்தி எக்காரியத்தையும் செய்யின் சிறப்புற்று விளங்கும். அஃதன்றி இரணியன் தான் பெற்ற வரத்தினுல் அடைந்த பயன் யாது? அக்கருணேயாளனின் வெறுப்பிற்கே ஆளாகும் வண்ணம் தன் சிந்தனேயைச் செலுத்தி விட்டான். இறவா வரம் பெற்று விட்டோம் என்று எண்ணி, அவ்வரத்தைப் பெற்ற காரணத்தினுல் 'தானே நிலே' என்ற எண்ணம் ஏற்பட்டு தன்னே வணங்கும்படி மக்களே துன்புறுத்துபவனுகி, அவ்வரம் தந்த ஈசனேயே மறந்தவனுனன்.

மக்கள் துன்பத்தினே துடைக்கும்படி இறைவனே வேண்ட, சிவனின் சக்தியான நாராயணர் அவனே சம்ஹரிக்கும் நேரம் வருகிறது. ஆயினும் கொடுத்த வரத்தினின்றும் மீறுவது நியதியன்று. ஆகையால், அவன் கேட்ட வரத்தின்படியே மனிதனுகவோ, மிருகமாகவோ அல்லாத ஓர் அவதாரமான

'நரசிம்மனுகத்' தோன்றி, இல்லிலும் வெளியிலும் இல்லாத இடைப்பட்ட 'நிலை'யில் பகலும் இரவும் இல்லாத 'சந்தியா' வேளையில் எவ்வித ஆயுதமுமின்றி தன் விரல் நகங்களை ஆயுத மாகக் கொண்டு நீரிலும் நிலத்திலுமன்றி தன் மடியில் கிடத்தி அவனது உடலை கிழித்து குடலை மாலையாக அணிகிருர். மனித சக்தியினுல், புத்தியினுல் நினைக்க இயலாத ஒரு அவதாரம். அந்நாராயணரையே — காத்தல் தெய்வமான திருமாலையே சம்ஹரித்துத் தோலைச் சட்டையாகத் தரித்து 'சட்டைநாதராக' சீர்காழியில் சிவபெருமான் காட்சியளிக்கிருர் என்ருல் 'எல்லாம் வல்லவன் சிவனே' என்பதற்கு வேறு சான்றும் தேவையோ?

இது போன்ற நிகழ்ச்சிகளைக் காட்டி மனிதனை அதில் லயிக்க வைத்து, பக்குவமடையச் செய்து நிலையான சிவத்தின் மேல் மனதை நிலைநிறுத்தி அவன் நாமமே சிந்தை செய்ய வைப்பதே உலகப்படைப்பின் சாராம்சம் ஆகும். உலகில் மக்கள் எனும் மாணுக்கர்களுக்கு ஆண்டவனின் வல்லமையை உணர்த்தும் உபாத்தியாயர்களாக விளங்குபவர்கள் திருமுறை களை அருளிச் செய்த ஆசிரியர்களாவார்கள். இவ்வாசிரியர் களின் பட்டியலில் முதலிடம் வகிப்பவர் ஞானசம்பந்தப் பெருமாணுவார். இவரது புராணத்தைத் தெய்வச் சேக்கிழார் பெருமான் பின்வரும் பாடலால் தொடங்குகிருர்.

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்

இவரின் தந்தையார் சிவபாதஹிருதயர். பெயருக்கு ஏற்ப சிவனது பாதக்கமலங்களையே தனது நெஞ்சில் நிறுத்தி வைத்தவர். சைவம் நலிந்து மற்றைய மதம் தலைதூக்க இருந்த நேரம், எம்பெருமானை வேண்டி, சைவம் தழைக்கப் பிரார்த்திக்க, உண்மை பக்தர்களுக்கு இரங்கும் குணளனுகிய ஈசன் சிவபாதஹிருதயருக்கும் பகவதி அம்மையாருக்கும்

ஞானசம்பந்தரைப் புதல்வராகச் சித்திரை மாதத்து திரு வாதிரை நன்னாளில் அவதரிக்கச் செய்கிறார். அவர் அவதரித்த தலமான சீர்காழிப்பதியில் அம்மை அப்பர் சந்நிதிகளுக்கு இடையில் ஞானசம்பந்தர் சந்நிதி அமைக்கப்பட்டுள்ளது சோமாஸ்கந்த ரூபத்தைக் குறிப்பதாகும். ஞானசம்பந்தரை சுப்ரமண்யர் அம்சமாகவும் வழிபடுவது ஐதிகமானது இங்கு குறிப்பிடத்தக்கது. திருஞானசம்பந்தரது திருவவதாரத்தைக் கூறும் பெரிய புராணப்பாடல் இதோ காண்மின்.

அவம்பெருக்கும் புல்லறிவின் அமண்முதலாம் பரசமயப்
பவம் பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல் லூழிதொறும்
தவம் பெருக்கும் சண்பையிலே தாவில்சரா சரங்களெலாம்
சிவம் பெருக்கும் பிள்ளையார் திருஅவதா ரஞ்செய்தார்.

## சீர்காழிப் பதியின் பெருமை

பேரூழிகாலத்து உலகம் கடலால் சூழப்பட்ட பொழுது எம்பெருமான் அறுபத்து நான்கு கலைகளையும் ஆடையாக உடுத்தி "ஓம்" எனும் பிரணவதோணியில் அம்மை அப்பனாக எழுந்தருளி வந்தபொழுது அந்த ஊழியிலும் அழியாத இத் தலமே மூலமென்று தங்கினார். ஆகையினால் "திருத்தோணி புரம்" என்றும் இத்தலம் அழைக்கப்படுகிறது. இத்தலத்திற் குரிய பன்னிரு பெயர்களையும் அதன் காரணங்களையும் பல் பெயர்ப் பத்து எனும் தக்கேசிப்பண்ணில் அமைந்த் திருப்பிரம புரப்பதிகத்தில் விளக்குகிறார் ஞானசம்பந்தர்.

அவை பின்வருமாறு:—

1. பிரமபுரம் — பிரமன் வழிபாடு செய்து உய்ந்த காரணத் தால் பெற்ற பெயர்.

2. வேணுபுரம் — (வேணு - மூங்கில்) இந்திரன் சூரபத் மனுக்கு அஞ்சி இறைவனை பூஜிக்க இறைவன் மூங்கி லாய் முளைத்திருந்தமையின் வேணுபுரமாயிற்று.

3. திருப்புகலி — சூரபத்மனுக்கு அஞ்சிய தேவர்கள் அடைக்கலமாகப் புகுந்த இடமாதலால் புகலியாயிற்று.

4. திருவெங்குரு — (வெங்கோ — தருமன்) செங்கோல் ஏந்தி நல்லாட்சி நடத்திய இயமன் பல உயிர்கட்கும் செய்யும் ஆட்சியின் உண்மையை அறியப்படுத்த இத் தலத்தில் இறைவரைப் பூசித்து அருள் பெற்றதால் வெங் குரு எனப் பெயர் வந்தது. சுக்கிரன் பூஜித்து தேவகுரு விற்கு இணையாகப் பேறு பெற்றமையாலும் இப்பெயர் உளதாயிற்று.

5. தோணிபுரம் — பிரணவத்தோணியில் எம்பெருமான் அம்மையுடன் வந்து தங்கிய இடமானதால் திருத்தோணி புரம்.

6. திருப்பூந்தராய் — சங்கநிதி, பதுமநிதி என்ற இரு தெய்வங்கள் பூமாலையாய் இருந்து பூஜித்தமையாலும், ஆதிவராஹமான திருமால் தன் கொம்பில் பூமியை ஏற்று வருத்திய பழி நீங்கவும், இரணியனைக் கொன்ற பழி நீங்க வும் பூக்களைக் கொண்டு பூஜித்தமையாலும் இப்பெயர் பெற்றது.

7. சிரபுரம் — பாற்கடலினின்று கடைந்த அமுதத்தினை மோகினியான திருமாலிடமிருந்து தேவர்களுடன் கலந்து முறையின்றி உண்ட சிலம்பனின் சிரம் மோகினியான திருமாலால் வெட்டப்பட்டது. அத்தலை மாத்திரமான இராகு இத்தலத்தில் பூஜித்துப் பேறு பெற்றமையால் உண்டானது இப்பெயர்.

8. புறவம் — சிபிச்சக்கரவர்த்தியின் தசையினால் வாழ்வு பெற்ற புரு அப்பாவம் போக்க வழிபட்ட தலம். கௌதம முனிவர் சாபத்தால் புருவடிவு பெற்ற பிரசாபதி முனிவன் பூஜித்துப் பேறு பெற்ற தலமுமாம்.

9. சீர்காழி — காளிதன் எனும் பாம்பும், நடனத்தில் தோல்வியடைந்த காளியும் பூஜித்துப் பேறு பெற்ற தலமாதலால் உண்டானது இப்பெயர்.

10. சண்பைநகர் — துருவாச முனிவர் சாபத்தால் சண்பைக் காடொன்று தோன்ற அப்புற்களேயே ஆயுதமாகக் கொண்டு யாதவகுமாரர் போர் செய்து மடிய அப்பழி நீங்க துருவாசர் பூஜித்துப் பேறு பெற்றதால் இப்பெயர் பெற்றது.

11. கொச்சைவயம் — பராசரர் மச்சகந்தியைக் கூடியதால் ஏற்பட்ட நாற்றம் நீங்கும்படி பூஜித்துப் பேறு பெற்றமையால் இப்பெயர் உண்டாயிற்று. (கொச்சை—நாற்றம்)

12. கழுமலம் — உரோமச முனிவர் வழிபட்டு உயிர்கள் மலங்கழுவும் வரம் பெற்றமையால் கழுமலம் என்ற பெயர் பெற்றது. இப்பன்னிரு பெயர்களேயும் முறையே தொகுத்துக் கூறும் பெரியபுராணப் பாடலேக் காண்க.

பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப்
பொருவில்திருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்
வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால்.

இவ்வாறு பல காரணப்பெயர்களேக் கொண்ட திருத்தலத்தில் அவதரித்த ஞானசம்பந்தரின் அவதார தினத்தைக் கொண்டாட, அவர் இல்லத்தில் ஏற்பாடாகிக் கொண்டிருக்கும் வேளேயில், சிவபாதஹிருதயர் திருக்குளத்திற்கு நீராடச் செல்கின்ருர். பிள்ளேயார் தானும் வருவேன் என அடம் பிடித்து உடன் செல்ல, அவரைக் குளக்கரையில் நிறுத்தி விட்டு நீரினுள் இறங்கி அகமர்ஷண மந்திரத்தை மனதில் நிறுத்தி நீரினுள் மூழ்கியதும் தந்தையைக் காணுத குழந்தை, 'அம்மே' 'அப்பா 'என அழத்தொடங்குகிறது. குழந்தையின் அருளே உலகம் அறியும் காலம் வந்து விட்டதாலும், தம் பக்தரான

சிவபாதஹிருதயரின் வேண்டுகோளை நிறைவேற்றும் வேளை வந்து விட்டதாலும், சிவபெருமான் அம்மையுடன் இடப வாகனத்தில் தோன்றிப் பிள்ளையின் அழுகையை நிறுத்தும் பொருட்டும், பிள்ளை சிவஞானம் பெறும் பொருட்டும், அம்மையை நோக்கிப் 'பொற்கிண்ணத்தில் முலைப்பாலைக் கறந்தூட்டுக' என ஆணையிடுகிறார். விநாயகரும், முருகரும் வாய் வைத்து அருந்தாத முலையையுடைய அம்மை (இக் காரணம் பற்றியே திருவண்ணாமலையில் 'உண்ணாமுலை அம்மை' என அழைக்கப்படுகிறார்) சம்பந்தருக்குப் பாலை சிவஞானத்தோடு குழைத்து பொற்கிண்ணத்தில் ஏந்தி அருந்தக் கொடுக்கிறார்.

இங்ஙனம் அம்மையப்பரால் பால்கொடுத்து ஆட் கொள்ளப்பட்டதால் இவருக்கு ஆளுடைய பிள்ளையார் என்னும் நாமமும் ஞானசம்பந்தர் எனும் நாமமும் வழங்க லாயிற்று.

யாவருக்குந் தந்தைதாய் எனுமிவரிப் படிஅளித்தார்
ஆவதனால் ஆளுடைய பிள்ளையா ராய்அகில
தேவருக்கும் முனிவருக்குந் தெரிவரிய பொருளாகும்
தாவில்தனிச் சிவஞான சம்பந்த ராயினார்.

இவர் பெற்ற ஞானத்தின் தன்மையையும் சிறப்பையும் பின்வரும் பெரியபுராணப்பாடல் தெளிவாக்குகின்றது.

சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்.

நீராடி முடித்துக் கரையேறிய தந்தையார், பிள்ளையின் வாயில் பால் அருந்திய சுவட்டைக் கண்டு சிறுகோல் கொண்டு, "யார் கொடுத்த பாலை உண்டாய்" என கோபத் தோடு வினவுகிறார். குழந்தையை கண்டிப்பது பெற்றோரின்

கடமையல்லவா! சிறுகுழந்தை யார் கொடுப்பினும், தன் அறியாமையால் ஏற்றுக்கொண்டு விடும். அக்காரணத்திஞல் பல தீங்குகள் நேரலாம். அதை அறிய வைப்பது பெற்ருேரின் கடன். இதையே செய்ய எண்ணுகிருர் சிவபாதஹிருதயர். தந்தையின் கேள்விக்கு பாலருவாயினரான சம்பந்தர் பதிலுரைக்கிருர். அவை ஓரிரு வரிகளில் அல்ல. தேமதுரத் தமிழில் பண்ணுடன் ஒரு திருப்பதிகமாக வெளி வருகிறது.

சேக்கிழார் பெருமான் தனது பெரியபுராணத்தில் ஞான சம்பந்தரைப்பற்றிக் குறிப்பிடுகையில் "தோ" என அவர் முதல் எழுத்தைக் கூறக் காரணம் விளக்கியுள்ளார். 'மறை முதல் மெய்யுடன் எடுத்த எழுதுமறை' என்பதால், வேதம் பயின்ற மரபில் வந்து தமிழ்வேதம் தந்த இவர், காயத்திரி மந்திரத்தின் முதல் எழுத்தாகிய தகரத்தின் மீது (தத்ஸவிதுர் வரேண்யம்) பிரணவத்தின் முதலெழுத்தை (ஓம்) சேர்த்து தொடங்கியிருப்பது அறிந்து இன்புறத்தக்கது. இதை வெள்ளைவாரணர் தனது பன்னிருதிருமுறையில் தமிழ் என்பதின் தகரத்துடன் ஓம் எனும் பிரணவத்தைச் சேர்த்து 'தோ' எனச் சம்பந்தர் தொடங்கியுள்ளார் எனக்குறிப்பிடுவதும் இன்புறத்தக்கதே. இதில் 'தோடு' என ஆரம்பிக்கும் காரணம் பிள்ளையாரின் அழுகை ஒலி எம்பெருமானின் செவியில் நுகரப் பெற்று, அம்மையிடம் பாலைக் கொடுக்கும்படி ஆணையிட்டதாலும், அந்தக்கருணைக்கு இருப்பிடமான பெண் பாகத்திற்கு உரியது தோடு என்பதாலும், அதை முன்னே வைத்துப் பாடிஞர். சம்பந்தர் இவ்விளவயதிலேயே சன்மார்க்க நெறிகளில் நாயக — நாயகி பாவத்தில் சிவபிரானை 'என் உள்ளம் கவர் கள்வன்' எனப்பாடுவதில் பக்தியின் தீவிரம் வெளிப்படுகிறது. 'கள்வன்' என்பது, இவ்வுலக உயிர்கள் தோறும் மறைந்திருந்து இன்ப துன்பங்களை அனுபவிக்கச் செய்வதால் அவ்வாறு அமைக்கிருர். அவர், இடபவாகனத்தில் ஏறி வந்ததஞல் 'விடை ஏறியோன்' என்கிருர். 'துவெண்மதி' என்பது களங்கமில்லாத மதியைக் குறிப்பிடுகிறது. வெண்மையே களங்கமில்லாததற்கு அடையாளம். 'காடுடைய

சுடலைப்பொடிப் பூசி' என்று வருவது சுடுகாட்டில் உள்ள சாம்பலைப் பூசியவன் என்பதாகும். உலகில், 'ஒருகாலத்தில் எல்லாம் சாம்பலாகவே இம்மண்ணில் முடிய வேண்டும்' எனும் தன்மையை வெளிக்காட்ட இவ்வுடலில் சாம்பலைப் பூசியிருப்பவன். இதுவே திருநீற்றின் விளக்கமும். உலக உயிர்களின் நிலையாமையையும், சிவத்தின் நிலைத்த தன்மையையும் உணர்த்துவது திருநீருகும். திருநீற்றைப் போற்றியே சம்பந்தர் பெருமான், 'திருவாலவாய்ப்பதிக'த்தில் பாடியுள்ளார். ('திருமந்திரம்' பாடிய திருமூலரும், தனது மூவாயிரம் பாடல்களில் முத்துப்போன்று ஒரே பாடலில் திருநீற்றின் பெருமைகளை விவரிக்கிருர்.) 'ஏடுடைய மலரான் முனை நாட்பணிந்து ஏத்த அருள் செய்த' என்பது "பல இதழ்கள் உடையமலரால் நான் உன்னை முன் பணிந்ததால் இவ்வருள்செய்தவாறு" என்பதாகும். 'பீடுடைய பிரமாபுரமேவிய பெம்மான் இவனன்றே' என்பது, பல பெருமைகளை தன்னிடத்தில் பெற்ற பிரமாபுரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் அன்ருே (தனக்குப் பாலைப்புகட்டியவன் என்கிருர்).

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

இவ்வாறே இரண்டாவது பாடலில் முற்றிய ஆமை ஓட்டையும், இளமையான நாகத்தையும், பன்றியின் கூரிய கொம்பு ஆகியவற்றையும் அணிந்து, உலர்ந்து போன மண்டையோட்டை பாத்திரமாக ஏந்தி, அதில் பிச்சையேற்று எனது உள்ளத்தைக் கவர்ந்த கள்வன் யார் எனின், உலக நூல்களைக்கற்று, கேட்டு அடங்கி அவ்வாறே இறைவன் புகழையன்றி மற்றதைக் கல்லாத பெரியோர்களாலேயே தொழுதற்கு உரியவனுனவனும் ('கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்' கற்றவர்கள் உண்ணுங்கனியே போற்றி' எனும் வாக்கியங்கள் இங்கு ஒப்பு நோக்க வல்லன) இப்படிப்பட்ட

கற்றல், கேட்டல், நிற்றலான வழியில் செல்பவர்க்கு அருள் புரிபவனும் இடபவாகனத்தில் ஏறி பிரமபுரத்தில் மேவி இருப்பவனும் ஆகும் என்கிருர்.

முற்றலாமையிள நாகமோடேன முளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகல ஞுப்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையால்தொழு
தேத்தப்
பெற்றம்ஊர்ந்தபிர மாபுரம்மேவிய பெம்மானிவனன்றே.

மூன்ருவது பாடலில் நீர் நிறைந்த கங்கை நதியைத் தாங்கியுள்ள சடையும் ஒளி பொருந்திய வெண் மதியையும் சூடிக் கையில்அடுக்கப்பட்ட வளையல்கள் கழன்று விடும்படியாக மனதைக் கொள்ளைக் கொண்ட கள்வன் யாவன் எனின், தலங்கள் பலஉள்ள இப்பூமியில் ஒப்பற்ற உயர்ந்த பதி என்று புகழ் பெற்ற பிரமாபுரத்தில் உறைகின்ற பெருமானே ஆவான்.

நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர் நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய வோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

நான்காம் பாடலில் விண்ணில் செருக்குடன் திரிந்த பொன் வெள்ளி இரும்பாலாகிய மதில்களை, மேருவை வில்லாக்கி, ஆதிசேஷனை நாணுக்கி எய்து துளைத்தது மட்டுமின்றி, பிரம்ம கபாலத்தில் பிச்சை ஏற்று வந்து என் உள்ளத்தினைக் கொள்ளைகொண்ட கள்வன் யாவன் எனில் பாம்பும் கொன்றை மலரும் விளங்கும் மார்பினராய், இடப்பாகத்தில் உமை அம்மையும் வைத்து இப்பிரமபுரத்தில் மகிழ்ச்சியுடனிருக்கும் பெருமானேயாவான் என்கிருர்.

விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலையோட்டில்
உண்மகிழ்ந்து பலிதேரியவந்தென துள்ளங்கவர்கள்வன்

மண்மகிழ்ந்தவர வம்மலர்க்கொன்றை மலிந்தவரைமார்பிற்
பெண்மகிழ்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

ஐந்தாவது பாடலில் பெண்ணொரு பாகத்தை உடையன், சடைமுடியுடையவன், எருதின்மீது வீற்றிருந்து பவனி வருபவன், யாவராலும் போற்றப்படுபவன். அவ்வாறு அமர்ந்து என் உள்ளத்தைக் கொள்ளைக் கொண்டவன், ஒரு காலத்தில் கடலால் சூழப்பட்டும் அழியாது தோணிபோல் மிதந்து தோணிபுரம் எனப் பெயர் பெற்ற பிரமபுரத்தில் மேவிய பெம்மான் இவன்தான் என்கிறார்.

ஒருமைபெண்மையுடை யன்சடையன்விடை யூரும்மிவ
னென்ன
அருமையாகவுரை செய்யவமர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததோர் காலம்மிது
வென்னப்
பெருமைபெற்றபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

ஆறுவது பாடலில் ஒலி உருவாகிய வேதங்களை ஓதுதலை உடையவராயிருப்பதுடன், திருக்கூத்தினையும் உடையவராயும், தவறிழைத்தாரைக் தண்டிப்பதற்காக ஏந்திய மழு என்ற தீப்பிழம்பாகிய ஆயுதத்தை ஏந்தியவரும், என் முன் கையில் செறிந்து கலந்திருந்த சங்கு வளையல்கள் கழன்று விழுமாறு (உடம்பு நனி சுருங்கல் எனும் மெய்ப்பாடு உணர்த்தியவாறு) என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவன், மணம் மிகுந்ததுமான பொழில்களடர்ந்தும் நீண்டும் உயர்ந்த சோலைகளிடத்து தன் ஒளிக்கிரணங்களைச் சிந்தும் சந்திரன் தவழும் பிரமபுரத்தை விரும்பி உறைகின்ற பெருமானாகிய இவனே என்கிறார்.

மறைகலந்தவொலி பாடலோடாடல ராகிமழுவேந்தி
இறைகலந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்
கள்வன்
கறைகலந்தகடி யார்பொழினீடுயர் சோலைக்கதிர்சிந்தப்
பிறைகலந்தபிர மாபுரமேவிய பெம்மானி வனன்றே

ஏழாவது பாடலில் சடையில் கலந்திருக்கின்ற கங்கையை யுடையவன், திருக்கரத்தில் அனலையுடையவன், ஆடையின் மேல் இறுகக்கட்டிய கச்சையாகிய பாம்பை உடையவன் ஊடத்தக்க பெண்ணும், அஞ்சத்தக்க எரி, அரவம் முதலிய வற்றை அணிந்து திரிபவராயிருந்தும் என் உள்ளத்தைக் கவர்ந்தார் என்றது பெருமானின் பேரழகின் திறத்தையும், கருணையையும், எல்லா உயிரையும் பகை நீக்கியாளும் வன்மையையும் வியந்தவாறு. அப்பேர்ப்பட்ட பெம்மான் கடலோடு கலக்கின்ற உப்பங்கழிகள் சூழ்ந்த குளிர்ந்த சோலை களில் அழகிய பொன்நிறம் பொருந்திய சிறகுகளை உடைய அன்னங்கள் தங்கள் பெடைகளை தழுவுகின்ற இப்பிரமபுரத் தில் எழுந்தருளியவனுவான்.

சடைமுயங்குபுன லன்னலன்னெரி வீசிச்சதிர்வெய்த
உடைமுயங்குமர வோடுழிதந்தென துள்ளங்கவர்கள்வன்
கடன்முயங்குகழி சூழ்குளிர்கானலம் பொன்னஞ்சிற
கன்னம்
பெடைமுயங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

இவ்வாறு முதல் ஏழு பாடல்களிலும், ஞானப்பால் கொடுத்த இறைவனது அடையாளங்களைக் கூறியபின் எட்டாவது, ஒன்பதாவது பாடலில், இம்மண்ணுலக மக்களும் தேவர்களும் தவறு செய்தும், பின் தம் தவறுகளுக்கு வருந்தி இறைவனைச் சரணடைந்தால், அவர் பெரும் கருணை காட்டி, ஆட்கொண்டு, அருள் செய்வார் என்பதை விளக்குகிறுர்.

எட்டாவது பாடலில் திருக்கயிலாய மலையைப் பெயர்த் தெடுக்க விழைந்த இராவணனை அம்மலையின் அடியில் சிக்க வைத்து பின் அவன், தன் தவறுணர்ந்து, சிவபிரானைத் துதித்து சாமகானம் பாட, அவனுக்கு அருள் புரிந்தவரான எனது உள்ளத்தைக் கவர்ந்த கள்வன், துயர் விளங்கும் இப் பூமியில் ஊழியிலும் அழியாது புகழோடு விளங்கும் பிரம்மா புரத்தில் வீற்றிருக்கும் பெருமானே ஆவான் என்றவாறு.

வியரிலங்குவரை யுந்தியதோள்களை வீரம்விளைவித்த
உயரிலங்கையரை யன்வலிசெற்றென துள்ளங்கவர்கள்வன்
துயரிலங்கும்முல கிற்பலவூழிகள் தோன்றும்பொழு
தெல்லாம்
பெயரிலங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

ஒன்பதாவது பாடலில் பிரம்மாவும், திருமாலும் முறையே சிவபெருமானின் அடிமுடி காணும் பொருட்டு (அவ்வாறு காண்பவரே உயர்ந்தவர் என்ற எண்ணத்தைக் கொண்டு) தன் நிலைமைக்கும் கீழ்ப்பிறப்பான பறவை உருவமும், பன்றி உருவமும் எடுத்து தேடிச்செல்ல, அவர்களிருவரும் தோல்வியுற தீப்பிழம்பாக உயர்ந்து என் உள்ளத்தைக் கவர்ந்து நின்றவன், (பின் அவ்விருவரும் ஐந்தெழுத்தோதி பேறு பெற்றனர்) வானோர்களும், உலகத்தாரும் உயர்ந்து பேணும்படி, பிரம்மபுரத்தில் அமர்ந்திருக்கும் இப்பெருமானேயாம் என்றவாறு.

தாணுதல்செய்திறை காணியமாலொடு தண்டாமரையானும்
நீணுதல்செய்தொழி யந்நிமிர்ந்தானென துள்ளங்கவர்
கள்வன்
வாணுதல்செய்மக ளீர்முதலாகிய வையத்தவரேத்தப்
பேணுதல்செய்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

பத்தாவது பாடலில் புத்தரும் அறிவற்ற சமணரும் புறங்கூற, வேத நெறியில் நில்லாத உலகத்தார், அப்பழிக்கூற்றுக்கு ஏற்றவாறு தமக்குத் தோன்றியதைச் சொல்லவும் பிச்சையேற்று, எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்டவன், (யாவன் எனின்) மதம் பொருந்திய யானை வருந்த அதன் தோலை உரித்து ‘இது என்ன மாயம் எனுமளவிற்கு’ போர்த்தி கொண்டவரும், பித்தரைப் போன்றவருமான இப்பிரமபுரத்தில் மேவியிருக்கும் பெருமானேயாம்.

புத்தரோடுபொறி யில்சமணும்புறங் கூறநெறிநில்லா
ஒத்தசொல்லஉல கம்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்

மத்தயானேமறு கவ்வுரிபோர்த்ததோர் மாயம்மிதுவென்னப்
பித்தர்போலும்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

இவ்வாறு பத்துப்பாடல்களில் இறைவனைப் பற்றிய விவரங்களை இன்னிசையுடன் பாடிய சம்பந்தர் கடைசிப் பாடலான பதினொன்ருவதைத் திருக்கடைப்பாகப் பாடியுள்ளார். அதில் ஒருமைப்பட்ட மனத்துடன், மறைகளில் வல்ல பிரமனுல் இறைவர் பூசையின் பொருட்டு உண்டாக்கப்பட்ட தாமரை மலர்கள் நிறைந்த விசாலமான பிரமதீர்த்தம் எனும் பொய்கையையுடைய பிரமாபுரத்தில் விரும்பியிருக்கும் சிவனை சிவநெறி காட்டும் ஞானசம்பந்தரால் ஆக்கப்பட்ட தமிழ்ப் பாக்களால் ஓதவல்லவர்கள் தங்கள் பழவினைகளை போக்கிக் கொள்ளுதல் எளிதாம். இப்பாக்களால் சிவபிரானைத் துதித்தலின் பலன் கூறியவாறு.

அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய
பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தன்னுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தல்எளிதாமே.

திருஞானசம்பந்தப் பிள்ளையார் தமது இளம்பருவத்தில் நிகழ்ந்த இவ்வற்புத நிகழ்ச்சியை பின்ஞெரு காலத்தில் நினைத்து போற்றும் நிலையில், தாம் பாடிய திருப்பதிகமொன்றில் குறிப்பிடுகிருர். இவர் தலயாத்திரையாகப் பல தலங்களையும் பாடிச்சென்று வந்த காலை மதுரையம்பதியில் தங்கிய வேளையில் இவரது தந்தையார், இவரைக் காணும்பொருட்டு மதுரையம்பதிக்கு எழுந்தருளுகின்ருர். தந்தையாரைக்கண்ட பிள்ளையார், சீர்காழிப்பதியில் எழுந்தருளிய இறைவனது நலத்தினை, 'மண்ணில் நல்ல வண்ணம்' எனும் பதிகத்தைப் பாடி வினவும் விதமாக உள்ளது, அப்பதிகத்தின் இரண்டாவது பாடல்,

"போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல்லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்

காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே''

அழகிய பொற்கிண்ணத்திலே ஊட்டியருளிய பாலடிசில் பொல்லாதென்று கூறித் தந்தையார் வெகுளும்படி என்னை ஆட்கொண்டருளிய பிரமபுரத்து இறைவனுகிய பெருந்தகை பிராட்டியுடன், கழுமல வளநகரில் எழுந்தருளியிருக்கின்றதா? எனத் தன் தந்தையை நோக்கி கேட்பதாக அமைந்தது.

அறியாப்பருவத்தில் இறைவன் அம்மையப்பனுக எழுந்தருளி வந்து தமக்கு ஞானப்பாலளித்து ஆட்கொண்டமையும் அதனை உணராத தந்தை வெகுண்டு உரைத்த அழகிய நிகழ்ச்சியினையும் பிள்ளையார் மேற்கண்ட பாடலில் தெளிவாகக் கூறுதல் கண்டு, தெளிந்து, அக்காழிவேந்தன் காட்டிய வழியில், ஐந்தெழுத்தை மனதில் நிறுத்தி, அம்மையப்பனுன எம்பெருமானை அடைய, அவனருளைப் பெற, நல்வழி அவன் நாமத்தைச் சிந்தை செய்வது என்பதனைக் கீழ்கண்ட அவரது பாடல் தெள்ளென விளக்குகிறது.

''காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக்கு உய்ப்பது
வேத நான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே.''

மனம் இரங்கி அன்புடன் சிவபிரானை நினைந்து கண்ணில் நீர் மல்க, ரிக், யஜுர், சாம, அதர்வண வேதமான நான்கிலும் கூறப்பட்டதான உண்மைப் பொருள் எனப்பட்டதான ஐந்து எழுத்தான 'நமச்சிவாய' எனும் நாமத்தை எவர்கள் ஓதுகிருர்களோ, அவர்களை அந்நாமம், நல்ல நெறிக்கு அழைத்து செல்ல வழிகாட்டியாக இருக்கும்.

இறைவனது திருவருட் பெருமையினை உலக மக்கள் உணர்ந்து போற்றும்படி வியப்புடைய அருட்செயல்கள் பல நிகழும் வண்ணம் பாடப்பெற்ற திருப்பதிகங்களை அற்புதத்

திருப்பதிகங்கள் எனப் போற்றுவர். சீர்காழியில் அம்மையப்பரால் ஞானப்பால் ஊட்டப் பெற்று அற்புதமாக ''தோடுடைய செவியன்'' பதிகம் பாடிய மூன்றே வயது நிரம்பப் பெற்ற சம்பந்தப் பெருமானுல் இன்னும்பல அற்புத நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டன.

அவையாவன:-

1. திருக்கோலக்காவில் 'மடையில் வாளை' பதிகம் பாட இறைவன் அவருக்கு ஐந்தெழுத்துப் பொறித்த பொற்றுளம் கொடுத்தருளுகிருர்.

2. திருஅரத்துறையில் சிவபெருமானுல் முத்துச் சிவிகையும், முத்துக்குடையும், முத்துச் சின்னங்களும் கொடுத்தருளப் பெற்ருர்.

3. திருப்பாச்சிலாச்சிராமத்தில் கொல்லி மழவன் எனும் அரசனது புத்திரிக்குக் கண்டிருந்த முயலகன் எனும் நோயைப் பரமசிவன் மீது பதிகம்பாடி தீர்த்தருளினுர்.

4. திருப்பட்டீச்சுரத்தில் சிவபிரான் சிவ பூதங்களால் இவருக்கு முத்துப்பந்தல் இடுவித்தார்.

5. திருவாவடுதுறையில் இவர் தந்தை யாகஞ் செய்யப் பொருள் கேட்க ஞானசம்பந்தர் வேண்ட சிவபிரான் இவருக்கு எடுக்க எடுக்கக் குறையாத பொன் முடிச்சு ஒன்று கொடுத்தருளினுர்.

6. திருமருகலில் சர்ப்பத்தால் கடிக்கப்பட்டு இறந்த ஓர் வணிகனை பரமசிவத்தின் மேல் பதிகம் ஓதி உயிர்ப்பித்தார்.

7. திருவீழிமிழலையில் பஞ்சத்தால் யாவரும் வருந்த சிவனடியார்கள் வருந்தாவண்ணம் இவர் ஓதிய பாக்களால் சிவபிரான் படிக்காசு கொடுத்தருளினுர்.

8. திருமறைக்காட்டில் வேதம் பூசித்து மூடிப்போன கோயிற் கதவை திருநாவுக்கரசரால் திறக்கச் செய்து, அதனை மூடும்படி தாம் பதிகம் பாடியருளினர்.

9. மதுரையில் சமணமதம் அதிகரித்து அப்போதிருந்த கூன்பாண்டிய மன்னனும் அதை அனுசரிக்க, அரசி மங்கையர்க்கரசியாரும் அமைச்சரும் மன்னர் மனம் மாறவேண்டும் எனச் சம்பந்தரை வேண்டி வரவழைக்க அதை ஏற்று மதுரையம்பதிக்குசென்று ஓர் மடத்தில் தங்க, இதை அறிந்த சமணர்கள் அம்மடத்திற்கு தீ இட, இது கண்ட சம்பந்தர் அத்தீ அரசனைப்பற்றுமாறு ஏவ, அது அரசனின் மேனியில் சுரநோயாய்ப் பற்றியது. அந்நோயைத் தீர்க்க வேண்டி சமணர்கள் கையாண்ட மந்திர தந்திரங்கள் ஔடதங்கள் வீண் முயற்சியாயிற்று. அரசியும் அமைச்சரும் சம்பந்தரை வேண்ட இவர் சென்று திருநீற்றுப் பதிகமோதி அந்நோயைத் தீர்த்தருளினர்.

10. அனல் வாதம்:- சமணர்கள் தங்கள் உண்மைப் பொருளை ஓர் ஏட்டில் எழுதித் தீயிலிட அது எரிந்து சாம்பலானது. பிள்ளையார் ''போகமார்த்த பூண் முலையாள்'' எனும் பதிகம் எழுதப்பட்ட ஏட்டைத் தீயிலிட அது வேகாமல் பச்சையாய் இருந்தது.

11. புனல் வாதம்:- சமணர்கள் தம் உண்மைப்பொருளை எழுதிய ஏட்டை புனலில் இட அதை வெள்ளம் அடித்துச் சென்றது. சம்பந்தப் பெருமான் ''வாழ்க அந்தணர்'' எனும் பதிகத்தை எழுதி ஏட்டை வைகையாற்றில் இட, அவ்வேடு வெள்ளத்தினை எதிர்த்துச் சென்று திருவேடகம் எனும் தலத்தில் கரை சேர்ந்தது. அப்பாடலில் 'வேந்தனும் ஓங்குக' எனப்பாட கூன்பாண்டிய மன்னனது கூனும் நிமிர்ந்தது.

12. திருக்கொள்ளம்பூதூரில் ''கொட்டமே கமழும்'' எனும் பதிகம் பாடி ஓடத்தைத் தனது பக்திப் பாவாலேயே எதிர்கரை சேரச் செய்தார்.

13. திருத்தளிச்சேரிக்குப் போகும் வழியில் போதிமங்கை எனும் கிராமம் உள்ளது. இங்கு புத்த நந்தி என்பவன் சம்பந்தரையும் அடியார்களேயும் தடுக்க 'புத்தர் சமண கழுக்கையர்' எனும் பாடலே பஞ்சாக்கரத் திருப்பதிகத்தினின்றும் சம்பந்தரின் அடியார்களுள் ஒருவரான சம்பந்த சரணுலயர் என்பவர் பாட, புத்தநந்தி இடி வீழ்ந்து இறந்தனன். பின்னர் சாரி புத்தன் என்பவன் வாதம் செய்து தோற்றபின் எல்லாப் பௌத்தர்களும் சைவராயினர்.

14. திருவோத்தூரில் ''பூத்தேர்ந்தாயன'' எனும் பதிகம் பாடி ஆண்பனேயை பெண்பனேயாக்கினுர்.

15. மயிலாப்பூரில் அரவம் தீண்டி இறந்த சிவநேசச் செட்டியாரின் பெண்ணே ''மட்டிட்ட புனேயங்கானல்'' எனும் பதிகம்பாடி உயிர்பெறச் செய்தார்.

16. சம்பந்தப்பெருமான் தனது பதினறு வயதில் திருமணம் நிகழ்ந்த காலத்தில் நல்லூர்ப் பெருமணம் எனும் தலத்தில் இவ் இல்வாழ்க்கை வந்து சேர்ந்ததே என வருத்தமுற்று இறைவனே நினேந்து ''கல்லூர் பெருமணம் வேண்டா கழுமலம்'' எனும் பதிகம் பாட, இறைவன் சோதி வடிவாகத் தோன்றி அதனுள் ஓர் வாயிலேக்காட்ட சம்பந்தப்பெருமான் நமச்சிவாயப் பதிகத்தை ஓதித் தன் திருமணங்காண வந்தவர்களேயும் உற்ருர் உறவினர்களேயும் அச்சோதியினுள் ஏகும்படிப் பணித்து தானும் தன் மனேவியுடன் அச்சோதியினுள் புகுந்து இறைவனுடன் கலந்தருளினுர்.

இவ்வாறு தனது மூன்ருவது வயது முதல் தொடங்கி இறைவனேப் பாடத்தொடங்கிய சம்பந்தப் பெருமானுர் தனது பதினுரும் வயதில் நல்லூர் பெருமணம் எனும் தலம் முடிய பதினுருயிரம் பதிகங்கள் பாடியிருப்பினும், நாம் செய்த நற்றவப்பயன்களால் முன்னூற்று எண்பத்து நான்கு பதிகங்களாவது கிடைக்கப் பெற்று அவற்றின் பொருளுணர்ந்து

இறைவனது அருளைப்பெற வழிகாட்டியாக அமைந்துள்ளன. அவையாவும் எல்லாம் வல்ல எம்பிரானின் உரை எனக் கொள்ள வேண்டும் என்பதற்குச் சான்ருக ஞானசம்பந்தரின் திருஇலம்பையங்கோட்டூர் பதிகம் உள்ளது. அப்பதிகப் பாடல்களில் 'எனதுரை தனதுரையாக' எனும் வரும் தொடரால் இவர் பாடிய பாக்கள் யாவுமே நமச்சிவாய மூர்த்தியின் அருள் மொழிகளே எனத் தெள்ளத் தெளிகின்ருேம். இப்பெருமானின் அருள் வரலாறு மேலும் தொடர்ந்து அடுத்து வரும் மலர்களில் விரிவாக வர இறைவன் அருள் புரிவாராக!

நாதன் நாமம் நமச்சிவாயவே!

ஆய்வுக்காக எடுத்துக் கொள்ளப்பட்ட நூல்கள்:

1. தேவாரத் திருப்பதிகங்கள் (முதல் திருமுறை) தருமபுர ஆதீன வெளியீடு.

2. வெள்ளை வாரணரின் பன்னிரு திருமுறை வரலாறு.

3. தேவாரத் திருப்பதிகங்கள்: — [திருமயிலை வித்வான் சண்முகப் பிள்ளையவர்கள் பார்வையிட்டப் பிரதிக் கிணங்க] நமச்சிவாய முதலியார் அவர்களால் பதிப்பிக்கப்பட்டது.

4. மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை— சென்னை ஆங்கீரஸ வேங்கடேச சர்மா அவர்கள் பதிப்பு.

சிவம்.





பாம்பன்

ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

உ

திருச்சிற்றம்பலம்

பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்
அருளிச் செய்த

# அட்டாட்ட விக்கிரக லீலை

நாற்பத்தெண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

உரையாசிரியர்:

நக்கீரன் வழியடிமை,
புலவர் பி. மா. சோமசுந்தரனார்,
இராணிப்பேட்டை, வ. ஆ. மாவட்டம்.

சந்திரசேகரமர்த்தநாரீசுரஞ்
சக்கரப்பிரதானம்
தக்ஷிணமூர்த்தமிலிங்கம் லிங்கோற்பவந்
தக்ஷயக்கியபங்கம்
சந்தியினிர்த்தனஞ் சந்ததநிர்த்தனஞ்
சண்டேசாநுக்ரகம்
சலந்தரவதமகொராஸ்திரமேகப
தம்மசுவாரூடம்
சத்யசதாசிவம் மிக்கசதாசிவந்
தகுலகுளேசுவரம்
சகஜசுகாசனங் கூர்மசங்காரமச்
சாரிவராஹாரி

சற்குருமூர்த்த முமேசமுமாபதி
ஜயபுஜங்கத்ராசம்
சார்த்தூலஹரிபைரவங் கலியாணசுந்
தரம்வடுகங்கிராதம்

சுந்தரவிருஷபவூர்தி விஷாபஹ
ரணஞ் சுவராபக்நம்
துகளறு க்ஷேத்திர பாலகந்தொல்கரு
டாந்திகம் முகலிங்கம்
துங்ககங்காதரங் கங்காவிஸர்ஜநஞ்
சுபசோமாஸ்கந்தம்
சூரஸிம்ஹாரி கமாரியமாந்தகஞ்
சுசிமாணவபாவம்
சுபகரபிராத்தனைமூர்த்தநறுந்திரி
புராந்தகஞ் சுரர்பரசும்
சுமுககங்காள மிரக்தபிக்ஷைப்பிர
தானமிருஞ்சுடரே
சுடர்கவுரீவரப்பிரதம் மஹாபா
சுபத சொரூபமணி
தோன்றுபுஜங்கலளிதம் ரிஷபாந்திகந்
தோமறுகஜயுத்தம்

விந்தைவிளம்பு கஜாந்திகம்வீணை
தயங்குதக்ஷிணமூர்த்தம்
மேதகயோக விஞ்ஞேதமதாக
விளங்குதக்ஷிணமூர்த்தம்
விமலபிக்ஷாடனங் கவலையுத்தாரணம்
வேதகணம்புகழும்
விதிசிரகண்டனங் கவுரிவிலாசமந்
விதமெழிலரியர்த்தம்
வீரபத்திரந்திரிமூர்த்தி முப்பாதம
ஹாவேதாளிநடம்
வெருவறுமேகபதத்திரி யுருவாய்
விளம்பறுபதுநான்கும்

விலாசவளிப்பு நிமித்தமெடுத்தவொர்
மெய்ப்பொருளெதுவதுவே
விண்ணவர்மண்ணவர் கண்ணவர்யாவரும்
வீடருளாயெனவே

வந்தனைபுரிய விருந்துளனீயென
வண்டமிழான் மனசான்
வாழ்த்திவணங்கெனையாள வெனிருதய
மலரிலெழுந்தருளாய்
மந்திரநாயக தந்திரநாயக
மங்களநாயகவோம்
மயதவரீசுர பரமகுஹேசுர
வசனமனுதீத
வரதக்ருபாகர குமரபராபர
வரைவறு ஷாட்குண்ய
வஸ்துவெனற்புத சத்தியவித்தக
மரணமொடயனமிலா
வானவஞான நபோமணியேதிரு
மாலயனறியாவோர்
மாமலையின்பெயரான் குருநாதவென்
மருடெறு மாமுனியே.

இவ்விருத்தத்தினை உள்ளுருக்கத்தோடு முப்போதும் பாடியாடுக. ஆடாவிடினும் பாடுக. அங்ஙனஞ் செய்வார்க்கு உரோக நாசம், பாபநாசம், சத்துருநாசம், ஆயுள் விருத்தி, தைரிய விருத்தி, வீரிய விருத்தி, புத்திர விருத்தி, புண்ணிய விருத்தி, உண்டாதலோடு சர்வார்த்த சித்தியும் முத்தியும் வாய்க்குமென்பது வாய்மை.

# அட்டாட்ட விக்கிரக லீலை — உரை

முழு முதல்வனான சிவபெருமான் உயிர்கள் உய்யும் பொருட்டு நிகழ்த்திய திருவிளையாடல்கள் பல. அவன் திருவிளையாட்டாகக் கொண்ட அருள் திருமேனிகள் அறுபத்து நான்கு என்பர். அவற்றைப் பேரருளாளரான பாம்பன் அடிகளார் இப்பாடலில் கூறுகின்றார். ஐம்முகச் சிவனே அறுமுகச் சிவன். "தனக்குத்தான் மகனாகிய தத்துவன்" என்றார் தணிகைப்புராணமுடையாரும். எனவே இத்திருமேனிகளை முருகன் மீது சார்த்தியுரைத்தருளினார் என்று உணர்க.

1. சந்திரசேகரம்: பிறைநிலவைத் திருமுடியில் அணிந்த திருக்கோலம்.

(தக்கன் சாபத்தால் திங்கட் கடவுள் தன் கலைகள் நாள் தோறும் ஒவ்வொன்றாகக் குறையப் பெற்றான். தன்னைக் காப்பாற்றக் கூடியவன் தனக்கு யாரும் நிகரில்லாத பரமசிவனே என்று உணர்ந்து பரமனை அடைக்கலம் புகுந்தான். பெருமான் ஒரு புதிய மலரை எடுத்து அணிவது போல அவனைத் திருமுடியில் அணிந்து இறவாப் பெருவாழ்வை அருளினான்.

இத்திருக்கோலம் உயிர்களின் பிறப்பு, இறப்பு ஆகிய துன்பங்களை நீக்கி அழியாத பேரின்ப வீடு அருள நிற்பதாகும்)

2. அர்த்தநாரீசுரம்: ஒரே திருமேனியில் இறைவன் வலப்பக்கத்தும் தேவி இடப்பக்கத்தும் விளங்கும் அம்மையப்பர் என்னும் திருக்கோலம்.

(தோலுடை, குழையணி, திருநீற்றுப் பொலிவு, சூலப் படை ஆகியவை வலப்பக்கத்திலும் துகிலுடை, தோடு அணி, பசுஞ்சாந்து அழகு, அழகிய வளையல் அணிந்த கையில் பசுங்

கிளி ஆகியவை இடப்பக்கத்திலும் இத்திருக்கோலத்தில் விளங்கும்).

3. சக்கரப்பிரதானம்: திருமாலுக்குச் சக்கரப்படையை வழங்கியருளிய திருக்கோலம்.

(சிவபிரான் தன் கால் விரலால் தரையில் கீறிய சக்கர உருவத்தைத் தன் தலையில் தாங்குவான் கருதிச் சலந்தரன் அதைப் பெயர்த்துத் தலையில் வைத்தலும் அச்சக்கரம் அவனுடலைப் போழ்ந்து அவனையழித்தது. அச்சக்கரப்படையைப் பெற விரும்பிய திருமால் நாள்தோறும் ஆயிரம் தாமரை மலர்கள் கொண்டு சிவபிரானை வழிபட்டு வந்தார். ஒருநாள் இறைவன் திருவிளையாட்டாக ஆயிரம் மலர்களில் ஒன்றைக் குறையச் செய்தார். வழிபாட்டில் ஒரு மலர் குறைவது கண்டு திருமால் தமது விழியைப் பிடுங்கி மலராக இறைவன் திருவடியிலிட்டு வழிபட்டார். அதுகண்டு மகிழ்ந்த இறைவன் திருமாலுக்குச் சக்கரப்படையும், கண்ணும், செந்தாமரைக்கண்ணன் என்ற பெயரும் வழங்கியருளினர்).

4. தக்ஷிணமூர்த்தம்: தென்முகக் கடவுளாய் விளங்கும் திருக்கோலம்.

(மெய்ந்நூல்களின் உண்மைப் பொருளை அறியமாட்டாமல் தம்மை வந்தடைந்த பிரம்மாவின் மக்களாகிய சனகர், சனுதரர், சனந்தனர், சனத்குமாரர் ஆகிய நால்வருக்கும் கல்லால மரத்தின் கீழிருந்து வாக்கு இறந்த பூரணமாய், மறைக்கப்பாலாய் இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டிச் சொல்லாமல் சொன்ன திருக்கோலம்).

5. இலிங்கம்: எல்லாத் தேவர்களையும் தன்னிடத்தில் அடக்கி ஐம்புலன்களுக்கும் புலனுகும்படி விளங்கும் இலிங்கத் திருமேனி.

(இது சகள நிட்களத்திருமேனியாம். இத்திருவுருவில் விருத்தமே உருத்திர பாகம். பீடத்தின் அதோ பாகத்தின்

அடி நான்கு மூலை பிரமபாகம். நடுவின் எட்டு மூலை விட்டுணு பாகம். இவற்றுள் பிரமபாகம் நபும்சகலிங்கம், விட்டுணு பாகம் ஸ்த்ரீலிங்கம், உருத்திர பாகம் புல்லிங்கம் என்று அறிக).

6. இலிங்கோற்பவம்: தாமே முதல்வர் என்று மயங்கிய திருமால் பிரமன் ஆண்டுத் தோன்றிய பேரொளிப் பிழம்பின் முடியும் அடியுங்காணாது அயர்ந்து தருக்கொழிந்து வழி படலும் அவர்கட்குக் காட்சியளிக்க இலிங்கத்திலிருந்து தோன்றிய திருக்கோலம்.

7. தக்ஷயக்கிய பங்கம் - தக்கன் வேள்வியை அழித்த திருக்கோலம்.

8. சந்தியினிர்த்தனம்: மாலையில் செய்த நடனத்திருக் கோலம். (உயிர்களைக் கொல்லத் தோன்றிய ஆலகால நஞ்சத்தை உண்டு, திருமால் முதலிய தேவர்கள் மத்தளம் முதலியவற்றை வாசிக்கும்படி செய்து இறைவர் நடனமாடிய திருக்கோலம். இதனைப் புஜங்கலளிதம் என்று சிலர் கூறுதல் தவறு. அது இப்பாடலில் வேறோர் இடத்தில் வருதல் காண்க.)

9. சந்தத நிர்த்தனம்: ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களும் நிகழும்படி ஆடும் நடனத் திருக்கோலம்.

10. சண்டேசாநுக்ரகம்: சண்டேசுவர நாயனருக்கு அருளும் திருக்கோலம்.

(இவர் வரலாற்றைப் பெரியபுராணத்துள் காண்க.)

11. சலந்தரவதம்: சலந்தரன் என்னும் அசுரனைச்சக்கரப் படையினால் பிளந்தருளிய திருக்கோலம்.

12. அகோராஸ்திரம்: அகோராத்திரம் என்ற அம்பால் சப்ததந்து என்ற அசுரனைக் கொன்றும் அவன் மனைவியர் வேண்ட அவனை எழுப்பியும் அருளிய திருக்கோலம்.

13. ஏகபதம்: கடையூழிக்காலத்தில் எல்லா உயிர்களும் தம் திருவடியில் பொருந்த நிற்கும் ஒரே திருவடியுடன் விளங்கும் திருக்கோலம்.

14. அசுவாருடம்: மாணிக்கவாசகப் பெருமான் பொருட்டு நரிகளைக் குதிரைகளாக்கித் தான் குதிரைச் சேவகனாக மதுரையில் பாண்டியன் முன் எழுந்தருளிய திருக்கோலம்.

15. சத்யசதாசிவம்: சத்தியோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசானம் ஆகிய ஐந்து முகங்கள் கொண்ட சதாசிவ மூர்த்தியாகி வேதமும் ஆகமமும் அருளிய திருக்கோலம்.

16. மிக்க சதாசிவம்: இருபத்தைந்து திருமுகங்களோடு எழுந்தருளியிருக்கும் மகா சதாசிவத் திருக்கோலம்.

17. தகுலகுளேசுவரம்: தகைமை பொருந்திய இலகுளம் என்னும் உலகத்தில் மணிகள் இழைத்த அரியணையில் எழுந்தருளியிருக்கும் திருக்கோலம்.

18. சகஜசுகாசனம்: எம்பெருமான் ஆறு திருக்கைகளோடு தேவி இடப்பாகத்தில் விளங்கச் சுகாசனத்தில் எழுந்தருளியிருக்கும் திருக்கோலம்.

19. கூர்மசங்காரம்: திருப்பாற்கடலைக் கடைய ஆமை உருவமாகி உதவிய திருமால் பின்னர்ச் செருக்குற்று மேன் மேலும் ஆமையான தன் உருவத்தை வளரச் செய்ய அதனால் திருப்பாற்கடல் கரைபுரள, தேவர்கள் எல்லாரும் வந்து தன்பால் முறையிட உயிர்கள் உய்யும் பொருட்டு இறைவன் அந்த ஆமையைப் பிளந்து அதன் ஓட்டை அணிந்த திருக்கோலம்.

20. மச்சாரி: சோமுகாசுரனை மீன் உருவம் எடுத்துக் கொன்ற திருமால் பின்பு தருக்குற்றுக் கடலைக் கலக்க இறைவன் அந்த மீனின் கண்களைப் பிடுங்கி அணிந்து கொண்ட திருக்கோலம்.

21. வராஹாரி: இரணியாட்சனைப் பன்றி உருவில் வந்து கொன்ற திருமால் பின்பு செருக்குற்று உலகைத் துன் புறுத்த அந்தப் பன்றியின் கோரைப்பல்லைப் பிடுங்கி அணிந்து கொண்ட திருக்கோலம்.

22. சற்குருமூர்த்தம்: மணிவாசகர் பொருட்டாக மக்களி லொருவனாய்க் குருவாகி வந்து ஆட்கொண்ட திருக்கோலம்.

23. உமேசம்: இடது பக்கம் தேவி விளங்க வீற்றிருந்து பிரமனின் படைப்புத் தொழிலுக்கு அருள் வழங்கிய திருக் கோலம்.

24. உமாபதி: தேவி ஐந்தொழிலும் இயற்றிவரும்படி அருள் செய்யும் திருக்கோலம்.

25. ஜயபுஜங்கத்ராசம்: தாருகவன முனிவர்கள் தன்னைக் கொல்லும்படி வேள்வியில் படைத்தனுப்பிய பாம்பு களைத் தன் திருமேனியில் அணிந்து வெற்றி கொள்ளும் திருக் கோலம்.

26. சார்த்தூலஹரி: தாருகவன முனிவர்கள் வேள்வியில் உண்டு பண்ணித் தன்னைக் கொல்லும்படி ஏவிய புலியைக் கொன்று அதன் தோலை உடுத்திக் கொண்டருளிய திருக் கோலம்.

27. பைரவம்: அந்தகாசுரனைச் சூலத்தில் குத்திக் கோத்துக்கொள்ளவும் அவன் ஆண்டிருந்தபடியே செய்த வழி பாட்டைக் கண்டு மகிழ்ந்து அவனைக் கணநாதனாக்கி அருள் செய்த திருக்கோலம்.

28. கலியாணசுந்தரம்: இறைவன் உமையம்மையாரை மணந்த திருக்கோலம்.

29. வடுகம்: துந்துபியின் மகனாகிய முண்டாசுரனை அழித்த வடுகராகிய திருக்கோலம்.

30. கிராதம்: அருச்சுனனுக்கு அருள் செய்ய வேடுவராகிய திருக்கோலம்.

31. சுந்தரவிருஷபமூர்த்தி: அழகிய இடபவடிவமான திருமால் மீது அமர்ந்து செலுத்தும் திருக்கோலம்.

32. விஷாபஹரணம்: திருப்பாற்கடலில் தோன்றிய ஆலகாலம் என்னும் நஞ்சை உண்டு நீலகண்டராகிய திருக்கோலம்.

33. சுவராபக்நம்: கிருட்டிணன் வாணாசுரன் மேல் ஏவிய சீதசுரம் அழிய உஷ்ணசுரத்தை ஏவிய திருக்கோலம். இது மூன்று திருமுகம், நான்கு கை, ஒன்பது விழி, மூன்று திருவடிகளோடு கூடியது.

34. துகளறுக்ஷேத்திரபாலகம்: நீர்ப் பிரளயத்தால் அழிந்து போன இவ்வுலகத்தை மீண்டும் படைத்துக் காப்பாற்றும் குற்றமற்ற திருக்கோலம்.

35. தொல்கருடாந்திகம்: திருமால் சிவனாரைத் தொழும் அளவில் திரும்பிவர நேரமாகி விட்டதால் சிவனாரைப் பழித்த கருடனை நந்தியெம்பெருமான் விடும் மூச்சுக்காற்றால் பஞ்சு போல் அலைந்து நொந்தழியச் செய்யும் திருக்கோலம்.

36. முகலிங்கம்: இலிங்கத்திலேயே புன்சிரிப்புக் கொண்ட திருமுகம் விளங்கும் திருக்கோலம். இது 5, 4, 3, 2, 1 இவ்வகைய முக வேறுபாடுகளைக் கொண்டிருக்கும்.

37. துங்ககங்காதரம்: தேவி ஒரு காலத்தில் திருவிளையாட்டாகச் சிவபிரானின் இரு கண்களையும் தம் திருக்

கைகளால் மூட அதனுல் உலகம் எங்கும் இருள் பரவி உயிர்கள் துன்புற்றன. அத்துன்பத்தைப் போக்க வேண்டி பரமன் தனது நெற்றிக் கண்ணைத் திறந்தான். அதனுல் உலகம் முன் போல் செயல்பட்டது. அது கண்டு தேவியும் தன் கைகளை எடுத்தனள். அப்போது அவள் கை நகக்கால்கள் தோறும் வியர்வை பெருகியது. அது பெருவெள்ளமாய்ப் பெருகி உலகங்களை எல்லாம் மூடி வருதலைக்கண்ட பெருமான் உயிர்களைக் காக்க வேண்டி அந்த வெள்ளமாகிய கங்கையினைத் தம் சடைமுடியில் தாங்கினுர். தூய்மையான அந்தக் கங்கையை அவ்வாறு தாங்கிய திருகோலம்.

38. கங்கா விசர்ஜனம்: முன் கூறியவாறு தாங்கிய கங்கையை இறைவன் திருமால், பிரமன், இந்திரன் முதலியோர் வேண்டுகோளுக்கு இசைந்து அக்கங்கையின் சிறுசிறு பகுதிகள் அம்மூவர் உலகிலும் தங்கியிருக்க அருள் புரிந்தான். பின்னெரு காலத்தில் கங்கையைப் பூமிக்குக் கொண்டுவர வேண்டிப் பகீரதன் என்னும் அரசன் பிரமனை நோக்கித் தவமிருந்தான். பிரமன் தனது சத்தியலோகத்தில் இருக்கும் கங்கையைப் பூலோகம் செல்ல விடுத்தான். தன்னைத் தாங்குவோர் எவரும் இலர் என்ற செருக்கோடு அது பெருகி வரும் வேகத்தைத் தாங்கிச் சிவபெருமான் தமது சடைமுடியில் அதனை ஒரு திவலையாக முடிந்து கொண்டார். பின்னர் பகீரதன் வேண்டுகோட்கிணங்கிக் கங்கையைப் பூவுலகம் செல்ல விடுத்தார். அவ்வாறு விடுத்த திருக்கோலம்.

39. சுபசோமாஸ்கந்தம்: சத்தாகிய தனக்கும் சித்தாகிய இறைவிக்கும் நடுவில் ஆனந்தமாகிய முருகன் விளங்கும் மங்கலகரமான சச்சிதானந்தத் திருக்கோலம்.

40. சூரஸிம்ஹாரி: வீரத்தன்மை கூடிய நரசிங்கமூர்த்தி இரணியனைக் கொன்று அவன் குருதியைக் குடித்து வெறி மிகுந்து உலகங்களை அழிக்க முயலப் பரமசிவனுனவர் சரப வடிவம் தாங்கி நரசிங்கத்தின் தோலைக் கிழித்த திருக்கோலம்.

41. கமாரி: நெற்றிக்கண்ணினுல் மன்மதனை எரித்த திருக்கோலம்.

42. யமாந்தகம்: மார்க்கண்டேய முனிவருக்காக வந்த காலனை இடது திருவடியால் உதைத்த திருக்கோலம்.

43. சுசிமாணவபாவம்: முருகனே குருமார்களுக்கெல்லாம் தலைமைக்குரு என்பதை உலகம் உணர்ந்து உய்ய வேண்டி முருகனிடம் மாணுக்கர் கோலத்தில் நின்று உபதேசம் பெற்ற திருக்கோலம்.

44. சுபகர பிரார்த்தனை மூர்த்தம்: வேண்டுகோளை நிறைவு செய்யும் மங்கலமான திருக்கோலம்.

(தாருக வனத்துக்குப் பிட்சாடனராய் இறைவன் எழுந்தருளியபோது மோகினியாய் உடன் வந்த திருமால் காம வயப்பட்டுத் தன்னைத் தழுவுமாறு இறைவனை வேண்ட இஞ்ஞான்று யாம் கொண்ட எமது திருமேனி யாராலும் தாங்குதற்கு அரிது. எனவே உனது விருப்பத்தை மற்ருேர் சமயத்தில் நிறைவேற்றுவோம் என்று அருளினுன் இறைவன்.)

45. நறுந்திரிபுராந்தகம்: முப்புரத்தை எரித்த நறிய திருக்கோலம்.

(முப்புரம் ஆவது மும்மல காரியம் என்பது திருமந்திரம். அம்மலத்தின் ஒழிவு கருதி நறும் திரிபுராந்தகம் என்ருர்)

46. சுரர் பரசும் சுமுக கங்காளம்: தேவர்கள் வழிபடும் நலமார்ந்த கங்காளம் அணிந்த திருக்கோலம்.

(மகாபலியிடம் மூன்றடி மண்பெற்றுப் பேருருவம் கொண்டு தருக்குற்ற வாமன அவதார விட்டுணுவைத் தமது வச்சிரதண்டத்தால் அடித்து முதுகெலும்பைப் பிடுங்கிக் கையில் அணிந்தார் இறைவன் என்பது வரலாறு. இஃது அத்துணைச் சிறப்புடைத்தன்று. சங்கார காலத்தில் பிரம்ம விட்டுணுக்களுடைய கங்காளம் தரிப்பான். இஃதே கங்காள மாகும். அதனுலன்ருே திருவாதவூர்ப் பெருமான்

நங்காயி தென்னதவ நரம்போடெ லும்பணிந்து
கங்காளந் தோள்மேலே காதலித்தான் காணேடீ
கங்காள மாமாகேள் காலாந்த ரத்திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ.

என்று அறிவுறுத்தியுள்ளார்.)

47. இரக்த பிக்ஷைப் பிரதானம்: தேவர்களின் குருதியைப் பிரமனுடைய தலையோட்டில் பிச்சையாக ஏற்கும் திருக்கோலம்.

(ஆணவத்தால் இகழ்ந்த பிரமாவின் தலையைச் சிவனார் ஆணைப்படி வைரவர் கொய்து அந்தத் தலையோட்டில் எல்லாத் தேவர்களின் குருதியையும் பிச்சையாக ஏற்றுக் குருதி கொடுத்ததால் இறந்த தேவர்களை மீண்டும் உயிர்பெறச் செய்து வைகுந்தம் அடைந்தார். அங்குத் தன்னை எதிர்த்த விடுவசேனனைச் சூலத்தால் குத்திக் கோத்துக் கொண்டு வருதலை உணர்ந்த திருமால் பயந்து அவரை வழிபட்டு வைரவரின் ஆணைப்படி குருதிப் பிச்சை தரத் தன் நெற்றியைக் கீறிக் குருதியைக் கபாலத்தில் வழியச்செய்தார். கபாலம் பாதியும் நிரம்பவில்லை. விட்டுணுவோ உயிர் நீங்கி விழுந்தார். அதுகண்ட சீதேவி, பூதேவி இருவரும் வைரவக் கடவுளின் திருவடியில் விழுந்து விண்ணப்பிக்க அப்பெருமான் நாராயணருக்கு உயிர்ப்பிச்சை அளித்து எழச்செய்தார். பிறகு நாராயணரின் வேண்டுகோளுக்கு இசைந்து சூலத்தில் தொங்கிக்கிடந்த விடுவசேனனையும் உயிர்பெறச் செய்திருளினார்)

48. இருஞ்சுடரே சுடர் கவுரீ வரப்பிரதம்: இறைவி பேரொளி வீசும் கௌரியாக விரும்பியவண்ணம் வரம் அளித்த திருக்கோலம்.

49. மஹாபாசுபத சொரூபம்: அருச்சுனனுக்குப் பாசுபதப்படை அருளிய திருக்கோலம்.

50. அணிதோன்று புஜங்கலளிதம்: கருடனுக்கு அஞ்சித் தன்னைப் புகலடைந்த பாம்புகளை (அவைகள் "ஏன் கருடா!

சுகமா?'' என்று எக்களிப்புடன் வினவும் ஆற்றல் கொள்ளு மாறு) அணியாகக்கொண்ட திருக்கோலம்.

51. ரிஷபாந்திகம்: அறக்கடவுளை விடையாகக் கொண்டு அதன் மீது எழுந்தருளிய திருக்கோலம்.

52. தோமறுகஜயுத்தம்: தேவர்களை வருத்திய கயாசுரன் என்னும் ஆனை வடிவம் கொண்ட அரக்கனைக் காசியம்பதியில் கொன்று ஆனைத்தோலை உரித்துத் திருமேனியில் அணிந்து கொண்ட குற்றமற்ற திருக்கோலம்.

53. விந்தை விளம்பு கஜாந்திகம்: சூரபன்மன் மகனுன பானுகோபனுடன் நேரிட்ட போரில் தனது கொம்பொடிந்து துயரங்கொண்ட தெய்வயானையான ஐராவதம் திருவெண் காட்டில் வழிபட அதற்கு அருள் செய்த திருக்கோலம்.

54. வீணைதயங்கு தக்ஷிணமூர்த்தம்: தும்புரு நாரதர் முதலிய முனிவர்களுக்கு வீணையின் இலக்கணமுணர்த்தி அருளும்படி வீணைகொண்ட தென்முகக்கடவுள் திருக்கோலம்.

55. மேதக யோக விநோதமதாக விளங்கு தக்ஷிணமூர்த்தம்: யாவரும் யோகத்தின் நிலையை உணர்ந்து கொள்ள வேண்டுமென்ற பேரருளால் கொண்ட யோக தட்சிணமூர்த்தத் திருக்கோலம்.

56. விமல பிக்ஷாடனம்: தாருகவனத்துக்கு எழுந்தருளிய பிட்சாடனத் திருக்கோலம்.

57. கவலையுத்தாரணம்: தன்னை வந்தடைந்தவர்களின் இடுக்கண்களை நீக்கும் ஆபதோத்தாரணமூர்த்தம் என்னும் திருக்கோலம்.

58. வேதகணம் புகழும் விதி சிர கண்டனம்: வேதங்கள் புகழும்படி பிரமன் தலையைக் கைந்நகத்தால் கிள்ளிய திருக் கோலம்.

59. கவுரிவிலாசமந்விதம்: தேவியைத் திருவிளையாடல் காட்டி மணந்து உடன் விளங்கும் திருக்கோலம்,

60. எழிலரியர்த்தம்: திருமாலைத் தன் உருவில் பாதியாகக் கொண்ட கேசவார்த்தம் என்னும் திருக்கோலம்.

61. வீரபத்திரம்: வீரமார்த்தாண்டன் என்ற அசுரனைக் கொன்ற வீரபத்திரர் ஆகிய திருக்கோலம்.

62. திரிமூர்த்தி முப்பாதம்: மூன்று திருவடிகளோடு பிரமன் விட்டுணு உருத்திரன் மூவரும் தன்னிடத்தில் ஒடுங்க இருக்கும் திருக்கோலம்.

63. மஹாவேதாளி நடம்: காளியோடு ஆடிய நடனத் திருக்கோலம்.

64. வெருவருமேகபதத் திருவுரு: ஒரு திருவடியே கொண்டு பிரம விட்டுணுக்களைத் தன்னிடம் அடங்க வைத்திருக்கும் திருக்கோலம்.

ஆய் விளம்பறுபது நான்கும்: ஆகக் கூறப்படும் அறுபத்து நான்கு திருக்கோலங்களையும்

விலாசவளிப்புநிமித்தம் எடுத்த: திருவிளையாட்டாகத் தன் பெருமையை உயிர்கள் உணரும் பொருட்டு மேற்கொண்ட

மெய்ப்பொருள் எது அதுவே - உண்மையாகிய பரம் பொருள் எது என்பது உணர வேண்டின், அந்தப் பரம் பொருளே

விண்ணவர் மண்ணவர் கண்ணவர் யாவரும்: தேவர்களும் பூவுலகத்தவர்களும் ஏனை உலகத்தில் உள்ள மற்ற யாவரும்

வீடருளாய் எனவே: எங்கட்குப் பேரின்ப நிலையை அருளுவாயாக என்று

வந்தனை புரிய: தொழுது புகழ

இருந்துளன் நீ என: விளங்குகின்ற முருகனாகிய நீயே என்று

வண்டமிழான்: வளம் நிறைந்த தமிழ் மொழியாலும்

மனசான்: மனத்தாலும்

வாழ்த்தி வணங்கு: நின் சீரை வாயால் வாழ்த்தி அன்பு நிறைந்த மனங்கொண்டு மெய்யால் வணங்குகின்ற

எனே ஆள: என்னே ஆட்கொள்ளும்படி

என் இருதய மலரில் எழுந்தருளாய்: என் உள்ளமாகிய தாமரை மலரில் எழுந்தருளுவாயாக

(இவ்வாறு வேண்டுகின்ற அடிகளார் பின்வருமாறு மயிலேறும் பெருமானைத் துதிக்கின்ருர்)

மந்திரநாயக: வேதங்களில் விளங்குகின்ற முழுமுதற் பொருளே

தந்திரநாயக: ஆகமங்களில் விளங்குகின்ற முழுமுதற் பொருளே

மங்கள நாயக: மங்களங்களுக்கெல்லாம் மங்களமாகிய வீடு பேற்றின்பத்தின் தலேவனே

ஓம் மய: பிரணவத் திருமேனி கொண்டவனே

தவரீசுர: தவம் செய்வார் கருத்தில் திகழும் இறைவனே

பரம: பெரியவற்றுக்கெல்லாம் பெரியவனே

குஹேசுர: உயிர்களின் இருதயமாகிய குகையில் எழுந்தருளியுள்ள கடவுளே

வசனமஞதீத: மனத்தையும் மொழியையும் கடந்த நிலேயில் விளங்குபவனே

வரத: வேண்டும் அடியர் புலவர் வேண்ட அரியபொருளே வேண்டும் அளவில் உதவுபவனே

க்ருபாகர: அருளே உருவமானவனே

குமர: என்றும் இளேயவனே

பராபர: பராபரப் பொருளே

வரைவறு ஷாட்குண்ய வஸ்துவென்: எல்லேயில்லாத ஆறு குணங்களேயுடைய பகவன் என்னும் பொருளாயிருப்பவன் எனப்படும்

அற்புத சத்தியவித்தக: சச்சிதானந்தப் பெருமானே

மரணமொடயனமிலா வானவ: பிறப்பும் இறப்பும் இல்லாத தேவனே

ஞானநபோமணியே: ஞானவெளி (சிதாகாசம்)யில் விளங்கும் மாணிக்கமே

திருமாலயனறியாவோர் மாமலையின் பெயரான் குருநாத: பிரமனும் விட்டுணுவும் அடிமுடி காணமுடியாத மலையின் பெயரைக் கொண்ட அருணகிரிநாதரின் குருநாதனே

என் மருடெறுமாமுனியே: எனது அறியாமையாகிய இருளை அழிக்கும் பெருமை பொருந்திய ஆசிரியப் பெருமானே.

திருச்சிற்றம்பலம்

உ

ஸ்ரீ சிவாப்யாம் நம:

# சிவபிரானின் ஸம்ஹார க்ருத்ய விளக்கம்

தர்மக்ஞ, சிரோமணி, வித்யாவாசஸ்பதி

பிரம்மஸ்ரீ மாயூரம் ராமநாத தீக்ஷிதர்

பிராணிகளனைத்தும் சுகத்தையே விரும்புகின்றன. துக்கத்தைக் கொஞ்சமேனும் விரும்புவதில்லை. ஆனால் அதிகமாய் வருவது துக்கமேயாகும். தீமையின் பயன் துக்கம், நன்மையின் பயன் சுகம். தீமை அதிகமானதால் துக்கம் அதிகம் வருகிறது. புலன்களைக் கொண்டு அனுபவிக்கும் சுக துக்கம் இவ்விதமுள்ளது. ஆனால் ஆத்மா சுகரூபமானது. அந்த சுகத்தையனுபவிக்க வினைதேவையில்லை. அது சுஷுப்தி என்னும் உறக்க நிலையில் திரைகள் விலகியபிறகு தானாகத் தோன்றுகிறது. ஆத்ம ஸ்வரூபத்தை *ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்று சரீரங்கள் மறைக்கின்றன. ஸ்வப்னத்தில் இரு சரீரங்களும் மறைகின்றன. மனம் மட்டும் இருந்து

---

*ஸ்தூல சரீரம் என்பது கை கால்களுடன் விளங்கும் உடல். ஸூக்ஷ்மம் என்பது, கண்-காது முதலிய ஞானேந்திரியங்கள் ஐந்து, கை-கால் முதலிய கர்மேந்திரியங்கள் ஐந்து ப்ராணன்-அபானன் முதலிய ப்ராணன்கள் ஐந்து, மனம், புத்தி ஆக 17-ம் கொண்டது. காரண சரீரம் என்பது அஞ்ஞானம் அவித்தை. இந்த மூன்று சரீரங்களும் ஜாக்ரத் என்னும் விழிப்பு நிலையில் மறைக்கின்றன,

ஸ்வப்னப் பொருள்களை விளக்குகிறது. ஸுஷுப்தியில் மனமும் லயித்து விடுகிறது. அஞ்ஞானம், அவித்யை என்னும் காரண சரீரம் மட்டும் உளது. அது வெண்மையான மெல்லிய துணி போல் கொஞ்சம் மறைக்கிறது. ஆனாலும் ஆத்மசுகம் விளங்குகிறது. அதுவே பகல் முழுவதும் பல துன்பங்களை அனுபவித்த சரீரத்திற்கும் புலன்களுக்கும் இளைப்பாறும் சமயம். அந்த சுகானுபவம் ஒரு நாளில் மிகக்குறைவாக ஏற்படுகிறது. இவ்விதம் உலகத்தை மறந்து தூங்கினால் மறு நாள் புலன்கள் சுறுசுறுப்பாக உழைக்கின்றன. இல்லாவிடில் வேலை செய்ய முடிவதில்லை. இதனால் ஆத்மசுகம் ஒன்றே உண்மையான சுகம் என்று தெரிகிறது. அது விளங்குவதற்கு இடையூருகவுள்ள திரைகள் விலக வேண்டும். இதைச் சாந்தோக்ய உபநிடதம், ஸுஷுப்தி காலத்தில் ஜீவன் 'ஸவம்' (தனது) ரூபத்தையடைகிறன், "ஸ்வம் ஹ்யபீதோ பவதி" என்று கூறுகிறது. இந்தச் சுகத்தை ஒவ்வொரு நாளும் மிக ஸ்வல்ப காலம் அனுபவிக்கின்ரேம். இதை நீண்ட காலம் அனுபவித்தால் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும். இந்த மகிழ்ச்சியைக் கொடுக்க யாராலும் முடியாது. பரமேச்வரன் ஒருவனால் தான் முடியும் என்பதை விளக்குவது இந்த வசனம்.

विश्रान्त्यै भवतापखिन्नमनसां पाकायकर्मावले: ।
मायायाबलसंभवाय कुरुते शंभुर्महासंहृतिम् ।।

விச்ராந்த்யை பவதார கின்னமனஸாம் பாகாய கர்மாவலே: |
மாயாயா பலஸம்பவாய குருதே சம்புர்மஹாஸம்ஹ்ருதிம் ||

சிவபெருமானை உலகத்தந்தையாகக் கூறுகிறார்கள். 'ஸோம: ஜநிதா திவ: ஜநிதா ப்ருதிவ்யா:' (வேதம்) 'ஜகத: பிதரௌ வந்தே பார்வதீ பரமேச்வரௌ' (காளிதாஸன்). சில சமயம் தாயுமாகிறார் (தாயுமானவர்). மக்களின் துன்பத்தைப் போக்கி இன்பத்தையளிப்பது தந்தையின் ஸ்வபாவம். உலகம் தோன்றிய நாள் முதல் பிறந்து பிறந்து பலவித துன்பத்தையடையும் பிராணிகளிடம் தந்தையான சிவபிரா

னுக்குக் கருணையேற்பட்டது. துன்பத்தை விலக்கி இன்பத்தை அளிக்க விரும்பினார். இன்பம் ஜீவனின் ஸ்வரூபம். அதை மறைக்கிறது சரீரம். சரீரத்தை அழித்தால் இன்பம் தானாக விளங்கும் என்று ஸம்ஹார காலத்தில் பிராணிகளின் சரீரத்தை அழிக்கின்றார். குல்ம வியாதியினால் சாப்பிட முடியாமல், தூங்க முடியாமல், வேலை செய்ய முடியாமல் துன்பப்படும் மனிதனை அறுவை சிகிச்சை செய்து வியாதியை விலக்கும் வைத்தியனைப்போல துக்ககரமான சரீரத்தை விலக்குகிறார். அதனால் அவருக்கு, ''ருத்ரன்'' (ருத்-துக்கம்; த்ராவயதி-போக்கடிக்கிறான்), அதாவது துன்பத்தைப் போக்கடிப்பவன் என்று பெயர். இதையறியாத மூடஜனங்கள் ருத்ரன் அழிப்பவர், அவரை சேவிக்கக் கூடாதென்று, வ்ரண சிகிச்சை செய்யும் வைத்தியரை வைவது போலப் புலம்புகின்றனர். உண்மையை உணர்ந்தால் இன்பத்தைக் கொடுப்பவர் அவரே என்பது விளங்கும். அதனால் தான் ''சம்புர் மஹா ஸம்ஹ்ருதிம்'' ஸம்ஹாரம் செய்பவர் சம்பு என்று கூறுகிறது இந்த வசனம். சம் - சுகம், க்ஷேமம்; புனக்தி-அனுபவிக்கச் செய்பவர் என்பது இதன் பொருள். 'சன்னோமித்ர: சம் வருண:' என்ற உபநிஷத்தில் 'சம்' என்பதற்கும் க்ஷேமம் என்ற இதே அர்த்தம் தான்.

அதனால் ப்ரளய காலத்தில் ஸ்தூல சரீரம் இல்லை. ஸூக்ஷ்ம சரீரம் இருந்தும் சக்தியற்றது. காரண சரீரத்தினால் அதிக இடையூறு இல்லை. பிராணிகள் ஆத்ம சுகத்தையனுபவிக்கிறார்கள். இவ்விதம் இளைப்பாறினால் தான் மறு சிருஷ்டியில் பிறந்து பிறந்து வேலை செய்ய முடியும். பிறப்பிறப்பு என்ற வியாதி அவரவர் வினையினால் அநாதியாய் வருகிறது. அதைப் போக்க சிவப்ரஸாதத்தினால் தத்வ ஞானத்தையடைய வேண்டும், இதையடைவதற்காகவே வேதம், சாஸ்திரம், புராணம், இதிஹாஸம், ஆகமம் எல்லாம் ஏற்பட்டிருக்கின்றன. அது பல ஜன்மாக்களில் புண்யத்தினால் கிடைக்க வேண்டும். இவ்விதம் பிராணிகள் அனைத்துக்கும் ஆத்ம சுகத்தை அளிப்பதற்காக ஸ்தூல ப்ரபஞ்சத்தை அழிக்கிறார்

என்பது 'விச்ராந்த்யை பவதாபகிந்நமனஸாம்' என்ற முதலடி யின் கருத்து.

மேலும் சுகம் துக்கம் இரண்டும் புண்யம் பாபம் இவற்றின் பயனுக வருகிறது என்று கூறினேம். புண்யம், பாபம் இவை செய்தவுடன் பயனையளிப்பதில்லை. பரிபாகமடைந்து தான் பயனளிக்கும். அதனுலேயே முன் ஜன்மத்தின் வினை என்று கூறுகிருேம். மனுஸ்ம்ருதியிலும் புண்யமோ பாபமோ தன்னிடத்தில் பயனையளிக்காவிட்டால் பிள்ளையிடமும் அதுவும் முடியாவிட்டால் பேரனிடமும் பயனையளிக்கும் என்று கூறுகிறது.

இதனுல் வெகு நாட்கள் பாகமடைய வேண்டுமென்று தெரிகிறது. பிராணிகளின் புண்ய பாபங்கள் பரிபாகத்தை அடையவும் உலகத்தை மறைக்கிருர் என இரண்டாவது அடி விளக்குகிறது. ''பாகாய கர்மாவலே:''.

மேலும், பரசிவம் தனது மாயா சக்தியினுல் உலகத்தை உண்டுபண்ணி காப்பாற்றுகிருர் என்பது சாஸ்திரங்கள் கூறும் உண்மை. ஜடப்பொருளானுலும் வெகுநாள் வேலை செய்தால் தேய்ந்துவிடும். மறுபடி பழுது பார்த்து உபயோகப்படுத்துகிருேம். அதுபோல வேலையே இல்லாமல் கொஞ்ச நாள் இருந்தால் மறு ஸ்ருஷ்டியில் மாயை நன்ருக வேலை செய்யும் என்றும் ப்ரளயம் செய்கிருர் என்பதை மூன்ருவது அடி விளக்குகிறது. ''மாயாயா பலஸம்பவாய குருதே சம்புர் மஹாஸம்ஹ்ருதிம்''.

இவ்விதம் அரியபெரிய வேறு யாரும் செய்ய முடியாத காரியத்தை உலக நன்மைக்காகச் செய்யும் ஸ்வதந்த்ர புருஷனை பரமேச்வரனையும் அவருடைய அற்புத லீலையையும் அறிவதற்கு அனேக ஜன்மாவின் ஸுக்ருதம் வேண்டும். அத்தகைய ஸுக்ருதமுள்ளவர் அறிந்து அவரதருளைப் பெறுமாறு வேண்டுகிறேன்.

சிவம்,

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# பாகவதத்தில் பரமேச்வரன் பெருமை

ஞானபாஸ்கர, சிவோத்கர்ஷவர்ஷக
பிரம்மஸ்ரீ P. N. நாராயண சாஸ்திரிகள்

ஸர்வமங்களையான அம்பிகையுடன் கூடிய ஈச்வரன் எப்பொழுதும் மங்களத்தையே அருள்வார். அவருடைய புகழை பல புராணங்கள் வேதங்கள் சிறப்பாய்ப் பேசுகின்றன. சிவபுராணங்களில் பேசப்படுவது அதிசயமல்ல. பகவான் கிருஷ்ணனையே போற்றவந்த ஸ்ரீமத் பாகவதத்தில், பரமேச்வரன் பெருமை எவ்வாறு நிகரற்று பேசப்படுகிறது என்று பார்த்தால் ஆச்சர்யமாகவே இருக்கும். இதனுல் கிடைக்கும் மகிழ்ச்சியை சிவபக்தர்கள் அனைவரும் பெற்று மகிழலாம் என்று நினைத்து ஸ்ரீ ஆங்கீரஸ சர்மா அவர்களின் அபிப்ராயப்படி ஸ்ரீமத் பாகவதத்தை ஆராய்ச்சி செய்ததில் சிவபாரம்யம் எவ்வாறு நிலைநிறுத்தப் பெற்றிருக்கிறது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்குகிறது. அந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டு முதல் மூன்று ஸ்கந்தங்களில் கிடைத்த சுலோகங்களையும்-அத்யாயம், ச்லோகம், ச்லோகம் எண்ணிக்கையுடன் ஸ்ரீதரர் எழுதியுள்ள வ்யாக்யானத்தையும் குறிப்பிட்டு என் சிற்றறிவிற்கெட்டியவரை இந்த கட்டுரை எழுத ஆரம்பித்துள்ளேன். வாசகர்களுக்கு இது கொஞ்சமாவது பயன்படுமேயானுல் மிகவும் மகிழ்ச்சி உள்ளவனுய் இருப்பேன்.

முதல் ஸ்கந்தம் 1 வது ச்லோகம்:-

ஜன்மாத்யஸ்ய என்கிற சுலோகத்திற்கு வ்யாக்யாநம் எழுதியுள்ள ஸ்ரீதரர் ஸத்யம்பரம் என்பதில் பரம் என்கிற சொல்லுக்கு ஈச்வரம்தீமஹி என்று பரமேச்வரனை தியானித்தே வ்யாக்யாநம் தொடங்குகிறார்.

2வது சுலோகத்திலும் பாகவத ப்ரதிபாத்யன் ஈச்வரனே என்று கூறுகிறார்.

परैरीश्वरः सद्योहृद्यवरुद्धयते

இதனால் ஈச்வரன் ஹ்ருதயத்தில் குடி கொண்டு விடுகிறார்.

18 வது ச்லோகம்.

लीलाविदधतस्स्वैरमीश्वरस्यात्ममायया

பரமேச்வரனுடைய மாயையினால் ஆட்கொள்ளப்பட்டு மஹா விஷ்ணு பல அவதாரங்களைச் செய்கிறார்.

4 வது அத்யாயம் 12 வது சுலோகம்

शिवायलोकस्य भवाय भूतये

ஐச்வர்யமோ, மோக்ஷமோ, கிடைக்க வேண்டுமேயானால் பவன், சிவன் என்று போற்றப்படுகிற ஈச்வரனையே அடைய வேண்டும்.

5வது அத்யாயம் 32வது ச்லோகம்

यदीश्वरे भगवति कर्मब्रह्मणिभावितम्

பகவானாகிய ஈச்வரனிடத்தில், கர்ம ப்ரம்ம, இன்னும் அதிகாரி பேதப்படி கிடைக்கும்.

6வது அத்யாயம் 7வது ச்லோகம்

ईशस्य हि वशे लोकः योषादारुमयी यथा

பரமேச்வரன் வசமே இந்த உலகம், பெண் உருவான பொம்மையை ஆட்டிவைப்பவனைப் போல

7வது அத்யாயம் 18வது ச்லோகம்

परात्रवत्प्राणपरीप्सुरुर्व्या

यावद्गमंरुद्रभयाद्यथार्कः ॥

நான்முகன் தானே படைத்த பெண்ணிடம் ஆசைப்பட்டு துரத்திக் கொண்டு வரும் பொழுது தர்மரக்ஷகரான ருத்ர மூர்த்தியிடம் பயந்து தப்புக்காரியத்திலிருந்து ஓடிவிட்டார்.

तथामहिमानमीश्वरं स्त्रैणादिरूपं मेनिरे ।

த்வாரகா நகர ஸ்த்ரீகள் க்ருஷ்ணனை பெண்கள் மத்தியிலிருந்தாலும் எங்கும் ஈச்வரன் உருவத்திலேயே கண்டார்கள். (ஸ்ரீதரியபாஷ்யம்)

12 வது அத்யாயம், 23 வது ச்லோகம்

प्रसादेगिरिशोपमः

ஜீவர்களுக்கு அருள் புரிவதில் பரமேச்வரனுக்கு நிகர் ஒருவருமில்லை.

13 வது அத்யாயம் 43வது ச்லோகம்

यदीश्वरवशंजगत्

இந்த உலகம் ஈச்வரனுக்கு அடங்கியது. படைப்பதும் அழித்தலும் அவராலேயே செய்யப்படுகிறது.

2 வது ஸ்கந்தம் 1வது அத்யாயம் 35வது ச்லோகம்.

सर्वात्मनोन्तःकरणंगिरित्रम्

எங்கும் நிறைந்த ஆத்ம வஸ்துவை அந்தः கரணத்தில் ஈச்வரனுய்க் காண்பர்.

அத்யாயம் 2, 14 வது ச்லோகம்

विश्वेश्वरे द्रष्टरि भक्तियोगः

உலகத்திற்கு ஸாக்ஷியாயிருக்கிற ஈச்வரனிடத்தில் பக்தி செலுத்துவதே சிறந்தது.

மத்தயானைமறு கவ்வுரிபோர்த்ததோர் மாயம்மிதுவென்னப்
பித்தர்போலும்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

இவ்வாறு பத்துப்பாடல்களில் இறைவனைப் பற்றிய விவரங்களை இன்னிசையுடன் பாடிய சம்பந்தர் கடைசிப் பாடலான பதினொன்ருவதைத் திருக்கடைப்பாகப் பாடியுள்ளார். அதில் ஒருமைப்பட்ட மனத்துடன், மறைகளில் வல்ல பிரமனுல் இறைவர் பூசையின் பொருட்டு உண்டாக்கப்பட்ட தாமரை மலர்கள் நிறைந்த விசாலமான பிரமதீர்த்தம் எனும் பொய்கையையுடைய பிரமாபுரத்தில் விரும்பியிருக்கும் சிவனை சிவநெறி காட்டும் ஞானசம்பந்தரால் ஆக்கப்பட்ட தமிழ்ப் பாக்களால் ஓதவல்லவர்கள் தங்கள் பழவினைகளை போக்கிக் கொள்ளுதல் எளிதாம். இப்பாக்களால் சிவபிரானைத் துதித்தலின் பலன் கூறியவாறு.

அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய
பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தன்னுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தல்எளிதாமே.

திருஞானசம்பந்தப் பிள்ளையார் தமது இளம்பருவத்தில் நிகழ்ந்த இவ்வற்புத நிகழ்ச்சியை பின்னெரு காலத்தில் நினைத்து போற்றும் நிலையில், தாம் பாடிய திருப்பதிகமொன்றில் குறிப்பிடுகிருர். இவர் தலயாத்திரையாகப் பல தலங்களையும் பாடிச்சென்று வந்த காலை மதுரையம்பதியில் தங்கிய வேளையில் இவரது தந்தையார், இவரைக் காணும்பொருட்டு மதுரையம்பதிக்கு எழுந்தருளுகின்ருர். தந்தையாரைக்கண்ட பிள்ளையார், சீர்காழிப்பதியில் எழுந்தருளிய இறைவனது நலத்தினை, 'மண்ணில் நல்ல வண்ணம்' எனும் பதிகத்தைப் பாடி வினவும் விதமாக உள்ளது, அப்பதிகத்தின் இரண்டாவது பாடல்,

"போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல்லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்

காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே''

அழகிய பொற்கிண்ணத்திலே ஊட்டியருளிய பாலடிசில் பொல்லாதென்று கூறித் தந்தையார் வெகுளும்படி என்னை ஆட்கொண்டருளிய பிரமபுரத்து இறைவனுகிய பெருந்தகை பிராட்டியுடன், கழுமல வளநகரில் எழுந்தருளியிருக்கின்றதா? எனத் தன் தந்தையை நோக்கி கேட்பதாக அமைந்தது.

அறியாப்பருவத்தில் இறைவன் அம்மையப்பனுக எழுந்தருளி வந்து தமக்கு ஞானப்பாலளித்து ஆட்கொண்டமையும் அதனை உணராத தந்தை வெகுண்டு உரைத்த அழகிய நிகழ்ச்சியினையும் பிள்ளையார் மேற்கண்ட பாடலில் தெளிவாகக் கூறுதல் கண்டு, தெளிந்து, அக்காழிவேந்தன் காட்டிய வழியில், ஐந்தெழுத்தை மனதில் நிறுத்தி, அம்மையப்பனை எம்பெருமானை அடைய, அவனருளைப் பெற, நல்வழி அவன் நாமத்தைச் சிந்தை செய்வது என்பதனைக் கீழ்கண்ட அவரது பாடல் தெள்ளென விளக்குகிறது.

''காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக்கு உய்ப்பது
வேத நான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே.''

மனம் இரங்கி அன்புடன் சிவபிரானை நினைந்து கண்ணில் நீர் மல்க, ரிக், யஜுர், சாம, அதர்வண வேதமான நான்கிலும் கூறப்பட்டதான உண்மைப் பொருள் எனப்பட்டதான ஐந்து எழுத்தான 'நமச்சிவாய' எனும் நாமத்தை எவர்கள் ஓதுகிறுர்களோ, அவர்களை அந்நாமம், நல்ல நெறிக்கு அழைத்து செல்ல வழிகாட்டியாக இருக்கும்.

இறைவனது திருவருட் பெருமையினை உலக மக்கள் உணர்ந்து போற்றும்படி வியப்புடைய அருட்செயல்கள் பல நிகழும் வண்ணம் பாடப்பெற்ற திருப்பதிகங்களை அற்புதத்

3வது அத்யாயம் ச்லோகம் 7

विद्याकामस्तुगिरिशं दाम्पत्यर्थं उमांसतीं

பிரும்ம வித்யை அடைய ஈச்வரனையும், தாம்பத்ய ஒற்றுமைக்கு ஸதீதேவியான உமையையும் அடைய வேண்டும்.

6 வது அத்யாயம், ச்லோகம் 27

तमेवपुरुषं यज्ञं तेनैवायजमीश्वरम्

இந்த திரவியங்களால் பரமேச்வரனைக் குறித்து யாகம் செய்தேன்.

7வது அத்தியாயம், ச்லோகம் 24

मार्गं सपद्यरिपुरं हरवद्दिधक्षोः

முப்புரமெரி செய்த ஹரனைப்போல, என்று ஈச்வர சக்தி பெற்றே விஷ்ணுவும் சத்ருஜயம் பெறுகிறார்.

3வது ஸ்கந்தம் 1வது அத்யாயம் 38வது ச்லோகம்.

मायाकिरातो गिरिशस्तुतोष

அர்ஜுனன் தவத்தால் வேட உருவம் பூண்ட பரமேச்வரன் த்ருப்தியடைந்தார். (க்ருஷ்ணன் பக்கத்திலேயே இருந்தாலும் ஈச்வர அனுக்ரஹம் இல்லாது வெற்றி பெற முடியாது).

4வது அத்யாயம் 25வது ச்லோகம்

ज्ञानं परं स्वात्मरहः प्रकाशं यदाह योगेश्वर ईश्वरस्ते

ஆத்மாவை உள்ளபடி அறிவதற்கு ஞானமே முக்ய ஸாதனம். ஞானத்திற்கு அதிபதி ஈச்வரன்

(ईश्वरात् ज्ञानमन्विच्छेत्)

என்கிற வசனப்படி ஈச்வரனால் தெரிந்து கொண்ட கிருஷ்ணன் உனக்கு எதைச்சொன்னார் என்று விதுரன் கேள்வி—

அத்யாயம் 6 ச்லோகம் 1—2.

निशाम्यगतिमीश्वरः देवींबिभ्रच्छक्तिमुरुक्रमः

முக்காலத்திலுமுள்ள ஈச்வரன் சக்தியான தேவியை தன்னுடன் கொண்டே படைப்புத் தொழிலை நடத்துகிருர்.

7வது அத்யாயம் 9வது ச்லோகம்

ईश्वरस्य विमुक्तस्य कार्पण्यमुतबन्धनम्

எப்பொழுதும் முக்தனுன ஈச்வரனுக்கு கார்ப்பண்யம் முதலிய தோஷங்கள் ஒட்டாது

அத்யாயம் 23 – ச்லோகம் -1

भवानीवभवं प्रभुं

பவாநியான உலகத்தாய் ப்ரபுவான ஈச்வரனை ஆராதிப்பது போல என்று சிவ:பந்தா = சிவாயந: என்று எந்த இடங்களில் ஜனங்கள் க்ஷேமமாயிருக்க வேண்டுமோ அங்கு ஈச்வரன் அனுக்ரஹம் அவச்யமானது, என்று மைத்ரேயர் விதுரருக்கு சொல்லுகிருர்.

24 அத்யாயம் ச்லோகம் –3

श्रद्धयाचेश्वरं भज

ஈச்வரனை சிரத்தையுடன் ஆராதிக்க வேண்டும்.

அவ்வாறு தேவஹூதி அம்மாள் ஈச்வராராதனம் பண்ணியே, கபிலவாஸுதேவரைபுத்ரனுக அடைந்தாள்.

25வது ச்லோகம்

ईश्वरोवै भवान् किल

நீங்கள் பரமேச்வரனுகவே எனக்குத் தெரிகிறீர்கள்

प्रधानपुरुषेश्वरात्

எல்லாவற்றிற்கும் மேலான ஈச்வரனிடமிருந்தே இவை உண்டாயின.

சுபம்

உ

ஸ்ரீ சித்ஸபேசாய மங்களம்

# சிவ பூஜனம்

சது: சாஸ்த்ர சிரோமணி, பண்டிதராஜ,
ஸோம. ஸேது தீக்ஷிதர்
சிதம்பரம்.

சிவபிரானுடைய உயர்வைத் தெளிவுற உலகமக்களுக்கு வெளியிட அமைந்துள்ள ஹிந்து மத சங்கர மடங்களும் தமது ஸ்ரீமுகத்தில் ஸ்ரீ நாராயண ஸ்ம்ருதி என்றே குறிப்பிடுகின்றன. இதைக் கருதி 1881-ல் திருநெல்வேலி அக்ரஹாரத்தில் ஸ்ரீ முத்தய்யரால் க்ரந்தலிபியில் ''யதி தர்ம ப்ரபோதம்'' என்னும் நூல் வெளியிடப்பட்டது. அதில் ''சிவஸ்ம்ருதி'' என்றும், சந்நியாசிகளின் தர்மங்களை எடுத்துக் கூறும் இடங்கள் யாவற்றிலும் சிவ நாமாக்களையே பயன்படுத்தியுமுள்ளது போற்றத் தக்கதாகும். அப்புத்தகம் கிடைப்பது அரிதாக விட்டதைக் கருதி 30-6-71-ல் சந்நியாச ஆச்ரமம் ஏற்கும் சீரிய நோக்குடன் எமது பூர்வாச்ரம பிதாவும், ஆசாரியர்களுமான சாஸ்த்ராசாரிய பண்டிதராஜ, ராஜா ஸோமசேகர தீக்ஷிதர் அவர்கள் தன் சுய செலவிலேயே மீண்டும் இப்புத்தகத்தை தேவநாகரி லிபியில் வெளியிட்டார்கள். 1974-ல் சந்நியாச ஆச்ரமம் ஏற்று ஸோமசேகரேந்த்ர ஸரஸ்வதி சுவாமிகள் என்னும் பெயருடன் விளங்கினார்கள். அவ்வாண்டு ஆவணி மாதம் சுக்ல திருதியையில் சித்தி அடைந்தார்கள். அதற்கு எங்கள் தீக்ஷித குலத்திலேயே இந்தத் தலைமுறையில் சந்நியாசம் ஏற்றவர்கள் இவர்கள்தான் என்று கருதி ஸ்ரீ நடராஜர் கோயில் நிர்வாகிகளால் கோயில் செலவிலேயே மிகச் சிறந்த

முறையில் ஊர்வலத்துடன் மேள தாளத்துடன் ஸ்ரீ நடராஜர் கோயில் இடமான பொதுவார் தோட்டத்தில் யதி சம்ஸ்காரம் மைந்தர்களான எங்களால் இந்தப் புத்தகக்தைக் கொண்டே எல்லாம் சிவபரமாகவே கர்மாக்கள் செய்து முடிக்கப்பட்டன. பிரதி வருஷ ஆராதனமும் இம்முறைப்படியே செய்யப்பட்டு வருகிறது. இது போல் நமது ஸ்ரீமான் சிவபக்த துரந்தர ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா "சிவஞான பூஜா மலர்" என்று 1981 முதல் சிவபக்தி விசேஷத்தை ஸ்மார்த்தர்களும் சைவர்களும் அறிந்துகொள்ள ஆண்டுதோறும் வெளியிட்டு வருவது பாராட்டுக்குரிய விஷயமாகும். அம்மலரின் பெயரை ஆராய்வதே இக்கட்டுரையின் கருத்தாக அமையும். முதலில் "சிவபூஜனம்" என்னும் சொல்லே ஆராய்வோம். வடமொழி யில் விளிவேற்றுமையைச் சேர்த்து எட்டு உள. எட்டு வேற்றுமைகளேயும் இந்தச் சொல்லில் பொருள் கூறலாம். 1. மங்களகரமான வழிபாடு. 2. ஏ சிவனே! உனக்கு வழிபாடு செய்ய அருள்புரிய வேண்டும். "அவன் தாள் வழிபட அவன் அருள் வேண்டும்" என்னும் முதுரையின்படி அவனருள் மிகத் தேவை. 3. சிவனே மனதில் எண்ணி வழிபாடு செய்தல். 4. மங்களகரமான மலர்களாலும், பத்திரங்களாலும், பொருள் களாலும் துதிகளாலும் பூஜனே செய்வது. 5. சிவன் பார்வதி இருவர்களேயும் சேர்ந்திருப்பதாகக் கருதி பூஜை செய்வது. 6. சிவ-பார்வதிகளிடமிருந்து வரம் பெற பூஜை செய்வது. 7. மங்களகரமான சிவனுடைய பதத்தை அடைய பூஜை செய்வது. 8. சிவனுடைய திருவடிகளில் பூஜை செய்வது.

சிதம்பர மாகாத்மியத்தில் 24-44-ல் சிவமந்திரத்தைவிட நடராஜர் உயர்வு. அவரைவிட அவருடைய திருவடி மிக மிகச்சிறந்தது என்று கூறப்பட்டுள்ளது. எனவேதான் 108 க்ரந்தங்களுக்கு கர்த்தாவான ஸ்ரீமத் அப்பைய்ய தீக்ஷிதர் அவர்கள் சிதம்பர நடராஜராஜரிடம் "77 வயதுக்கு மேல் வேறொன்றும் எனக்குத் தேவையில்லே. உனது திருவடி யையே அடைய விரும்புகிறேன்" என்று கூறிய அடுத்த க்ஷணத்திலேயே மறைந்துவிட்டார். சிவபத ஸாயுஜ்யம்

கிடைத்துவிட்டது என்பது வரலாறு என்பதை ஈண்டு ஞாபகப் படுத்திக் கொள்ளவேண்டியது அவசியமாகும்.

இச்சிவ பூஜனத்திற்கு சிரத்தையும் பக்தியும் மிக மிக அவசியமாகும். அக்னிஹோத்ராதி கர்மாக்களை செய்வது சிரம சாத்தியம். அர்ச்சனை என்பது மிகச்சுலபம். அந்த அர்ச்சனம் சிவனுக்கே செய்ய வேண்டும். வேதங்களும், ஸ்ம்ருதிகளும் சிவனே உயர்ந்தவர் என்று பாராட்டுகின்றன. இதனுடைய விரிவை ''சிவதத்துவ விவேகம்'' என்னும் ஸ்ரீமத் அப்பைய்ய தீக்ஷிதரின் நூலிலும் ''சிவோத்கர்ஷமஞ்சரி'' என்னும் ஸ்ரீமத் நீலகண்ட தீக்ஷிதரின் நூலிலும் பரக்கக் காணலாம். வைஷ்ணவ மரபிலேயே தோன்றி, சிவனையே வழிபடு தெய்வமாகக் கொண்டு வைஷ்ணவர்களோடு போராடி நெருப்புப் பாய்ச்சிய முக்காலியில் வைஷ்ணவர்கள் கோரியபடி பெருமாள் சந்நிதியிலேயே அமர்ந்து ஹரதத்தாசாரியார் அவர்கள், சிவனுடைய உயர்வைக்கொண்ட "ச்ருதி ஸூக்தி மாலா'' என்னும் நூலைப் பிரகாசப்படுத்தினார்கள். சிவனருளால் தீயும் மலராக ஆகிவிட்டது. அத்தகைய பெருமை வாய்ந்த நூலிலும் தெள்ளெனக் காணலாம். சிவனிடத்தில் பக்தி ஏற்பட வேண்டுமெனில் கோடி ஜன்மங்களில் புண்யம் செய்து இருந்தால்தான் கிடைக்கும். சிவன் ஒருவரைப் பூஜை செய்துவிட்டால் மற்றேனைய தேவதைகள் யாவரும் பூஜை செய்யப்பட்டவர்களாகக் கருதி மகிழ்ச்சியே அடைகின்றனர். எவ்வாறு மரத்தின் அடியில் நீர் விடுவதால் மரங்கள் திருப்தி அடைந்து மலர்களையும் பழங்களையும் தருகின்றனவோ, அவ்வாறு மகிழ்ந்து வரமளிக்கின்றனர் என்று வாயு ஸம்ஹிதையில் தெளிவுபடுத்தப் பட்டிருக்கின்றது. மற்றும் ஏனைய பர்த்ருஹரி, புஷ்பதந்தன், மகாகவி காளிதாஸன் முதலியவர்களும் சிவனுடைய பூஜையையே சிறப்பித்துக் கூறி இருக்கின்றனர். ஆதிசங்கராச்சாரியார் அவர்களும் சிவனுக்கே பூஜை செய்யுங்கள், மீண்டும் உங்களுக்கு பிறவி கிடையாது என்று கூறியுள்ளார். சிவனுடைய அடி முடி காணாது தவித்த பிரம்மனுக்கும், விஷ்ணுவுக்கும்

கர்வத்தை அடக்கி பெண்ணுயிருக்கும் தன்மையைக் கொடுத்து லிங்கோத்பவராகக் காட்சி அளித்ததை இன்றும் எல்லா சிவாலயங்களிலும் காணலாம். அத்தகைய சிவார்ச்சனத்தை விபூதியையும், ருத்திராட்சங்களையும் அணிந்து கொண்டு செய்ய வேண்டும். தனக்குச் செய்யக் கூடிய உடல் வலிமையோ அறிவு வலிமையோ இல்லாவிடில் மற்றவரைக் கொண்டு செய்வதும் தவறல்ல. அவரவருடைய இயல்புக்குத் தக்கவாறு பூஜா சாமான்களை வைத்துக்கொண்டு செய்ய வேண்டும். அதில் பஞ்சாயதன பூஜை என்பது மிகச்சிறந்தது. சூரியன், விநாயகர், அம்பிகை, விஷ்ணு, சிவன் என்பது. அதில் நடுவில் சிவனையும் [வெள்ளை பாணலிங்கம் அல்லது சாதா பாணலிங்கம்] 2. அக்னி மூலையில் ஸ்படிகக் கல்லா லான உருவமற்ற சூரியன். 3. நிருருதி மூலையில் சோண பத்ரம் என்னும் சிவப்புக் கல்லால் ஆன உருவமற்ற பொரு ளில் விநாயகர் 4. வாயு மூலையில் சுவர்ணமுகரி என்னும் உலோகத்தினலான உருவமற்ற ஒரு பொருள் அதில் அம் பிகை 5. துவாரத்தோடு கூடிய சாளக்கிராமம் என்னும் கருப்புக்கல்லில் ஈசான மூலையில் விஷ்ணு என்பது அமைப்பு. பூஜை செய்யுங்கால் இதர எண்ணங்களைவிட்டு சிவனிடத்தி லேயே மனதைச் செலுத்தி இருப்பது தான் முக்கியம். சிந்தை வேறிடத்தில் வைத்து பூஜை செய்வது பயனற்றது.

இத்தகைய சிவபூஜையிலும் ஸ்ரீ நடராஜர் வழிபாடே மிகச்சிறந்தது. அதை இங்கு சிறிது காண்போம். இவ்வுல கையே தெய்வ புருஷனுக உள்ளத்தில் எண்ணி அப்புருஷ னுடைய தலையாக ஸ்ரீபர்வதத்தையும், நெற்றியாக கேதாரத் தையும், இரு புருவங்களின் நடுபாகமாக வாராணசி(காசி)யை யும், குருக்ஷேத்திரத்தை குசஸ்தானமாகவும் [ஸ்தன ப்ரதே சம்], பிரயாகையை இருதயமாகவும், சிதம்பரத்தை உயிர் ஸ்தானமான ஹிருதய மத்யமாகவும் கருதி வழிபட வேண்டும் என்று ஜாபாலதரிசனேபனிஷத்தில் (4.47) கூறப்பட்டுள்ளது. மனிதன் கை, கால், கண், மூக்கு, செவி இல்லாமல் வாழ முடி யும். ஆனல் உயிர் பிரிந்து விட்டால் சடலமாகி விடுகிறது,

செயலற்று விடுகிறது என்பது உலகப் பிரசித்தம். தூங்குங் கால் மனிதனுடைய உள்ளத்தில் எல்லா புலன்களும் ஒடுங்கு கின்றன. அதுபோல் ஸ்ரீ நடராஜருடைய அர்த்த ஜாம காலத் தில் எல்லா க்ஷேத்ரங்களிலுமுள்ள தேவதைகளும் ஒடுங்கு கின்றன. விழிக்குங்கால் எவ்வாறு அந்தப் புலன்களும் ஆங் காங்கு சென்று செயல்படுகின்றனவோ அவ்வாறே காலை விச்வரூப தரிசன பூஜையில் அந்தந்த தேவதைகள் தத்தமது இருப்பிடம் சென்று செயல்படுகின்றன. எனவே, சிதம்பரம் ஸ்ரீ நடராஜராஜ தரிசனம் ஒன்றே எல்லா ஸ்தலங்களில் உள்ள தேவதைகளின் தரிசனத்தால் ஏற்படும் பயன்கள் யாவற்றையும் அளிக்கவல்லது. இதைக் கருதியே "தஹ ரஸ்த்த:" என்னும் நடராஜ ஸகஸ்ரநாம நாமம் தெளிவு படுத்துகிறது. அதன் சுருக்கத்தையும் சிறிது காண்போம். தஹரோபாஸனம் என்பது மூவகையானது. ஆதி பௌதிகம், ஆத்யாத்மகம், ஆதிதைவிகம் என்று. விராட்புருஷனுடைய ஹ்ருதய மத்ய வர்த்தியாக த்யானம் செய்வது ஆதி பௌதிக மாகும். நமது உள்ளத்தில் நடராஜரை இருத்தி வேறு கவனம் இன்றி தியானம் செய்வது ஆத்யாத்மிகமாகும். ஸ்ரீ நடராஜர் ஸந்நிதியில் எதிரில் உள்ள கமலத்தில் நடுவில் வடக்கு நோக்கி அமர்ந்து உள்ளத்தில் திருமாலை இருத்தி அவர் உள்ளத்தில் ஸ்ரீ பகவான் நடராஜர் வீற்றிருப்பதாக த்யானம் செய்வது ஆதிதைவிக தஹரோபாஸனம் ஆகும். த்யான நிலை கலைந்து நடராஜரை வலது கண்ணாலும், கோவிந் தராஜரை இடது கண்ணாலும் கண்டு களிப்பதே சிவசக்தி தரிசனமாகும். இவ்வாறே ஸ்ரீமத் அப்பைய்ய தீக்ஷிதர் அவர் கள் 10 ச்லோகங்களால் மிக அழகாகத் துதித்துள்ளார். மற்றொரு ச்லோகத்தாலும் மிக அழகாக வருணித்துள்ளார். எந்தப் பரமசிவனுடைய இடது பாகம் விஷ்ணுவோ அவரே பார்வதி. அந்தப் பரமசிவனே பரமவித்யை. சிரஸில் ஞான வடிவமான சந்திரனைச் சூடி, உலக மக்களின் தாபத்தைப் போக்கி இன்பமாக வாழும்படி செய்து கொண்டு விளங்கு கின்றார், எல்லா வேதங்களாலும் எல்லா கலைகளுக்கும்

நாயகர் ஸ்ரீ நடராஜரே! எல்லா உலகிற்கும் இவரே நாயகர் என்றும் புகழ்ந்துள்ளார். இது முற்றிலும் உண்மையே. சங்கரநாராயணராக சங்கரன்கோவிலில் விளங்குவது பிரசித்தம். நாராயணர் அம்பிகையாக இல்லாதிருப்பின் எவ்வாறு மோகினி அவதாரம் எடுத்த விஷ்ணுவிற்கும் சிவனுக்கும் ஐயப்பன் பிறந்திருக்கக்கூடும்? எனவேதான் நடராஜரை ஆண் விகுதியுடன் பெருமான் என்றும், விஷ்ணுவைப் பெண் விகுதியுடன் பெருமாள் என்றும் வழங்குகின்றோம். எனவே, எல்லாத் தெய்வங்களுக்கும் தலைவர் ஸ்ரீ நடராஜ மூர்த்தியே. ஆனது பற்றியே கைலாசத்தில் பார்வதிதேவி வினவச் சிவன், "பாற்கடலில் லக்ஷ்மியுடன் நீண்ட நாளாக என்னையே உள்ளத்தில் இருத்தி அம்பிகையுடன் கூட விஷ்ணு வழிபாடு செய்ததின் பேரில் மகிழ்ச்சி அடைந்த நான் யாது வேண்டும் என்று வினவ, மந்த்ரோபதேசம் செய்யும்படி திருமால் வேண்ட, அவருக்கு நானே ஸ்ரீ ருத்ர நாமாக்களும், உபநிஷத் நாமாக்களும் அடங்கிய ஸ்ரீ நடராஜர் ஸஹஸ்ர நாமத்தை உபதேசித்து அருளினேன்" என்று கூறுகின்றார். அந்நாமாக்களுள் ஒரு நாமாவான "ஸ்ரீபதி பூஜித:" என்னும் நாமா இதன் உட்கருத்தைத் தெளிவு படுத்துகிறது. அந்த நாமாவின் பொருளையும் சிறிது பார்ப்போம்.

லக்ஷ்மீபதியான மஹாவிஷ்ணுவினால் பூஜிக்கப்பட்டவர் நடராஜமூர்த்தி. வேதம் இதன் விளக்கத்தைத் தருகிறது. "அக்ஞானத்தைப் போக்கி, ஞானத்தை அளிக்கும் சிவனே! பிரம்மனுக்கு வேதத்தை உபதேசித்த சிவனே! அழகிய ரத்தினங்களாலும் கற்களாலும் தங்கத்தினாலும் வெள்ளியினாலும் பவழத்தினாலும் ஆகிய உனது லிங்கத்தை தேவர்கள் சிறந்த சம்பத்திற்காக அபிஷேகம் செய்து, ஆராதனம் செய்தனர். இச்சிவலிங்கத்தை பூஜை செய்ததின் பயனாகத்தான் விஷ்ணுவிற்கு வைகுண்டலோக நாயகராகும் தன்மை கிடைத்தது. அத்தகைய சிவலிங்க ஆராதனத்தினால் எங்களைக் காத்து அருள்கின்றாய்". இவ்விஷயம் பராசர புராணத்திலும் கூர்ம புராணத்திலும், ஸ்ரீ இராமாயணத்திலும் அத்யாத்ம ராமா

யணத்திலும், இராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹத்திலும், ஹரி வம்சத்திலும், மஹாபாரதத்திலும் மிக விரிவாக சொல்லப்பட்டிருக்கிறது. லிங்க புராணத்தில் சிவனை விஷ்ணு பலவாருகத் துதி செய்து ஸாஷ்டாங்கமாக வணங்கி ஜலத்தின் நடுவில் நின்று கொண்டு கோடி சிவநாமம் ஜபித்து சிவனருள் பெற்ருர் என்று கூறப்பட்டுள்ளது. தேஜினிவன [திருவீழி மிழலை] மாகாத்மியத்தில் விஷ்ணு ஐம்புலன்களையும் அடக்கி, ஆகாரமின்றி லக்ஷ்மியுடன் கூட இருந்துகொண்டு ஆயிரம் தாமரை மலர்களால் ஒவ்வொரு நாளும் பூஜை செய்தார். அப்பொழுது ஒரு நாள் சிவன் விஷ்ணுவை சோதனை செய்ய ஒரு தாமரை மலர் குறையும்படிச் செய்துவிட்டார். எந்த ஓடைகளிலும் ஒரு மலர் கிடைக்காததால் இன்று 999 மலர்கள்தான் கிடைத்துள்ளன, ஒன்று கிடைக்கவில்லையே என்று மிக வருந்தி வைராக்கியத்துடன் எப்படியாவது ஆயிரம் தாமரை மலர்களால் பூஜையை செய்துவிட வேண்டியதுதான் என்று பூஜையைத் துவக்கினுர். 999 மலர்கள் பூஜித்தபின் தனது வலது கண்ணைப் பிடுங்கி தாமரை ஸ்தானத்தில் அர்ச்சனை செய்தார். இதைக் கண்டு மகிழ்ந்த சிவன், முன் கண்ணைக் காட்டிலும் மிக அழகான, பிரகாசமான கண்ணை அளித்துப் புண்டரீகாக்ஷர் என்னும் பெயரையும் சூட்டினுர். "உனது பூஜையினுலும், துணிவினுலும் மகிழ்ச்சியுற்றேன். எனவே தேவையானதைக்கேள்" என்று சிவன் கூற "அரக்கர்களை அழிக்கச் சக்ராயுதத்தை அளித்து அருள் பாலிக்க வேண்டும்" என்று வேண்ட சிவனும் அவ்வாறே பார்ப்பதற்கு அழகான "சுதர்சனம்" என்னும் சக்கரத்தை அளித்து உலகைக் காத்து அருள ஆணையிட்டார். தேவீ பாகவதத்திலும் இவ்வரலாறு கூறப்பட்டுள்ளது.

சிவலிங்கம் அமைந்திருக்கும் ஸ்தானம் விஷ்ணுபீடம் என்று கூறப்படுகிறது. இதைத்தான் சக்தி உபாசகர்கள் ஸ்ரீ சக்கர உபாசனத்தில் நடுவில் விந்து ஸ்தானத்தில் சிவனைச் சேர்த்து ஒன்று படுத்தி வழிபடுகின்றனர். செவ்வலரி மலராலும், தாமரை மலராலும், துளசியாலும் நடராஜரை வழிபடக்

கூடாது என்று வசனம் இருக்க விஷ்ணு எவ்வாறு தாமரை மலரால் வழிபட்டார்? என்று சந்தேகம் வரின், விஷ்ணுவைத் தவிர வேறு யாரும் தாமரை மலரைக் கொண்டு நடராஜரை வழிபடக் கூடாது என்பது கருத்து. உலகிலும் மிகப்பெருந் தலைவர்கள் கையாளும் பொருட்கள் அவர்களே கையாள வேண்டும். மற்றேனையர் கையாளக் கூடாது, என்பது அனுபவசித்தம். அவ்வாறே இங்கும் காண்க.

சிவனுடைய வழிபாட்டால் மோக்ஷம் கிடைக்கும். போகத்தை விரும்புகிறவர்களுக்கு பெரும் சுகமும் கிடைக்கும். சிவபூஜையினுடைய விசேஷத்தால் அவனுக்கு பெரிய அரண் மனையும், பெரும் யானைகளும், வாயு வேகமாகச் செல்லக்கூடிய குதிரைகளும், சந்திரன் போன்ற முகம் அமைந்த சுந்தரிகளும் பெரும் செல்வமும் அவனுக்குக் கிடைக்கும் என்பது புராண வசனம். மேலும் சிவன்தான் சிறந்தவர் என்பதற்கு மற்றும் சில காரணங்களைப் பார்ப்போம். 1. மந்திரங்களுள் சிறந்த காயத்திரி தேவிக்குக் கணவர், 2. இராமரால் இராவணனை அழிக்க வேண்டி தனுஷ்கோடியில் சிவலிங்கத்தை நிறுவி ''ராமேச்வரம்'' என்னும் தன் பெயரையே சூட்டி வழிபட்டு இராவணனைவென்று வெற்றி பெறச் செய்தவர். 3. கண்ணன் கைலாச யாத்திரை சென்று சிவனை வழிபட்டமையால் உலகி லேயே சிறந்த அழகான மன்மதனைப் போன்ற மகனைப் பெறும் பாக்கியத்தை அவனுக்கு அளித்தவர். 4. அதே மன்மதனை தன் பார்வையாலேயே அழித்தவர்! 5. உலகை அழிக்கத் தோன் றிய காலகூட விஷத்தை விழுங்கியவர். 6. தனது பக்தன் மார்க்கண்டேயனைக் காக்க யமனின் திமிரை அடக்கியவர். 7. திரிபுர அசுரர்களை அழித்தவர். 8. தட்ச யாகத்தை நாசம் செய்தவர். 9. அர்ச்சுனனுக்கு பாசுபத அஸ்திரம் வழங்கியவர். 10. நரஸிம்மருடைய கர்வத்தை அடக்க சரப அவதாரம் எடுத்தவர். 11. காசியில் வேத வியாசர் விஷ்ணு தான் சிறந்தவர் என்று கையை மேலே தூக்கியதை மடங்கா மலே ஆக்கச் செய்தவர். 12. பிரம்மாவினுடைய சிறு அப ராதத்தால் தலையைக் கொய்து மாலையாக அணிந்தவர்,

13. வாமனுவதாரம் எடுத்த விஷ்ணுவின் கர்வத்தை அடக்க வாமனரின் தோலே உரித்து சட்டையாக அணிந்து கொண்டவர். சீகாழியில் இன்றும் சட்டைநாதரைக் காணலாம். இன்னும் பல உயர்வுகள் உள்ளன. விரிவஞ்சி இத்துடன் விடுத்தனம்.

மேலும் சிவனே உயர்வு என்பதற்கு பிருங்கிரிஷி ஸம்ஹிதை, சிவோத்கர்ஷப் பிரகரணத்தில் உள்ள ஒரு கதையைக் கூறி முடிப்போம். மாளவ தேசத்தில் மகேந்திரவர்மன் என்னும் அரசனின் அவைக்கு வந்த ஒரு அதிசய வழக்கில் வைஷ்ணவர்களாலும் சைவர்களாலும் தன் தன் தெய்வமே உயர்ந்தது என்று வாதாடப்பட்டது. அதற்கு தீர்ப்பு வழங்க வேண்டி வந்தது. அதற்கு மந்திரிகளின் அவையைக் கூட்டி அரசன் ஒரு யுக்தியைக் கையாண்டான். நீங்கள் இரு தரப்பினரும் ஒரு மாத காலத்திற்குப் பின் உங்களது தெய்வத்தை எமது முன் கொண்டு வாருங்கள் அதைக் கண்டு தீர்ப்பு வழங்குகின்றேன் என்று கூறி அனுப்பிவைத்தான். இரு தரப்பினரும் மகிழ்ச்சியுடன் சென்றனர். வைணவர்கள் அவ்வொரு மாத காலத்திற்குள் சேஷசாயியாக ஸ்ரீதேவி, பூதேவி சமேதராக, விஷ்ணு, உருவை அரண்மனேக்குள் புக முடியாத அளவிற்கு நீளமாகவும் அகலமாகவும், பெருத்ததாகவும் தயார் செய்து அவ்வுருவிற்கு மிகச்சிறந்த முறையில் அணிகளாலும் ஆடைகளாலும் மலர்களாலும் மிக அழகாக அலங்காரம் செய்து முடித்தனர். சைவர்களோ எனில் என்ன செய்வது என அறியாமல் கஷ்டத்துடன் இருக்குங்கால் ஒரு பெரியார் அவர்கள் முன் தோன்றி ஒரு சிறு பெட்டியைக் கொடுத்து இதைத் திறவாமல் அன்று அரசவைக்குச் சென்று அரசன் கையில் கொடுங்கள், பயமற்று இருங்கள், உங்களுக்கே வெற்றி கிட்டும் என்று கூறிச் சென்று விட்டார். அப்பெரியாரின் வாக்கில் நம்பிக்கை இருந்தும், மனத்தில் கலக்கத்துடனேயே முப்பது நாட்களேயும் கழித்தனர். வைணவர்களோ எனில் சந்தோஷத்துடன் நமது தெய்வம் தான் பெரிது என்பதற்கு எவ்வித ஆட்சேபனேயும் இராது என்று வாளாவிருந்த

னர். 31-வது நாள் பலசக்கரங்கள் பூட்டிய வண்டியில் பெட்டியில் வைத்து மூடிய திருமாலை வைத்து அரசவைக்கு முன் கொண்டு வந்து நிறுத்தினர். சைவர்களோ எனில் கையில் பெரியார் கொடுத்த பெட்டியை சிரமமின்றி எடுத்துக் கொண்டு அரசவைக்கு உள்ளேயே சென்று விட்டனர், வைணவர்கள் வாயிலில் பாதுகாப்பாக நின்று ஒருவரை மட்டும் உள்ளே அனுப்பி, தங்களது தெய்வத்தைக் காண அரசனை அழைத்து வர அனுப்பினர். அரசனும் அவர்கள் அழைப்பை ஏற்று வாசலில் வர வைணவர்கள் எல்லோரு டைய முன்னிலையிலும் அப்பெட்டியைத் திறத்து, உலகையே மயக்கும் அழகு வாய்ந்த விஷ்ணுவை அரசனுக்குக் காண் பித்தனர். அரசனும் அவ்வழகைக் கண்டு மயங்கிவிட்டான். உடனே அருகில் உள்ள மந்திரியை அழைத்து விஷ்ணுவே பெரியவர் என்று எழுத ஆணையிட்டான். ஆனால் மந்திரிகள் ஒரு தரப்பு தீர்ப்பு நியாய விரோதம், மறுதரப்பாரையும் விசாரித்து அறிந்த பின் எழுதலாம் எனக் கூறிய பின் வேண்டா வெறுப்பாக அரசவை ஏகினன். சைவர்களைப் பார்த்து உங்கள் தெய்வம் எங்கே என்று கேட்க அப்பெரியவர் அளித்த பெட்டியை அரசன் கையில் கொடுத்தனர். அரசனும் அப்பெட்டியை ஒன்றன் பின் ஒன்ருக 15 பெட்டிகள் திறந்த பின் 16-வது பெட்டி தங்கத்தால் ஆனதாயும் நவரத்தினங்கள் இழைக்கப்பட்டதாயும் மிகச்சிறியதாயும் அழகு வாய்ந்து ஒளி வீசுகின்றதாயுமிருந்தது. அதைத் திறந்தான். அதனுள் ஒரு தங்கச் சுருள் இருந்தது. அதைப் பிரித்தான். அதில் ''சர்வம் சிவமயம் ஜகத்'' (உலகம் யாவும் சிவன் உருக் கொண்டது) என்று எழுதியிருந்தது. அதைக் கண்ட உடனேயே அரசனுக்கு எங்கும் சிவன்உரு தோற்றமளித்தது. வெளியேயுள்ள விஷ்ணு வடிவத்திலும் சிவனுடைய உருவமே தோற்றமளித்தது. இதைக் கண்டு பயந்த அரசன் மந்திரி களை அழைத்து நான் முதலில் கூறியது மிக மிகத் தவறு. உங்களுடைய அறிவுரையை கேளாதிருப்பின் நான் மகா பாவியாவேன். என்னைக் காப்பாற்றினீர்கள். சிவனைக்

காட்டிலும் உயரிய தெய்வம் வேறு எதுவும் இல்லை. "எல்லாம் சிவமயம்" என்று தீர்ப்பளித்து சைவர்களை விசேஷ மரியாதைகளுடன் அனுப்பி வைத்து தன் அபராதம் நீங்க அன்று சிவனுக்கு விசேஷ பூஜைகள் செய்து கௌரவித்தான். இதன் கருத்தையேதான் ஸ்ரீமத் நீலகண்ட தீக்ஷிதர், சிவோத்கர்ஷ மஞ்சரியில் சிவன்தான் உலகத்தலைவன், அவரேதான் எனது வழிபாட்டு தெய்வம். அவரையன்றி வேறு எந்த தெய்வத்தின் பெயரையும் நான் கூற மாட்டேன் என்று 51 ச்லோகங்களால் மிக அழகாகப் போற்றியிருக்கிறார். இதையேதான் "சிவபத மணிமாலா" என்னும் நூலிலும் ஆதிசங்கரர் சிவபதத்தைக் காட்டிலும் வேறு உயர்ந்தது யாதும் இல்லை, உலகம் சிவமயம், அவ்வாறு நினைப்பவர்களுக்கு மங்களமே ஏற்படும் என்று உறுதியாக கூறுகிறார். எனவே சைவர்களுக்கு சிவனைத் தவிர எந்த தெய்வமும் உரித்தது அல்ல, உயர்ந்தது அல்ல என்னும் எண்ணம் ஏற்பட இது போன்ற சிவஞான பூஜா மலர்கள் மிக மிக அவசியமானதாகும்.

சிவவழிபாடு முறைகள் பலவாறுயிருப்பினும் மாதந்தோறும் பௌர்ணமியில் சிவனுக்குச் செய்ய வேண்டிய ஆராதன முறைகளைக் தெரிந்து கொள்ள வேண்டியது மிக அவசியம். சித்திரை—மருக்கொழுந்து, வைகாசி— சந்தனம் ஆனி— முக்கனி (வாழை, மா, பலா), ஆடி—பால், ஆவணி—நாட்டுச்சக்கரை, புரட்டாசி— அப்பம், ஐப்பசி — அன்னம், கார்த்திகை— தீபம், மார்கழி— நெய். தை— கருப்பஞ்சாறு, மாசி— நெய்யில் நனைத்த கம்பளம், பங்குனி—கெட்டித்தயிர், இவைகளால் வழிபாடு செய்தால் சிவனுக்கு விசேஷ ப்ரீதி ஏற்படும்.

மங்களம் நடராஜாய மஹநீய குணாத்மனே |
சக்ரவர்த்தி நுதாயஸ்ரீ சித்ஸபேசாய மங்களம் ||

|| சுபம்பூயாத் ||

# சிவபூஜனம் கட்டுரை ஆசிரியர் அறிமுகம்

சிதம்பரம் கல்யாணரத்தினம் அம்மாளுக்கும், ராஜா ஸோமசேகர தீக்ஷிதருக்கும் மூன்ருவது மைந்தராகப் பிறந்தவர். இவருடைய தந்தையார் நடராஜர் கோயில் அறங்காவலர். ஸ்ரீ நடராஜர் ஸகஸ்ரநாமங்களுக்கு இதுவரை எவராலும் எழுதப்படாத ஸம்ஸ்கிருத பாஷ்யம் இவரால் எழுதப்பட்டு வெளியிடப்பட்டது. தந்தையின் மாமா C.R.P. குப்புசாமி தீக்ஷிதருக்கு அபிமான புத்திரரும் ஆவார். குப்புசாமி தீக்ஷிதர் தென்மொழியிலும் வடமொழியிலும் தேர்ச்சி பெற்றவர். சிறப்பாக சொற்பொழிவாற்றுவார். சிதம்பரம் முனிசிபல் கவுன்சிலர் ஆகவும், சேர்மஞகவும் இருந்து உள்ளார். தருமபுரம், திருப்பனந்தாள், திருவாவடுதுறை, சங்கரமடம், ஞானியார் மடம், ராஜா சர் அண்ணுமலைச் செட்டியார், குருபூசை மடம் ஆகியோர்களுக்கு அன்புக்கும், ஆதரவுக்கும் பாத்திரமானவர். ஆசிரியருக்கு 7-வது வயதிலேயே தாயார் சிவகாமி பதம் சேர்ந்தார். எனவே, தந்தையின் தாய் ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி அம்மாள் அவர்களின் போஷணையில் வளர்ந்தவர். 8 வயதிலேயே உபநயனமும், அத்தான் மகள் ஸ்ரீமதி குணபூஷணியுடன் விவாஹமும் நடந்தது. தீக்ஷீத சமுதாய பாடசாலையில் மஹாமஹோபாத்தியாய தண்டபாணி சுவாமி தீக்ஷிதர் அவர்கள் நிர்வாகத்தில் ஸம்ஸ்கிருத ஆரம்ப கல்வி பயின்ருர். பிறகு பொன்னம்பலம் பிள்ளை ஸம்ஸ்கிருத பள்ளியில் 2 ஆண்டு காலம் பயின்று அரசாங்க Entrance பரிட்சையில் தேறி, அண்ணுமலை பல்கலைக் கழகத்தில் வ்யாகரண சிரோமணி 4 ஆண்டுகளும், அடுத்து நியாய சிரோமணி 2 ஆண்டுகளும், அடுத்து வேதாந்த சிரோமணி 2 ஆண்டுகளும், அடுத்து 2 ஆண்டுகள் மீமாம்ஸா சிரோமணியும் முதல் வகுப்பில் தேறியுள்ளார். பிறகு அண்ணுமலை பல்கலைக் கழகத்திலேயே 2 ஆண்டுகள் ''மகாபாரதத்தில் ராஜதர்மம்'' என்பது பற்றி ஆராய்ச்சி செய்துள்ளார். பிறகு சென்ட்ரல் Government நிர்வாகத்தில் 3 ஆண்டுகள் Critical Edition of

Chidambaram Mahathmia and Pundarikapura Mahathmia என்பது பற்றி இங்குள்ள சுவடிகள் சென்னைப் பல்கலைக் கழகத்திலிருந்து தருவித்த சுவடிகள் ஆக 12 பார்வையிடப் பட்டு, ஆராய்ந்து பல குறிக்கோள்களுடன் 3 ஆண்டுகாலம் பணி செய்து submit செய்துள்ளார். பிறகு சிதம்பரம் அரசினர் மகளிர் உயர்நிலைப் பள்ளியில் 3 ஆண்டு காலம் வட மொழி ஆசிரியராக பணியாற்றியுள்ளார்.

அன்னருடைய ஆசிரியர்கள் 1. மஹா மஹோபாத்தி யாய தண்டபாணி சுவாமி தீக்ஷிதர் 2. ஆனந்த தாண்டவ தீக்ஷிதர் 3. ராஜா ஸோமசேகர தீக்ஷிதர் 4. மஹாதேவ சாஸ்திரிகள் 5. சி.சு. சுப்ரமண்ய சாஸ்திரிகள் 6. செல்லப்பா சுவாமி தீக்ஷிதர் 7. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் 8. நடேச அய்யர் 9. சபேச அய்யர் 10. E. S. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் 11. ராமானுஜ அய்யங்கார் 12. இராமசுப்பா சாஸ்திரிகள் 13. இராமசுவாமி சாஸ்திரிகள் 14. திருவை யாறு P. S. சுப்ரமண்ய சாஸ்திரிகள் 15. Dr. C. S. வெங்க டேச்வர சர்மா 16. நாகராஜ சர்மா 17. குருசுவாமி சாஸ்திரிகள் 18. பண்டிதராஜ வேப்பத்தூர் சுப்ரமண்ய சாஸ்திரிகள் 19. K. A. சிவராமகிருஷ்ண சாஸ்திரிகள் 20. பஞ்சாபகேச சாஸ்திரிகள். 21. K. ஸ்ரீநிவாசச்சாரியார் 22. சேஷாத்திரி அய்யங்கார் 23. பட்சிதீர்த்தம் வெங்கட் ராம தீக்ஷிதர் ஆகியோர்கள் ஆவார். ஆசிரியரால் இதுவரை வெளியிடப்பட்ட நூல்களின் விவரம் கடைசியில் தருவோம். 1943- ல் சுஹ்ருத் சபா என்னும் சபை ஆரம்பிக்கப்பட்டு அதில் வடமொழி, சங்கீதம், ஹிந்தி இவைகள் பல ஆசிரியர்களை வைத்துக்கொண்டு வடமொழி இலவசமாகவும் மற்றேனை யவை குறைந்த கட்டணத்திலும் இதுவரை சுமார் 1000 பேர் பயிற்றுவிக்கப்பட்டனர். அன்னரிடத்தில் பல மாணவர்களும் மாணவிகளும் தேர்ச்சி பெற்று டாக்டர்களாகவும், வக்கீல் களாகவும் பணியாற்றிவருகின்றனர். நடராஜர் ஆராதனத் தையும், கல்வி பயிற்றுவித்தலையுமே தனது ஜீவித பலமாக கருதி வருகின்றார். வீட்டிலும் பஞ்சாயதன பூசை, ஜபம்

முதலியவை காலை 10 வரை தொடர்ந்து நடத்தி வருகிறார். அன்னாருக்கு ஒரு மகனும், ஒரு மகளும் உள்ளனர். மகன் B. Com. பாஸ் செய்து நடராஜர் கோயில் அறங்காவலராக வும், நடராஜர் ஆராதகராகவும் பணியாற்றி வருகிறார். மகளுக்கு விவாஹம் முடித்து விட்டார். மகளுக்கு ஒரு மகளும் ஒரு மகனும் உளர். மகனுக்கு 2 மகளும் 1 மகனும் உளர். அண்மையில் 29-5-85 பௌத்திரனுக்கு உபநயனமும் பௌத்திரியோடு தௌஹித்திரனுககு விவாஹமும் வைதிக முறைப்படி 5 நாட்கள் சிறப்பாக ஸம்ஸ்கிருத வித்வத் ஸத சுடன் நடத்தி முடித்துள்ளார். அன்னாரின் வெளியீடுகள்:-

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ நடராஜ ஸஹஸ்ரநாம பாஷ்யம் (Skt) | Rs. 5-00 |
| 2. | ,, ,, ,, நாமாவளி (Skt) | 5-00 |
| 3. | சிவகாமி அஷ்டோத்தர சத நாமாவளி | 1-00 |
| 4. | சிதம்பர மாஹாத்மியம் (Skt) | 5-00 |
| 5. | சிதம்பர ரகஸ்யம் (தமிழ்) | 0-25 |
| 6. | ஸ்ரீ போதாயன ஔபாஸன பிரும்மயக்ஞ வைச்வதேவ ப்ரயோகம் (Skt) | 3-00 |
| 7. | ருத்ர ஸஹஸ்ர நாமாவளி (Skt) | No Stock |
| 8. | ஸ்ரீ நடேச அஷ்டகம் with Tamil translation and ஆனந்தகிரி சங்கர விஜயம் (சுருக்கம்) | 3-00 |
| 9. | நடேச ஸ்துதி | 5-00 |
| 10. | சிம்ஹானுவாகம் தமிழ் உரையுடன் | 3-00 |
| 11. | பில்வ அஷ்டோத்தர சத நாம ஸ்தோத்திரம் தமிழ் உரையுடன் | 5-00 |
| 12. | கோவிந்த நடராஜ ஸ்துதி தசகம் | 3-00 |
| 13. | கணேச உபநிஷத் ,, | 1-00 |
| 14. | திரிஸுபர்ண மந்திரம் ,, | No Stock |
| 15. | நீதி சாஸ்திரம் ,, | ,, |
| 16. | சிதம்பர க்ஷேத்ர மஹிமா | ,, |

| | | |
|---|---|---|
| 17. | உபநிஷத் ஸாரம் | 5-00 |
| 18. | சிதம்பர மாஹாத்மியம் (தமிழ்) | 5-00 |
| 19. | புண்டரீகபுர மாஹாத்மியம் (தமிழ்) | 5-00 |
| 20. | நடராஜர் கோவில் கைடு தமிழ் | 5-00 |
| 21. | நடராஜர் கோவில் கைடு ஆங்கிலம் | 5-00 |
| 22. | History of Chidambaram | No Stock |
| 23. | அத்யாத்ம யக்ஞ மந்திரம் (Tamil translation) | ,, |
| 24. | பிராணுக்னிஹோத்ர மந்திரம் | ,, |
| 25. | யதி தர்மப்ரபோதம் (Skt) | 5-00 |
| 26. | சாந்தி விவரணம் | No Stock |
| 27. | சிவகாம ஸுந்தரி தாடங்க மஹிமை | 1-00 |
| 28. | சிதம்பர க்ஷேத்ர ஸர்வஸ்வம் அல்லது நித்ய பூஜா பாதஞ்ஜல ஸூத்ரம் | 25-00 |
| 29. | ஷை II Volume (உத்ஸவ, ப்ரதிஷ்டாப்ரயோகம்) | 100-00 |
| 30. | நவக்ரஹ மாத்ருகாஷ்டோத்தர சத நாமாவளி (ஜோஸ்ய குறிப்புகளுடன்) | 10-00 |
| 31. | ஸ்ரீ சிவகாமஸுந்தரி ஸஹஸ்ரநாமம் தெலுங்கு | 5-00 |

பல விழா மலர்களுக்கும் ஆஸ்திக பத்திரிகைகளுக்கும் அனுப்பி வைத்து வெளிவந்த கட்டுரைகள் கணக்கிலடங்கா.

சுபம்

---

320-ம் பக்கத் தொடர்ச்சி]

அந்த புகழ் பெற்ற புலி முனியாகிய வியாக்ரபாதர் விரும்பத் தக்கதான இந்த ஆட்டைப் பாராது நீங்கிப் போவாரோ சொல்வாயாக. (இப்பாடலில் ஆடு என்னும் பிராணியைப் பற்ருது புலி நீங்காது என்ற பொருள் வெளிப்படை. உள் பொருளாக அறிய வேண்டியது திருக்கூத்தைத் தரிசியாது புலி முனி நீங்கமாட்டார் என்பதாம்.) சிவம்

# கவி காளமேகப் புலவரின் பாடல்கள்

## 1. சிதம்பரத்தில் சிறப்பாக உள்ளவை

ஞான சபைக னகசபைசிற் றம்பலம்பே
ரானந்தக் கூடந் திருமூலட் - டானம்பே
ரம்பலம்பஞ் சாவரண நாற்கோபு ரம்பொற்செய்
கம்பமண்ட பஞ்சிவகங் கை.

இதன் பொருள் : (சிதம்பரத்தில் சிறப்பாக உள்ளவை யாவையெனில்) நடேசப் பெருமான் திருக்கூத்தியற்றும் சிற்சபை, சிற்சபைக்கு முன்னுலிருக்கும் பொன்னம்பலம், நடராஜப் பெருமான் அருவாய் இருக்கும் சிற்றம்பலம், ஸ்ரீ நடேசர் ஊர்த்துவ தாண்டவஞ் செய்யும் பேரின்பசபை, சிவ லிங்கப் பெருமான் எழுந்தருளியிருக்கும் திருமூலஸ்தானம், தேவர்கள் கூட்டம் நடராஜப் பெருமானைத் துதித்து வணங் கும் இடமாகிய பேரம்பலம் என்னும் தேவசபை, ஐந்து பிரா காரங்கள், நான்கு திசைகளிலுமுள்ள பெரிய கோபுரங்கள், அழகுடன் விளங்குகின்ற ஆயிரங்கால் மண்டபம், சிவகங்கை யென்னும் திருக்குளத்தீர்த்தம் என்பனவாம்.

## 2. ஆட்டை விட்டுப் புலி போகுமோ?

நாட்டுக்கு ளாட்டுக்கு நாலுகா லையாநின்
ஆட்டுக் கிரண்டுகா லானுலும் - நாட்டமுள்ள
சீர்மேவு தில்லைச் சிவனேயிவ் வாட்டைவிட்டுப்
போமோசொல் லாயப் புலி.

இதன் பொருள் : புகழ் பொருந்திய தில்லைப்பதியில் வீற்றிருக்குஞ் சிவபிரானே! ஐயா, உலகத்திலே ஆடு என்னும் பிராணிக்கு கால்கள் நான்கே, உன்னுடைய ஆட்டுக்குப் (கூத்துக்கு) பயன் படுத்துவது இரண்டு கால்களேயானுலும்,

[319-ம் பக்கம் பார்க்கவும்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# ஸ்ரீ மஹான் ஒடுக்கத்தூர் சுவாமிகளின் திவ்வியசரிதம்

(பெங்களூர் திருமடத்தில் அளிக்கப்பட்ட அச்சு நூலினின்றும் எடுத்துப் பிரசுரிக்கப்பட்டது)

தண்டமிழ் நாடு உய்யவந்த தாயுமான அடிகள் தமது அருள்நூலில் ''வித்தகச் சித்தர்கணம், நவநாத சித்தர்''— என்று ஒரு திருக்கூட்டத்தைக் குறிப்பிடுகின்ருர். அவரே 'பிறிதோரிடத்தில் ''சைவ சமயமே சமயம்'', என்றும் ''சித்தாந்தமுத்தி முதலே சிரகிரி வளங்கவரு— தட்சண மூர்த்தியே'' என்றும் அருளியுள்ளார். இவ்வருள் வாக்குகளை நோக்குமிடத்து— சைவமார்க்கமே — சித்தமார்க்கம் — சித்த மார்க்கமே சைவ சித்தாந்தச் செந்நெறி என்று துணியத் தோற்றுகிறது அன்ருே?

அத்தகைய சித்தர்கள் யார்? அவர் திருக்கூட்டம் எங்குள்ளது? அவர் சமயம் எது? அவர் சென்றது எந்நெறி? அவர்கள் குறிக்கொண்டு தொழுதது எதனை? அட்டகுணம், எட்டுச்சித்தியை விடுத்து அவர்கள் ஒட்டி நின்றது எதனை? என்ற வினுக்களுக்கு விடை காணப்புகின் விரியும். எனினும் சுருங்கச் சொல்லி மேற்செல்லுகின்றேன்.

சித்தத்தைச் சிவன்பால் வைத்துச் சித்திபெற்றவர் சித்தர். அவர் திருக்கூட்டமே கணங்களாம். இராப்பகல்

அற்ற இடத்தே சிவனை நினைந்து, எங்கும் அவனைக் கண்டு இன்புறுவதே அவர்கள் நெறி.

''பளவட்ஸ்கி அம்மையார் சித்தர் திருக்கூட்டத்தின் உண்மைகள் பலவற்றை விளக்கியுள்ளார்கள். அவர், சித்தர் கூட்டத்தலைவராக மோன மூர்த்தியைக் குறிப்பிடுகிறார்.'' மோனமூர்த்தி — தட்சணாமூர்த்தி என்பதை நாம் அறிவோம். ஆகவே சித்தர்களுக்கும் தெய்வம் சிவனே. அச் செம் பொருளை மௌன நிலையில் கண்டு களிப்புற்றவர்களே சித்தர் கள் என்பது போதரும். கீழ்வரும் அருள்வாக்குகள் இதனை வலியுறுத்தல் காண்க:

''பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட்(டு)
இதமுற்ற பாச இருளைத் துறந்து
மதமற் றெனதியான் மாற்றிவிட் டாங்கே
தித முற்றவர்கள் சிவசித்தர் தாமே.''
''சித்தர் சிவத்தைக் கண்டவர் சீருடன்
சுத்தா சுத்தத்துடன் தோய்ந்துந் தோயாதவர்
முத்தாம் முத்திக்கு மூலத்தர் மூலத்துச்
சத்தர் சதாசிவத் தன்மையர் தாமே.''

புண்ணியம் மிக்க நாவலந் தீவில் சித்தர்கள் பலர் அவ்வப் போது தோன்றி பல அற்புதங்களைச் செய்து போயினர். அவர்களுள் தலையாயவர் திருமூலர். திருமூலர் சூக்கும கயிலாயத்தினின்றும் திருப்பெருகும் தமிழகம் போந்து ஓர் இடையன் உடலில் புகுந்து ஆடிய ஆடலைக் கேட்டுள்ளோம். அவரது புறக்கருவி கரணங்கள் எத்தொழிலைச் செயினும் ஏது வத்தைப் படினும் சித்தம் சிவன்பால் இருந்ததை மறுப்பார் யார்? இல்லை அன்றோ? மூலர் நெறி சித்தாந்த நெறி. சித் தாந்தம் வேறு, சித்தர் நெறி வேறல்ல, இரண்டும் ஒன்றே. இது நிற்க,

சித்தர்கள் ஒருநெறியை அறிவிக்க அவ்வப்போது உலகில் தோன்றுகின்றனர். ''சீலாங்க வேதத்தைச் செப்ப

வந்தேனே,'' என்பது போல், சமரஸ சன்மார்க்கத்தை அருளி, நம் போன்றவர்கள் உய்ந்து கரைகாண நம்மிடையே வாழ வருகின்றனர்.

இங்ஙனம் திருஅவதாரம் செய்த சித்தர் கணத்துள் ஸ்ரீ மஹான் ஒடுக்கத்தூர் சுவாமிகள் ஒருவராவர். காணுமற் கண்டு கருத்தோடிருந்த சுவாமிகளது அருள் ஒளியால், மருளும், திருக்கண்பார்வையால் பெருத்த நோயும், நல்லருட் சொல்லால் சொல்லருந்துயரும், புன்முறுவலால் நன்ஞானமும், உதையால் ஊழ்பிணியும், அறையால் அகலாத் துன்பும், அகல இன்புற்றோர் பல்லோராவர். இத்தகைய மஹானது திவ்விய திருச்சரிதம், அதாவது இம்மையில் நம்பொருட்டுத் தாங்கி வந்த திருவடிவின் வரலாற்றைக் காண்போம்.

பல்வளம் பெருகும் பரதகண்டத்தின் வடபால் உள்ள இரத்தினபுரியென்னும் சிற்றூரில் இற்றைக்குச் சற்றேறக் குறைய நூற்றிருபத்தைந்து ஆண்டுகட்கு முன்னர் க்ஷத்திரிய மரபு செய்த பெருந்தவத்தால் உலோகைய நாயுடு என்னும் புண்ணிய சீலர் வாழ்ந்து வந்தார். இவர் இளமையில் திருந்திய கல்வியைப் பொருந்தக்கற்று, அவ்வூர் அருகே இருந்த ஆங்கிலேயரது காலாட்படையில் ஒரு வீரராய்ச் சேர்ந்தார். சில ஆண்டுகட்குப்பின் தமது முயற்சியாலும் சலியா உழைப்பாலும் சிறிய தளகர்த்தரானர் (சுபேதார்). இவர் ஒரு படை வீரரேயாயினும் பண்பாடு மிக்கவர். சீலம் மிக்க வைதீக வாழ்வினர். உலகத்தோடு ஒட்ட ஒழுகலை உணர்ந்தவராதலின், 'அழுக்காறுடையான்கண் ஆக்கம் போன்று இல்லை ஒழுக்கமிலான்கண் உயர்வு'' என்று உட்கொண்டு நல்லொழுக்க நெறிநின்ருர்.

ஒருவனுக்குரிய வல்லமைகளில் உயர்ந்தது தன் பசியைப் பொறுத்தல். அதனை உணவால் மாற்றுதல் அதினும் உயர்ந்தது. பசிப்பிணியைப் போக்குதல் இல்வாழ்க்கையால் தான் இயலும். நல்லொழுக்க நெறி நின்ற உலோகைய நாயுடு இருமைக்கும் உரிய அறத்தை ஈட்ட எண்ணினர். தமது

குலத்தில் மனைத்தக்க மாண்புடைய மங்கை நல்லாள் பாலாம்பிகை என்னும் நல்லாளை மணந்தார். எளிய வாழ்வாயினும், இருவரும் கருத்தொருமித்து, ஒன்றே நினைந்து, ஒன்றே செய்தமையால் அவர்கள் இல்லறம் நிறைவுடையதாய் இன்பந் தவழ்ந்தது. மனைக்கு விளக்கம் மடவார், மனைமாட்சி அவர்க்கு மங்கலம், நன்மக்கட்பேறு நன்கலம் அல்லவா? நிறைவுடைய வாழ்வில் இருந்த குறை அது ஒன்றே. குறையிலா வாழ்வு குவலயத்தில் ஏது? இல்லை அன்றோ?

நாயுடுகாரும் அவர்தம் மனைவியாரும் இன்பந்தரும் அன்புப் புதல்வர் பெற அரிய விரதங்கள் தாங்கி, அறங்கள் பல செய்து வந்தனர். இறைவனருளால் அவர்க்கு ஒரு ஆண் மகவு பிறந்தது. நல்லோரையில் பிறந்த குழந்தையைக் கண்ட தாய் தந்தையர் பெருமகிழ்வெய்தி பெருமானைப் போற்றினர். அருந்தவத்தால் ஈன்ற அக்குழந்தைக்கு சேஷையா என்று திருநாமம் இட்டு கண்ணெனக் காத்து வந்தனர். குழந்தையும் பிறையென வளர்ந்தது. தாய் தந்தையர் இருவரும் எடுத்தணைத்து உச்சிமோந்து உடல் இன்பமும் குழலினும் இனிய மழலை கேட்டுச் செவியின்பமும் பெற்று மகிழ்ச்சியில் திளைத்தனர்.

இங்ஙனம் ஐந்து ஆண்டுகள் நிரம்பின. கல்வி கற்கப் பள்ளியில் வைத்தனர். பிள்ளைப் பெருந்தகைக்கு கல்வியும் கல்லாமல் பாகம் பட்டது. ஆரம்பக் கல்வி முடிந்தது; தந்தை தம் மகனுக்கு வேண்டிய கல்விப் பயிற்சி முடிந்ததாகக் கருதி பள்ளிக்குப் போவதை நிறுத்தினர். பிள்ளையும் சம்மதித்தார். சாகாக்கலை கற்கப்போகும் தமக்கு இக்கலை எதற்கு என்று எண்ணினர் போலும். உடனே தந்தையார் தம் மைந்தனுக்கு வேலை தேடினர். அவ்வூரில் ஒரு உத்தியோகசாலையில் சிறிய பணியில் அமர்த்தினர். தனயரும் தந்தை விருப்பப்படிச் சின்னாள் பணியாற்றினர். வேலை முடிந்ததும் வீடு திரும்புவது இல்லை. தனி இடந்தேடி தனித்திருக்க விழைந்தார். மாலை நேரங்களில் தியானத்தில் அமர்ந்திருந்து நெடும்பொழுது

கழித்து வீடு திரும்புவார். விளையும் பயிர் முளையில் என்பார்களே அதுவா? அல்லது கருவிலே திருவுடையவரா? இருவினை கழல ஒருமனமுடையராய் வந்த ஞானியா? ஏதென்று யாம் இயம்புவது?

பிள்ளைப் பெருந்தகை, சோலைக் குயிலோசை கேட்டு உள்ளங்குளிர்வார். தமது உள்ளத்தே குயிலோசை கேட்க விழைந்தார். ஆனால் அருகே ஐந்தாறு ஆந்தைப் பேய்போல் விழிப்பதைப் பார்த்து இவற்றை என்று துரத்துவதென்று கவல்வார். தமது கும்பிக்குளத்தில் அம்பலங்காண விழைவார்; விழைந்து என்ன பயன்? குளக்கருவூரில் சேறுமெத்த நிற்பதை உணர்ந்தார்; நம்பனை ஆதியை நான்மறை ஓதியை செம்பொனின் திகழ்கின்ற சோதியை கொம்பேறிக் கும்பிடக் குறிக் கொண்டார்.

அன்று முதல் வாழ்வில் ஒட்டியும் ஒட்டாதும் வாழத் தலைப்பட்டார். இதனை அறிந்த பெற்றோர்கள் மணமானால் மனம் மாறும் என்று நினைத்தனர். ஐதராபாத்திலுள்ள தம் மரபினரிடம் பெண் பார்க்கச் சென்றனர். அதனை அறிந்த பிள்ளைப் பெருந்தகை அந்தோ! இவர்கள் மேற்கொண்டது என்னைப் பிறவிப் பெருங்கடலில் ஆழ அமுக்கும் பெருங்கல் அன்றோ? "கக்கிவிட்ட சோறும் கறியும் கண்ணுக்கு அசுத்தமன்றோ?" ஏனோ இச்செயலை மேற்கொண்டனர் என்று எண்ணமிட்டவராய், "தந்தை தாய் தமர் இவரெல்லாம் சந்தையிற் கூட்டம்," "நெஞ்சே ஆரலைந்தாலும் நீ அலையாதே, ஊரலைந்தாலும் ஒன்றையும் நாடாதே" எனத் தமது உள்ளத்திற்கு அறிவுறுத்திப் புறப்பட்டுவிட்டார். "பற்றது பற்றில் பரமனைப் பற்றுமின்" என்றபடி பரமனைப் பற்றி நிற்க தனி இடந்தேடி தென்னாடு நோக்கி நடந்தார். வழியில் உள்ள தலங்கள் பலவற்றுள் கோயில்கொண்டுள்ள பரமனைத் தொழுதுகொண்டே வந்து தொண்டைநாட்டை எய்தினர்.

திருவிரிஞ்சை தொண்டைநாட்டுத் தலங்களில் ஒன்று. அவ்வூரையடுத்து நிற்பது வேலூர். நல்லியக்கோடனது

வேண்டுகோளுக்கிணங்கி பகைவர் படைகளை அழித்து சக்தி வேல் மீண்ட இடமாதலால் வேலூர் எனப்பட்டது. அவ்வூரில் வந்து சில தினங்கள் தங்கினர். மனம் தவத்தை நாடியது. மனம் என்னும் குதிரையை வாகனமாக்கி அதன் மேல் மதி யெனுங் கடிவாளமிட்டு, சினமெனும் சேணத்தில் சீராயேறிச் செலுத்த விழைந்தார்; மக்கள் நடமாட்டமுள்ள அந்த இடம் ஏற்றதல்லவென்றெண்ணினர்; அவ்வூரையடுத்துள்ள காட்டில் நுழைந்து ஒடுக்கத்தூர்க்காட்டை அடைந்து, காணுற்றங் கரையில் தக்கதோர் இடத்தைக் கண்டார். தியானத்திற் குரிய நல்லிடம் அதுவேயெனத் தேர்ந்து அங்கு அமர்ந்தார்.

''காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனைஈசனுர்க்குப் போற்றவிக் காட்டினேமே''—அப்பர்

''உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானுர்க்கு வாய்கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கங்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே''—திருமூலர்

என்னுமாப் போல் பட்டி ஐந்தைப் பக்குவமாய் அடக்கி, அன் பெனும் நன்மலர் தூவி பரமானந்தத் தேவன் அடியிணையில் நாட்டங்கொண்டார். இங்ஙனம் அடிமலரில் அன்பு கொண்டு பரன்புகழ் கற்றுக் கருதும் நியமமும், வருந்தித் தவஞ்செய்யப் பல்வகை ஆசனமும் பயின்று, பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி முதலிய அட்டாங்கயோகம் இயற்றி நிட்டை கூடினர்.

ஒருநாள், அரை ஆடை உடுத்து, கையில் சிறு கோலுடன் அடுத்துள்ள ஒருசிறிய குன்றில் ஏறிச்சென்றுர். அங்கோர் பாறையில் அமர்ந்து நிட்டை கூடினர். இரவு வந்தது, நிட்டை கலையாது அமர்ந்திருந்தார். மறுநாள், ஆடுமாடுகளை மேய்ப்போர் அங்கு சென்றபோது சுவாமிகள் எதிரே புலி,

ஓநாய், கரடி முதலிய விலங்குகள் படுத்திருப்பதைக் கண்டனர். அஞ்சி அகல நின்றனர். சுவாமிகள் நிட்டை கலைந்து விழித்து எழுந்தார்; எதிரே இருந்த விலங்குகளும் காட்டிற்குள் சென்று மறைந்தன.

இங்ஙனம் சுவாமிகள் பன்னாள் நிட்டைகூடி மூலாதாரத்தினின்றும் குண்டலினி சக்தியைத் தட்டி எழுப்பிப் பிரம்மரந்திரத்திற்கு உயர்த்தி, அதன்வழி பெருகிய அமிர்தம் உண்டு, அதனால் அணிமா முதலிய எண்வகைச் சித்திகள் கைவரப் பெற்றவராய், "கரையருகே நின்ற கானல் உவரி, வரை வரை என்பர் மதியிலா மாந்தர், நுரை திரை நீக்கி நுகர வல்லார்க்கு, நரை திரை மாறும் நமனு மங்கில்லையே" என்றபடி "ஈயில்லாத் தேனுண்டு", அகண்டாகார சச்சிதானந்த ஸ்வரூபரான இறைவன் திருவருளால் நிருவாண தீக்கைப் பெற்றுத் திகம்பரரானார். "ஒன்றோடு ஒன்று கூடில் ஒன்று கெடுங் காண்" என்பது போல் அவனே தானே ஆகிய அந்நிலை எய்தினார்.

சில சமயம் சுவாமிகள் நீர்பருக ஆற்றிற்குச் செல்வதுண்டு. நீர் பருகி அங்கே அமர்வார். அப்படியே நிட்டை கூட சமாதியில் அமர்ந்துவிடுவார். திடீரென்று ஆற்றில் வெள்ளம் பெருகும், இவ்விடத்தைவிட்டு எழார். வெள்ளத்தினும் போகார்; மணல் மேடிட்டு மூடிவிடும். உணவும் உடையும் இல்லை; குளிரும் அவருக்கில்லை; மணலுக்குள் புதைந்த சுவாமிகள் தாமே மெல்ல எழுந்து செல்வார். இப்படி ஒரு சமயம் ஆறு தினங்கள் மணலுக்குள் இருந்தனர் என்று கூறப்படுகிறது.

உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்த சுவாமிகள் உடம்பினுள் உறுபொருள் கண்டார்; அதனால் உடம்புளே உத்தமன் கோயில் கண்டார். ஆகையால் உடம்பினை ஓம்பி ஒவ்வோர் சமயம் கந்த மூலாதிகளையுண்டு கானுற்று நீர் பருகிக் காலம் போக்கினார். உச்சிக்கு மேற்சென்று உயர

வெளிகண்ட சுவாமிகள்; இச்சையற்றிருந்தாரென்று சொல்லவும் வேண்டுமோ! முத்திபெற்று உள்ளே முயங்கும் மெய்ஞ்ஞானிக்கு பத்தியம் இல்லையல்லவா? ஆகவே பாலும் பழமுமே வேண்டுமென்ற நியதியில்லை.

"ஆடும் இறையின் சித்திரக்கூத்தை தினந்தினங்கண்டார் நித்திரை கெட்டு நினைவோடிருந்தார்", முத்தமிழ்க் கற்று முயங்கும் மெய்ஞ்ஞானியாகிய சுவாமிகள் சத்தமின்றி ஆடம்பர ஆரவாரமற்று காஞற்றங்கரையில் இருந்து வந்தார். இறைவன் உணர்த்த ஊர் மக்கள் அறிந்தனர்; நாடும் அறிந்தது; அவர் இருக்கும் இடந்தேடிப் பலர் வந்தனர்.

சுவாமிகள் சமாதி கலைந்ததும், கருத்தின்றிப் பல இடங்களில் சென்று அமர்வார். அவற்றுள் அகரம், தருமராஜா தோப்பு. மகமதுபுரம் முதலிய இடங்கள் குறிப்பிடத்தக்கவையாகும். அப்படி ஒரு நாள் அகரம் போகும் வண்டிப்பாதையில் அமர்ந்திருந்தவர் நிட்டை கூடினார். அந்த வழியே வண்டி ஒன்று வந்தது. வழியில் இவர் அமர்ந்திருப்பதைக் கண்ட வண்டிக்காரன் இறங்கி சுவாமிகள் அருகே வந்து எழுந்து போமாறு பல முறை உரக்கக் கூவினான். அவர் நிலையை உணராத வண்டிக்காரன் அசைத்து எழுப்பினான்; எழாமையால் அப்பால் எடுத்துவைக்க முயன்றான். அட்டமாசித்திகள் கைவரப்பெற்ற சுவாமிகளை எடுக்கவோ அசைக்கவோ முடியாது. அட்டமா சித்தியில் இது "கரிமா" எனப்படும் (இலகுவாயிருக்கும் யோகியையெடுத்தால் மலைபோல் கனத்திருப்பதாகும்).

இதனை அறியாத வண்டிக்காரன் சுவாமிகள் பிடிவாதங்கொண்ட ஒரு உன்மத்தன் என மதித்துப் பாரமேற்றிய வண்டியை அவர் மேல் ஓட்டிவிட்டான். சக்கரம் திருமேனியிற் பட்டதும் அவ்வளவுதான் வண்டிக்குடை சாய்ந்தது; மாடுகள் மயங்கி வீழ்ந்தன; வண்டிக்காரனும் வீழ்ந்தான். அவன் தெளிந்து எழுந்து கண்ட போது அவர் அங்கில்லை. வண்டியை ஓட்டிச்செல்ல நெடுநேரமாயிற்று. அவனால் ஊர் முழுதும் இச்செய்தி பரவியது.

"கண்டனுங் கண்டியுங் காதல் செய்யோகத்து
மண்டலங் கொண்டிரு பாலும் வெளிநிற்கும்
வண்டியை மேற்கொண்டு வானீர் உருட்டிடத்
தண்டொரு காலுந் தளராது அங்கமே"

எனவரும் அருள்வாக்கு அறிந்து இன்புறத்தக்கது.

ஒடுக்கத்தூர் மக்களும், சுற்றுப்புறங்களிலிருந்தும் மக்கள் திரண்டு வந்து விரும்பி உபசரிக்க முற்பட்டனர். சுவாமிகள் சில சமயங்களில் ஏற்று விரும்பி உண்பார். பல சமயங்களில் அவர்களைக் கண்டதும் காட்டுக்குள் ஓடி மறைந்து விடுவார். பின் தொடர்ந்து வருவாராயின், அடர்ந்த நாகதாளிப் புதரிடையே புகுந்து மறைவார். சென்றவர் செய்வதறியாது திகைத்து மீள்வர். முள்ளோ, கல்லோ அவரை உறுத்துவதில்லை. மலர்ந்த முகத்தோடு காட்சியளிப்பார். பொறி புலன்களை வென்ற ஆத்ம ஞானியாதலின் முள்ளும் கல்லும் உறுத்தாவாயின. மலர் அமளியும் அவர்க்கு மகிழ்வைத் தாராது.

நெற்பயிர் அருகே புற்பூண்டும், நெல்லிடையே பதரும் இருப்பதைக் காண்கின்றோம். அது போன்று நல்லோரிடையே சில புல்லியர்களும் உண்டு அல்லவா? சுவாமிகளைக் காண வந்தவர்களில் சிலர் அவரைப் பரிசோதிக்கவெண்ணி சில தீமைக்குள்ளாக்கினர். அதனையும் பொறுத்து ஓவியம் போல் அமர்ந்திருப்பார். நெறிவழிச் சென்று நேர்மையுள் ஒன்றித் தறியிருந்தாற்போல் தம்மையிருத்திச் சொறியினுந் தாக்கினும் துண்ணென்றுணராக் குறியறிவாளர் குறிக்கோளும் அதுவே.

சவ்வாது பூனையின் எதிரே ஊன்றியுள்ள தறி முழுவதும் (புனுகு) நறுமணம் வீசும். ஞானியின் திருமேனி முழுதும் அமிர்தமயமானது; அருள் நிறைந்தது. கரந்தொட்ட இடமும் கால்பட்ட இடங்களுஞ்சிறக்கும். சுவாமிகள் இருக்கும் காணுற்றங்கரையை நோக்கித் தீராநோய் கொண்ட பலர் திரண்டு வருவர். மந்திரமோ, மருந்தோ சுவாமிகள் கொடுப்பதில்லை,

சிலரைக் காலால் உதைத்துத் தள்ளுவார், சிலரைத் தலை மேலும் முதுகின் மேலும் அடிப்பார் அவ்வளவுதான். ஆண்டுகள் பல சென்ற நோயாயினும் அக்கணத்தில் மறையும். அங்ஙனம் நோய் நீக்கப்பட்டாரது வழியினர் இன்றுமுளர்.

சுவாமிகளது மகிமை எங்கும் பரந்தது. நாற்றிசையினின்றும் மக்கள் கூடினர். ஒடுக்கத்தூர் காஞற்றங்கரை ஒரு சிதம்பரமாயிற்று. அப்படி வந்த பக்தர்களுள் பெங்களூரைச் சார்ந்த அரசமாநகர் என்னும் அலசூரில் வாழ்ந்து வந்த நாகாபாய் அம்மாள் தலையாயவர். இவ்வம்மை சுவாமிகளது அருளாற்றலை உணர்ந்து பணிந்து பணிசெய்யத் தலைப்பட்டனர். ஒடுக்கத்தூரில் தங்கிக் காஞற்றங்கரையில் பகல் முழுதுமிருந்து திருவடித்தொண்டு செய்து வந்தனர். இவ்வம்மை படைக்கும் உணவை ஒருபோது உண்பார்; சிலபோது வீசியெறிந்துவிட்டு ஓடிவிடுவார்; அவர் பல தினங்கள் சுவாமிகளைத் தேடி அலைந்ததுண்டு. பின்னர் அன்பர்கள் துணை கொண்டு தேடுவார். ஒரு சமயம் அப்படிச் சென்றவர் குடியேற்றத்தில் இருப்பதைக் கேள்வியுற்று திரு. முனிசாமி நாயுடு, சுப்பா நாயுடு முதலியோருடன் சென்று அழைத்து வந்தார்.

ஒரு நாள் சுவாமிகளைத் தரிசிக்கப் பலர் திரண்டு காஞற்றங்கரைக்கு வந்தனர். கூட்டத்தினரைக் கண்டதும் சுவாமிகள் எழுந்து காட்டுக்குள் ஓடிவிட்டார். மாலையில் வரக்கூடுமென்று தாங்கள் கொண்டு வந்த பழங்கள் முதலியவற்றோடு அங்கிருந்தனர். எங்கும் இருள்சூழ அந்தி வந்தது; சுவாமிகள் வரவில்லை. சிலர் வீடு திரும்பினர்; சிலர் அங்கே தங்கினர் இரவு கழிந்து பொழுது புலர்கின்ற நேரத்திலும் சுவாமிகள் வாராமையால் அன்பர்கள் தேடிச்சென்றனர். நெடுந்தொலைவிலிருந்த நாகதாளிப் புதரில் ஓருருவம் புலப்பட்டது. நெருங்கிக் கண்டோர் திடுக்கிட்டனர். சுவாமிகள் சமாதியில் அமர்ந்திருந்தார். அவரது தலையின் மேலும், கழுத்தின் மேலும் பாம்புகள் சுற்றிக்கிடந்தன. மக்கள் பேச்சரவஞ்

கேட்டதும் நச்சரவங்கள் நகர்ந்தன. மக்கள் மகிழ்ந்து ஆடிப் பாடித் துதித்தனர். சுவாமிகள் சமாதி கலைந்து வெளிப் போந்தார். பக்தர்கள் வருந்தி அழைத்துச் சென்று வழிபாடாற்றினர்.

இவ்வருளாளர் இங்குத் தங்க வாய்த்த காலத்தில் ஓராண்டு வேனில் வெம்மையில் காஞறு வற்றியது; மரங்கள் தீய்ந்தன; பசும்புல் காண்பதே அரிதாயிற்று. ஆடுமாடுகளுக்குத் தீவனமில்லை. கோடையின் கொடுமையால் குடிமக்கள் வருந்தினர். ஒடுக்கத்தூர் மக்கள் ஒருங்கு கூடினர். சுவாமிகளை அடுத்துப் பணிந்து நின்றனர். மக்களைக் கண்டு மருகியோடாது மலர்ந்த முகத்தோடு அவர்களைப் பார்த்து 'சனிக்கிழமை மழை வரும் போ' என்ருர். கூருமலே அவர்கள் குறிப்பறிந்து அருள் செய்தார். அவ்வண்ணமே மழையும் பெய்து ஊரும் செழித்தது; மக்கள் மகிழ்ந்தனர். அவ்வூரார் முன்னையினும் பன்மடங்கு பக்தியும் வினயமும் உடையவராயினர். சுவாமிகள் சில சமயம் சிரிப்பார், களிப்பார், தேனிப்பார், கைகொட்டிப் பாடுவார், ஆனந்தக் கூத்தாடுவார், ஓடுவார், தாமே பேசி அமர்வார்.

சுவாமிகள் மதனபள்ளிக்கருகேயுள்ள தோப்பிலும் நகரத்திலும் தங்கி இருந்த காலத்தில் ஓர் நாள் வீதி வழியே சென்றவர் ஒரு வீட்டில் திண்ணை அருகே நின்றிருந்தார். வீட்டிற்கு உரியவன் வெளியே வந்தான். அவன் ஒரு கயவன். கல்வியறிவில்லாதவன். சுவாமிகள் தன்வீட்டருகே நின்றதைப் பெரும் பேறெனக் கருதாது வேருகக் கருதி அடித்துத் துன்புறுத்தினுன் பாவி. நிற்கவொட்டாமல் விரட்டினுன். சுவாமிகள் அங்கிருந்து அகலுமுன் அவன் வீடு தீக்கு இரையாயிற்று. 'பரபோதம் உணர்ந்தவர் புண்ணியத்தோரே' எனவும், 'துரியங்கடந்து துரியாதீதத்தே—அரிய வியோகங் கொண்டம் பலத்தாடும்—பெரிய பிரானைப் பிரணவக் கூபத்தே—துரிய வல்லார்க்குத் துரிசில்லை தானே' எனவும் அருளியிருப்பதனை அறிந்தவர்கள் எத்துணைப்பேர்? மிகச்சிலரேயாதலின் இத்தகைய தீமைகள் நிகழக் காரணமாகிறது.

மற்றோர் சமயம் ஓலக்காசி யென்னுங் கிராமத்தின் வீதி வழியே அவதூதராகச் சென்று கொண்டிருந்தார். அப்பகுதி முகம்மதியர்கள் குடியிருப்பாகும். சுவாமிகளைக் கண்டனர். அவரை உணர்ந்துகொள்ளாது துரத்தினர்; கல்லும் மண்ணும் விட்டெறிந்து, சொல்லொணுத் துன்பத்திற்காளாக்கினர். நெடுநேரம் பொறுத்தும் விட்டுப் போவதாகத் தெரியவில்லை. வினைவிளையுங் காலமாதலின் எங்ஙனம் செல்வர்? செல்லா ரன்றோ? சுவாமிகள் தம்மருகேயிருந்த மணலை வாரி வீட்டின் மேல் எறிந்தார்; அவ்வளவு தான்; பல வீடுகள் பற்றிச் சாம்ப லாயின. அம்முகம்மதியர்கள் அஞ்சி யகன்றனர். பின்னர் பலவாறு முயன்றும் அவ்வீடுகள் கட்டப்படவில்லை. அவை இன்றும் குட்டிச் சுவராகவே காட்சியளிக்கின்றன.

'ஈசனடியார் இதயங் கலங்கிடத்
தேசமும் நாடும் சிறப்பும் அழிந்திடும்
வாசவன் பீடமும் மாமன்னர் பீடமும்
நாச மதாகுமே நந்நந்தி ஆணையே'

என்னும் உறுதி உரை (சத்தியவாக்கு) அடியார்க்கு ஊறு செய்யின் இந்திரன் பதம் இழப்பான், மன்னருந் தம்மாண்பு இழப்பர் எனில் பிறர் செய்தி சொல்ல வேண்டுமோ? தவிர, இனி உளதாம் பிறவிகளில் சொறிநாயாய்ப் பிறந்து துன்புறு வர் என்றுங் கூறப்பட்டுள்ளது.

வானந்துளங்கினும், மண்கம்பிக்கினும், இருசுடர் வீழி னும் விலங்குகள் கலக்கினும் துளங்காமையன்றோ சிவஞானி யின் இயல்பு? பிறிதோர் சமயம் சுவாமிகள் ஒடுக்கத்தூர் வெளியில் ஒரு புற்று அருகே அமர்ந்திருந்தார். சிறிது நேரத் திற்கெல்லாம் நிட்டை கூடினுர். புற்றிலிருந்து வெளிப்போந்த அரவம் தேசோமயமாக விளங்கும் அவரது திருமுகப் பொலி வைக் கண்டுகொண்டே, ஆடி நின்றது. நெடும் பொழுதா கியும் பாம்பு புற்றினுள்ளும் செல்லாமல், புறத்தேயும் போகா மல் நின்றது. ஊர் அருகேயாதலின் மக்கள் கூடினர். மாலை நேரம் வந்தது. சுவாமிகள் நிட்டை கலைந்து நோக்கினுர்,

படமெடுத்தாடிய பாம்பு உள்ளே சென்றது. மக்கள் கூடியிருப் பதைக் கண்டதும் அப்பாலகன்று போயினர்.

சுவாமிகள் இத்தகைய சமாதி கூடலேயன்றி, சில சமயங் களில் வாய் பேசாது மௌனியாகவும் இருப்பதுண்டு. எதை யுங் கேளார்; எங்குஞ் செல்லார்; காற்றும் நீருமே அக்காலங் களில் அவர்க்கு உணவாகும். சில சமயம் அங்கு கிடைக்கும் கந்த மூலங்களை உண்பார். பக்தர்கள் தேடிக் கொணர்ந்து தரும் உணவையும் உண்பதுண்டு.

இங்ஙனம் சுவாமிகள் மௌன விரதங் கொண்ட சமயம், ஒரு கம்மாளன் 'மௌனத்தைக் கலைக்கிறேன் பாருங்கள்' என்று கூறிச் சென்று கண்மூடி அமர்ந்திருந்த சுவாமிகளது தாடிக்கு நெருப்பு வைத்தான். அது பற்றி முழுதும் எரிந்த போதும் சுவாமிகள் அஞ்சி அலறவில்லை; சமாதியுங் கலைய வில்லை. சில தினங்கள் கழிந்த பின்பே சமாதி கலைந்து எழுந் தார். இத்தீயினல் சுவாமிகட்கு ஒரு தீங்கும் அணுகவில்லை. ஆனல் அந்தப் பாவி தன் நல்வாழ்வுக்குத் தீவைத்துக் கொண் டான். சில தினங்களில் அவனுக்குப் பித்துப் பிடித்தது; பிச்சையெடுத்து அலைந்து, பல ஆண்டுகள் திரிந்து சுமார் 5, 6 வருடங்கட்கு முன்புதான் இறந்துபட்டான்.

வீதி வழியே வந்த சுவாமிகளின் மனநிலையை உணராத பாபியொருவன் அவரை புளியம் மலாறினல் மனங்கொண்ட மட்டும் அடித்தான், குருதி பீறிட்டது. ஆயினும் சுவாமிகள் மலர்ந்த முகம் மாருமல் அமர்ந்திருந்தார்; பலர் கூடினர். அடித்தவனும் அலுத்து வீடு திரும்பினன். 'அந்தோ' அங்கே அவன் கண்ட காட்சி என்ன? தன் மனைவியும் மக்களும் மடிந் திருக்கக் கண்டான், ஐயோ! வென அலறி வீழ்ந்தான், அவனு வியும் அகன்றது.

இந்நிகழ்ச்சி சுவாமிகளது பேரருட்குத்தகுமா? முறை யாமா? திருத்துவதன்றோ சன்மார்க்கம்? இன்னோன்ன வினக் கள் எழக்கூடும். உண்மை எதுவாயினும் இத்தகைய பேதை

மகனைத் திருத்தவே முடியாது. அவனை உள்ளிட்டார் பாவம் போக்கி இனியும் தீவினைகள் மிகாவண்ணம், மறுமையில் அவனை ஆட்கொள்ள வேண்டியாம். தவிர வினைக்குரிய பயனை நுகர்வோன் செய்தவனையன்றி வேறு யார்? மேலும்,

பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்
அத்தமும்ஆவியும் ஆண்டொன்றில் மாண்டிடுஞ்
சத்தியம் ஈது சதாநந்தி ஆணையே

என்று திருமூலர், ஞானிக்குத் தீமை செய்தவன் தப்பமுடியா தென்று நந்தியின் மேல் ஆணையிட்டல்லவா கூறுகின்றார்.

அதன் பின்னர் சுவாமிகள் ஒடுக்கத்தூர் கானாற்றங் கரையை விட்டு மதனபள்ளியடைந்து சிலகாலம் அங்குத் தங்கி இருந்தார்கள். அச்சமயம் பெங்களூர் நாகாபாய் அம்மாள் சுவாமிகளை பெங்களூருக்கு அழைத்துப் போக எண்ணி முயன் றார். அறிந்த சுவாமிகள் காட்டிற்குள் நுழைந்து மறைந்தார். பன்னாள் முயன்றும், காண முடியாமையால் பெங்களூர் திரும்பினார்.

சில ஆண்டுகள் கழிந்தன. மீண்டும் நாகாபாய் அம்மாள் குடியேற்றம் திருவாளர்கள் முனிசாமி நாயுடு, சுப்பா நாயுடு முதலிய பக்தர்களுடன் சென்று சுவாமிகளைத் தேடிக் கண்டு, பன்முறை வணங்கி வேண்டினர். ஒப்புக்கொண்ட பாவனை யோடு தலையசைத்தார். மதனபள்ளி இரயில் நிலையத்திற்கு முயன்று அழைத்து வந்தனர். இரயில் அதிகாரிகளிடம் இவர் நிலையை முன்னதாகவே எடுத்துக்கூறித் தகுந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தது. இருந்தும் என்ன? வண்டியில் ஏற மன மில்லாமல் விரைந்து காட்டினுள் ஓடி மறைந்தார்.

வருந்திய உள்ளத்துடன் மீண்ட திருமதி நாகாபாய் அம்மையார் பல அன்பர்களின் துணைகொண்டு சுவாமிகளைக் காட்டினுள் தேடிக்கண்டார். மதனபள்ளிக்கு அழைத்து

வந்து காத்து நின்றார். பெங்களூர் வர திருவுளம் பற்ற வேண்டினர். பல தினங்கட்குப் பின்னர் சுவாமிகள் இணங்கியது போல் தோன்றியது. முனிசாமி நாயுடு முதலியோர் துணை கொண்டு ஒரு இரட்டை மாட்டுவண்டியை ஏற்பாடு செய்தனர். சுவாமிகளை ஏற்றி அமர்வித்தனர்; வண்டியும் புறப்பட்டது; அவர் மகிழ்ச்சிக்கு அளவு இல்லை.. ஆனால் அம் மகிழ்ச்சி நெடுநேரம் நிற்கவில்லை. வண்டி போகும்போதே குதித்து ஓடத்தலைப்பட்டார். பின் தொடர்ந்து ஓடி, திருவடிகளில் வீழ்ந்து பற்றித் தம்முடன் எழுந்தருளுமாறு வேண்டி அழைத்து வந்து வண்டியில் அமர்வித்தனர். இப்படிப் பல முறை இறங்குவதும், மனம் திரும்பினால் தொடர்ந்து பிரயாணம் செய்வதுமாகப் பெங்களூர் வந்து சேர்ந்தனர்.

சுவாமிகள் அலசூரில் தங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. சுவாமிகளும் அங்குத் தங்கியருள இசைந்தார். அதுகாலை அன்புமிக்க கருப்பண்ண செட்டியாரவர்கள் அவர்க்கு நண்பகல் உணவு ஊட்டி வந்தார். அவர் தரும் உணவைச் சுவாமிகள் விரும்பி உண்டருளுவது வழக்கம். அதனைக்கண்டு மகிழ்வதே செட்டியாரவர்களது செம்மனம்.

சுவாமிகள் பெங்களூர்க்கு எழுந்தருளியது முதற்கொண்டு அவரைத் தரிசித்தோரும், வணங்கி வாழ்வு பெற்றோரும், வழிபட்டு மிடிபாட்டை நீக்கிக் கொண்டாரும் பல்லோராவார். அலசூர் அருணசலம் பிள்ளைக்கு ஏற்பட்ட பெருநோய் சுவாமிகளது தரிசனத்தாலும், ஸ்பரிசத்தாலும், நீங்கியது. பிள்ளை அவர்கள் தாம் அணிந்திருந்த குல்லாயைச் சுவாமிகள் திருமுடியிற் சூட்டிப் பின்னர் தம் ஆயுள் பரியந்தம் அதைப் பிரசாதமாக அணிந்து கொண்டிருந்தார் என்று கூறப்படுகிறது.

இதுபோல ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் என்னும் துறவி தம்மைப் பல்லாண்டுகளாக வருத்தி வரும் சூலை நோயால் பெரிதும் வருந்தி மருந்துகள் பல அருந்தியும் தீராமையால் சுவாமிகளைத் தரிசித்து அவர் திருவடிகளைப் பற்றிக்

கொண்டு சூலை தீர்த்தருளக் கதறி அழுதனர். அருள் ஞானி யின் அகம் மலர, முகமலர்ந்துத் திருக்கண் சாத்தியருளினர். அவ்வளவில் சூலை நோய் தீர்ந்தது. மகிழ்ந்த துறவி. சுவாமி களிடம் பேரன்பு கொண்டு வாழ்ந்து வந்தார். சுவாமிகளது திருவருட் கருணையால் வாழ்வு பெற்றுயர்ந்தோர் பல்லோர், இன்றும், பெற்று வாழ்ந்து வருவோர் மிகப்பலராவர். அவர் திருவடிக்குத் தினையளவு உதவி, பனையத்தனைப் பெறுவோர் பன்னூறு பேர்.

மற்றும், சுவாமிகளது தொண்டர்களில் ஒருவராகிய திருமதி மீனாட்சியம்மாளின் மகனை ஓர் குதிரை உதைக்க அவ் வடி அவன் கண் மீது தாக்க, அதனால் அம்மகன் கண்கள் பழுதுபட்டன. பெரிய மருத்துவர்களும் பார்த்துக் கைவிட்ட னர். கண்ணிழந்த மைந்தனுடன் சுவாமிகள் காலடியில் வந்து வீழ்ந்தனர். சுவாமிகள் மனமகிழ்ந்து அம்மைந்தனை நோக்கியருளினர். அம்மைந்தன் இழந்த கண்ணும், பார் வையும் பெற்றுச் சுகமுற்றான். இங்ஙனம் பக்தர்கள் பலர்க் கும் அருள் புரிந்து, அற்புதங்கள் பல நிகழ்த்தி இவ்வூர் ஏரிக் கரை அருகிலுள்ள நந்தவனத்தில் ஆனந்த ஆண்டு தைத் திங்கள் 22ஆம் நாள் (16-2-1915) சுக்கிரவாரம் சுவாதி நட் சத்திரம் கூடிய சுபதினத்தில் வைகறைப் போதில் அடியார் பலர் அங்கிருக்க அடிப்படை நிட்டை கூடியிருந்த சுவாமிகள் பரிபூரண சமாதி எய்தினர்.

சுவாமிகள் பாலர்க்குப் பாலனாய் விளையாடி மகிழ்வார். அங்ஙனம் சுவாமிகளிடம் தம் இளம் பருவ முதல் அன்பு கொண்டு விளையாடி மகிழ்ந்தவர் அலசூர் திருவாளர் பழநி வேலு முதலியாராவார். சுவாமிகளுக்குத் தரும் உணவுப் பொருளையும் அவருடன் உண்டு திரிந்தவர். அவர் அப் போது நிழல் படம் (போட்டோ) எடுக்கும் தொழில் பயின்று வந்தார். ஒரு நாள் ஏரி அருகே இருந்த புதரில் சுவாமிகள் சாய்ந்தவாறு அமர்ந்து நிட்டை கூடியிருந்ததைக் கண்டதும் விரைந்து அவரறியாமல் ஒரு படம் (போட்டோ) எடுத்தார்.

சுவாமிகளது திருமேனியை நெருப்பும், மழையும் நெருங்க வில்லை, கல்லும், முள்ளும் உறுத்த அஞ்சின; இடியும் மின்ன லும் இரிந்து ஓடின. இத்தனைக்கு மேலாக அவற்றைச் சம நோக்குடன் கருதி அசைவற்றிருந்த சுவாமிகளது திருவுள் ளம், சமரஸ ஞானம் ஈடற்றதாகும்.

இவரைத் தரிசித்து ஞானம் பெற்ற துறவிகளும் பலர் உண்டு. அவருள் அத்வைத ஞானி அருட்டிரு வையாபுரி சுவாமிகள், ஓமாநகர் அருட்சித்தர், தொடை தட்டி அருணா சல சுவாமிகள், பழநி அற்புதவாணர், மதுரை சட்டி சுவாமி கள், தவத்திரு செல்லப்ப சுவாமிகள், ஸ்ரீமத் நாராயண சுவாமிகள் முதலியோர் சிறப்புடையவர்கள்.

சுவாமிகளுக்கு வேண்டிய பணிவிடைகளை பக்தியோடு செய்து பயனடைந்தவருள் குடியேற்றம் முனிசாமி நாயுடு, இரத்தின முதலியார், ஓவர்சியர் முத்துகிருஷ்ண முதலியார், புங்கனூர் சமஸ்தானம் துரை பசுவராஜா, வீரசைவ சித்தலிங் கப்பா, அலசூர் நாகாபாய் அம்மாள், மீனாட்சி அம்மாள், நாராயணசாமி செட்டியார், கருப்பண்ண செட்டியார், அருணா சலம் பிள்ளை முதலியோர் சிறந்தவர்கள். முக்கிய சீடர்களும் இவர்களாவர். ஸ்ரீமான் அருணாசலம் பிள்ளை அவர்கள் சுவாமிகள் அருளால் வறுமை நீங்கி நல்வாழ்வு பெற்றவர். சுவாமிகளைத் தரிசிக்காமல் உண்பதில்லை. சுவாமிகள் பரிபூரண சமாதி எய்திய பின்னரும் தமது இறுதி நாள் வரை திருமடத்தில் நந்தவனம் வைத்துத் தாமே நீரிறைத்து, மலர் பறித்து, மாலை தொடுத்துத் தொண்டு செய்து வந்தார்.

சுவாமிகள் இரத்தினபுரியில் அவதரித்திருப்பினும், ஞானம் பெற்று சமாதி கூடியது ஒடுக்கத்தூராதலின் ஸ்ரீ ஒடுக் கத்தூர் சுவாமிகள் எனப்பட்டார். மதனபள்ளி, ஒடுக்கத்தூர், கொண்டித்தோப்பு, பூனா, பெங்களூர் முதலிய இடங்களில் சுவாமிகளின் பெயரால் மடங்கள் அமைத்து சமரஸ சன்மார்க் கப்பணி நடத்தி வருகின்றனர். இவற்றுள் பெங்களூர் திரு மடம் மிகச் சிறந்த முறையில் பணியாற்றி வருவது குறிப்பிடத் தக்கதாகும்.

எய்தி வழிப்படில் எய்தாதன வில்லை
எய்தி வழிப்படில் இந்திரன் செல்வமுன்
எய்தி வழிப்படில் எண்சித்தி உண்டாகும்
எய்தி வழிப்படில் எய்திடும் முத்தியே,''

என்றபடி சுவாமிகள் திருக்கோயில் வழிபடுவோர் எல்லா இன்பமும் எய்தி நீடுவாழ்வர்.

ஆசிரியர் குறிப்பு:- பெங்களூரில் சுவாமிகள் சமாதியும் மடமும் அல்சூர் ஏரிக்கெதிரில் மிகவும் ரமணீயமாக அமைந்துள்ளது. சுவாமிகளின் சமாதியைத் தவிர, விநாயகர் தண்டாயுதபாணி, காமாக்ஷியம்மன், பாலசுப்ரமணியர் சந்நிதிகளும் மிகச்சிறந்த முறையில் பரிபாலிக்கப்பட்டு வருகின்றன. நாளுக்கொரு அலங்காரம், வேளைக்கொரு அழகு. தமிழ் நாட்டில் பல புராதன ஆலயங்கள் தீப எண்ணெய்க்கும் வழியில்லாது இருளடைந்திருக்கும் வேதனையை நோக்கும் போது, இம்மாதிரி திருமடங்களின் நிர்வாகிகள் சந்நிதிகளை அழகாகவும், சுத்தமாகவும், பிரகாசமாகவும் வைத்திருப்பது போற்றத்தக்கது. திருமடத்தில் சொற்பொழிவுகள் நடைபெற ஜோதி மன்றம் என்ற பெயரில் பெரியதொரு சொற்பொழிவுக் கூடத்தையும் அமைத்துள்ளார்கள். இத்திருமடத்து முகவரி, 13, கங்காதர செட்டி சாலை, பெங்களூர்-560 042. பெங்களூர் செல்பவர்கள் இத்திருமடம் சென்று வழிபட்டு அருள் பெறலாம்.

இத்திருமடத்தில் இவ்வருட கந்தஷஷ்டியை முன்னிட்டு 13-11-85 முதல் 22-11-85 வரை 10 நாட்கள் கந்தபுராணச் சொற்பொழிவு செய்யும் வாய்ப்பு ஆசிரியருக்குக் கிடைத்தது. சுமார் ஐந்து ஆண்டுகளாக நிறைவேருதிருந்த ஆசிரியரின் ஒரு மனக்குறை இந்த திருமடத்துச் சொற்பொழிவின்போது நிறைவேறியது என்பதை மிகவும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிரேம்.)

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்



# சிந்தனைத் திரட்டு

திரு. R. C. கதிர்வேல் முதலியார், B.A.

அலுவலர், விஜயகுமார் மில்ஸ் லிமிடெட்,
கலயம்புத்தூர் P.O.—624615 (வழி-பழநி)

[பதிப்பாசிரியர் குறிப்பு: — பழநியில் மிகவும் சிறப்புடன் விளங்கிய சிவத்திரு ஈசான சிவாசாரிய சுவாமிகளின் மாணவரான திரு. R. C. கதிர்வேல் முதலியார் அவர்கள் சைவசாத்திரங்களிலும் திருமுறைகளிலும் (சிறப்பாகப் பெரிய புராணம், தேவாரம்) மிக்க பற்றுள்ளவர். நமது மூவர் தமிழ்மாலை வெளியீட்டில் 17வது தமிழ்மாலைக்கான முழுச்செலவையும் ஏற்றுக்கொண்டவர். தம் சிந்தையில் தோன்றிய சில கருத்துக்களை நம் வாசக அன்பர்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்பி நமக்கனுப்ப, அவற்றைத் தொகுத்து வெளியிட்டுள்ளோம்.

—ஆங்கீரஸ சர்மா]

## 1

சேக்கிழார் புராணத்தில் நால்வர் பெருமைகளைக் கூறித் துதிக்கவந்த உமாபதி சிவம், திருஞானசம்பந்தரைக் கூறும்போது ''பூழியர் கோன் வெப்பொழித்த புகலியர் கோன் கழல் போற்றி'' என்று சொல்லுவதன் கருத்து என்னவென்று சிந்தித்தேன். பூழியர்கோன் (பாண்டியன்) வெப்பொழித்த

தையே திருஞானசம்பந்தரின் மற்ற எல்லா அற்புதச் செயல்களைவிடப் (பூம்பாவையை உயிர்ப்பித்ததையும்விடப்) பெருஞ் செய்கை என்பதே அவரது கருத்தாக இருக்கக்கூடும் என்று தோன்றுகிறது. இதற்குக் காரணம் என்னவாக இருக்கும் என்று யோசித்த போது சில சிந்தனைகள் தோன்றின. செம்பு அல்லது கல் பொன்னானால் அது ஒரு மாற்றம், (Transformation) ஒரு கிலோ செம்பு பாதி தங்கமாகவும் பாதி செம்பாகவும் இருப்பதென்றால் ஒரு பொருளில் ஒரு பகுதி பழைய தன்மையுடனும் மற்றொரு பகுதி புதிய தன்மையுடனும் (அதாவது பொன்னாகிறது) உளதாக ஆகிறது. செம்பும் கல்லும் ஜடப் பொருள். உயிருள்ள பொருளாகிய மனிதனிடத்தில் ஒரு பக்கம் தண்மையாகவும் (குளிர்ச்சி) மற்றொரு பக்கம் வெப்பமாகவும் இருப்பதென்பது எங்கும் காணக்கூடாத ஒன்றாகும். இப்படிப்பட்ட தன்மை பரம்பொருள் ஒருவருக்கே உண்டு. ஒரு பகுதி பெண் (தண்மை) ஒரு பகுதி ஆண் (வெப்பம்). இப்படியிருப்பவர் மாதொருபாகனான பரம்பொருள் மட்டுமேயன்றோ? அப்பரம்பொருளின் மகனாராதலின் தன் தந்தையைப் போலவே செய்தார் என்று தோன்றுகிறது.

இம்மாதிரி செய்யும் போது அதாவது பாண்டியன் உடலின் ஒரு புறத்து வெப்பினை முதலில் போக்கும் போது, இது மிகவும் அரிய செயல் என உணர்ந்தே போலும், பிள்ளையார் இறைவரால் அருளப்பட்ட வேதங்களைத் துதித்துத் திருநீற்றுப் பதிகம் பாடுகிறார். இச்செய்தியைக் கூறும் சேக்கிழார்பெருமானின் தெய்வம் மணக்கும் பெரியபுராணத் திருப்பாடலைக் கீழே காண்க.

தென்னவன் நோக்கங் கண்டு திருக்கழு மலத்தார் செல்வர்
''அன்னவன் வலப்பால் வெப்பை ஆலவாய் அண்ணல் நீறே
மன்னுமந் திரமு மாகி மருந்துமாய்த் தீர்ப்ப'' தென்று
பன்னிய மறைகள் ஏத்திப் பகர்திருப் பதிகம் பாடி

(திருஞானசம்பந்தர் புராணம்—764)

திருஞானசம்பந்தர் தன்னால் செய்யப்பட்ட பல அற்புதச் சம்பவங்களின் போது இறைவனுர் திருவருளை வழுத்திப் பாடினுர் என்று தான் சேக்கிழார் கூறுகிருர். இந்த ஒரு இடத்தில் மட்டும் "பன்னிய மறைகள் ஏத்திப் பகர்திருப்பதிகம் பாடி" என்று தெய்வப்புலவர் சேக்கிழார் கூறக் காரணம் என்ன? செய்கை அரியது, தாம் பாடுவதும் வேதமேயானுலும் எழுதா மறையைத் தாம் எழுதும் மறையாகப் பாடுவதால், அந்த மூல மறையைத் துதித்துப் பாடினுர் என்பதே எனது சிந்தனைக் கெட்டும் காரணமாகும்.

திருநீற்றுப்பதிகம் பாடி, திருவளர் நீறு கொண்டு திருக் கையால் தடவத் தென்னன் உடலின் வலப்பக்கத்து வெப்பு நீங்கிப் பொய்கை போல் குளிர்ந்தது. ஆனுல், அவ்வலது பக்க வெப்பும் கூடியது போல இடது பக்கம் மிக்க அழல் எனத் தீப்போல் பொங்கியது. இடது பாகத்து நோயைச் சமணர்கள் தீர்க்க இயலாது போக, மன்னவன் மொழியாகச் சேக்கிழார் கூறும் பாடலைப் பாருங்கள்

மன்னவன் மொழிவான் "என்னே! மதித்த இக்காயம் ஒன்றில்
வெந்நர கொருபா லாகும் வீட்டின்பம் ஒருபா லாகும்
துன்னுநஞ் சொருபா லாகும் சுவையமு தொருபா லாகும்
என்வடி வொன்றி லுற்றேன் இருதிறத் தியல்பும்" என்பான்.
(திருஞானசம்பந்தர் புராணம்—768).

இந்த நிலையைப் பொறுக்கவியலாத பாண்டியன் "வந்தெனை உய்யக் கொண்ட மறைக்குல வள்ளலே! இந்த வெப்பு முழுதும் நீங்க எனக்கருள் புரிவீர்" என்று திருஞானசம்பந்தரை வேண்டினுன். பிள்ளையார் இடது பக்கத்து வெப்பினைத் தீர்த்தருளிய செய்தியைக் கூறும் போதும் சேக்கிழார்" திருமுகம் கருணைகாட்டத் திருக்கையால் நீறுகாட்டிப், பெருமறை துதிக்கும் ஆற்றல் பிள்ளையார் போற்றிப் பின்னும், ஒருமுறை தடவ அங்கண் ஒழிந்து வெப்பகன்று பாகம், மருவு தீப்பிணியும் நீங்கி வழுதியும் முழுதும் உய்ந்தான்" என்று கூறுவது கவனத்திற்குரியது.

ஆகவே பாண்டியனைப் பற்றிய வெப்பு நோயினைப் போக்கு தற்கு முதல் முறையும் இரண்டாம் முறையும் திருஞானசம்பந்தப்பெருமான் மறைகளைத் துதித்தார் என்று தெரிகிறது.

## 2

மறையெனினும் வேதம் எனினும் ஒன்றே. "பேசுவதும் திருவாயால் மறை போலுங் காணேடீ" என்று மாணிக்க வாசகர் திருவாசகம் — திருச்சாழல் பதிகத்திலும் "வேத மொழியினர் வெண்ணீற்றர்" என்று அன்னைப் பத்திலும் கூறியிருப்பது காண்க.

## 3

வேதம் ஒரு பெரிய சமுத்திரம். அதனின்றும் (முத்தெடுப்பது போல) சிறந்தவற்றை முகந்து நம் நால்வர் பெருமக்களும் கூறியுள்ளார்கள்.

## 4

திருமயிலையில் திருஞானசம்பந்தர் எலும்பை பெண்ணாக்கினார். "மட்டிட்ட புன்னையங்கானல்" எனத் தொடங்கும் பதிகம் பாட அதில் 10வதான சமண பாட்டைப்பாடியவுடன் பூம்பாவை வெளியே வந்து விட்டாள். இதைக் கூறும் சேக்கிழார் பெருமானின் பாடலிலிருந்து ஒரு கருத்துத் தோன்றுகிறது. அதாவது பாட்டு வளர்ந்து கொண்டு போகுமோ, தான் மேலும் பாட வேண்டுமோ எனத் திருஞானசம்பந்தர் நினைக்க 10வது பாடல் பாடியதும் பூம்பாவை தோன்றிடக் கண்டு "விடுத்த வேட்கையர் திருக்கடைக்காப்பு விரித்தார்" என்று சேக்கிழார் கூறுகிறார். விடுத்த வேட்கையர் என்பதற்கு மேலும் பாடுதலில் உள்ள வேட்கையை விடுத்தவர் என்று பொருள் கொண்டால் இந்தக் கருத்து புலப்படும். இறைவர் திருவுள்ளம் எப்படியோ எனத் திருஞானசம்பந்தரே அஞ்சுகிறார் என்றால் நம் போன்றோர் நிலை என்ன?

# 5

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்கள் ''புழுத்த நாயினுங் கடைப்பட்ட நானு அவர்கள் (நால்வர்) பெருமையைக் கூறுவது'' என்று கூறுகிருர்கள். நால்வர் பெருமக்களுக்கு இறைவர் அருள் செய்தது பற்றி உலகியல் நிலையில் சில கருத்துக்களை வாசகர்களுக்குச் சமர்ப்பிக்கிறேன். திருநாவுக்கரசர் பெருமான் ஆண்டான் — அடிமை உறவு குறிக்கும் தாசமார்க்கத்தில் ஒழுகினுர். அவருக்குத் திருநீறளித்துத் தீட்சை செய்து சைவத்துக்குக் கொண்டு வந்தவர் தமக்கையார் திலகவதியாராவர். இங்கு ஒரு சிந்தனை. பெரிய முதலாளி முன் தன் பணியிலிருந்து போய் மீண்டும் வேலைக்கு வந்தவனை இனி சரியாக வேலை செய்வானு என்று தானே கேட்காமல் தனது உதவியாளர் மூலம் கேட்டுப் பணியில் பயிற்றுவித்தல் போலவுள்ளது இது. அடுத்தது திருநாவுக்கரசர் வாழ்வில் இறைவர் நேரே வருவது பிற்பகுதியில்தான். அதுவும் கனவில் 'வாய்மூருக்கு வா' என்று கூறிப் போவதாகும் (கயிலாயக் காட்சி தவிர). பெரிய முதலாளிக்குப் பல இடங்களில் கடைகள் உள்ளன. வேதாரண்யம் கடையில் கணக்கு சரியில்லை. முதலாளி தன் மகனையும் தலைமைக்கணக்கரையும் சரிபார்த்து வரும்படி அனுப்புகிருர். மகன் (திருஞானசம்பந்தர்) தலைமைக் கணக்கரை (அப்பரடிகளை) நீர் முதலில் கணக்கைப் பாரும் (கதவு திறக்கப்பாடுக) என்று சொல்லுகிருர். தலைமைக் கணக்கர் என்ன கூறியிருக்க வேண்டும்? தம்பி, எதற்கும் நீயே முதலில் பார், பிறகு நான் பார்க்கிறேன்'' என்று சொல்லியிருக்க வேண்டும். அதாவது அப்பரடிகள் திருஞான சம்பந்தரை, ''நீரே முதலில் திறக்கப் பாடுவீர்'' என்று கூறியிருக்க வேண்டும். பிறகு கணக்கையெல்லாம் சரி செய்த பிறகு (கதவு திறக்கவும் மூடவும் பாடிய பிறகு) மாலையில் இருவரும் முதலாளியிடம் போகிருர்கள். முதலாளி ஏதும் கேட்பதற்கு முன்னுடியே, தலைமைக்கணக்கர், ''தம்பி என்னை முதலில் கணக்கைப் பார்க்கச் சொல்லியது. நான் பார்த்தேன். பிறகு தம்பியும் பார்த்தது. இதில் தம்பிக்கும் திருப்திதான்''

என்று சொல்கிருர். முதலாளி பதில் ஒன்றும் சொல்லாது உள்ளே போய் விடுகிருர். தலைமைக்கணக்கருக்கு ஒரே பயம் வந்து விட்டது. தாம் முதலில் பார்த்தது முதலாளிக்குத் திருப்தியில்லையோ என்ற ஐயமே அச்சத்துக்குக் காரணம். என்ன செய்வார் பாவம்? வீட்டுக்கு வந்து கவலையுடன் அன்றிரவு ஒன்றும் சாப்பிடாது படுத்துக் கொண்டார். தூக்கமும் வரவில்லை. புரண்டு புரண்டு படுக்கிருர். பிறகு ஒருவாறு சிறிது உறக்கம் வர முதலாளி (இறைவர்) கனவில் வந்து 'வாய்மூருக்கு வா' என்று கூறிவிட்டுச் செல்கிருர். இது என் கொலோ என்று அப்பர் போக திருஞானசம்பந்தரும் இதையறிந்து தாமும் செல்கிருர். பிறகு இறைவர் பொற்கோயில் ஒன்று காட்டி அதனுள் மறைந்தருள அப்பர் பெருமான் ''பிழைத்துச் செவ்வி அறியாதே திறப்பித்தேனுக்கேயல்லால் உழைத்தாமொளித்தால் கதவம் தொண்டுறைக்கப் பாடி அடைப்பித்த தழைத்த மொழியார் உப்பாலார் தாமிங்கெப்பால் மறைவது' என இறைவனிடம் விண்ணப்பிக்கிருர். அதாவது பிழை செய்த எனக்குப் பேட்டியளிக்காது போனாலும் என்னுடன் உமது மகனும் (சின்ன முதலாளி) இருக்க தாங்கள் எப்படி மறைவது என்று தலைமைக்கணக்கர் விண்ணப்பிப்பது போலவுள்ளது. இறைவர் திருஞானசம்பந்தருக்குக் காட்சியளிக்க அவர் அப்பருக்கு இறைவனைக் காட்டுகிருர். திருஞானசம்பந்தர் பதிகம் ''வாய்மூர் அடிகள் வருவாரே'' என்று வருகிறது. அப்பரடிகளின் வாக்கில் ''வாய்மூர் அடிகளைக் கண்டவாறே'' என்று வருகிறது. வருவதற்கும் காண்பதற்கும் உள்ள வேறுபாடு வெள்ளிடை. சைவசித்தாந்தக் கருத்து உயிர் சார்ந்ததன் வண்ணம். Assimilation and reflection கொண்டது காட்டல்.

## 6

ஏயர்கோன் கலிக்காம நாயனுர் சுந்தரமூர்த்தி சுவாமிகளிடம் சினம் கொள்கிருர். (விரிவு அவர் புராணத்தில் கண்டு கொள்க). ''அரிவை காரணத்தினுலே ஆளுடைப்

பரமர் தம்மை இரவினில் தூது போக ஏவி அங்கிருந்தான் தன்னை வரவெதிர் காண்பேனாகில் வருவது என்னும் கொல்'' என்று அவரது சினம் புலப்படுகிறது. இங்கு ''வருவது என்னும்'' என்று நிறுத்தி அடுத்து ''கொல்'' அதாவது அவனைக் கொல்வாய் என்று கொள்ளுதலே முடிவு. பெரிய புராணம் சுந்தரர் வரலாற்று ஆய்வுரை எழுதிய மறை. திருநாவுக்கரசு அவர்களிடமும் இந்த என் கருத்தைக் கூறினேன். அவரும் சரியென ஒப்பினார். பந்தைச் சுவற்றிலடித்தால் திரும்பி வருகிறது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் சுவர் போல ஆகிவிட்டார். அதனால் ஏயர்கோனின் 'கொல்' என்ற சொல் பந்து போல அவருக்கே திரும்பி வந்து விட்டது. தன்னையே கொன்று கொள்கிறார். சுந்தரர் தானும் இறக்க முடிவு செய்த போது இறைவர் ஏயர்கோன் கலிக்காம நாயனாரை எழும்புகிறார். பிறகு சுந்தரரும் ஏயர்கோனாரும் நட்பு கொள்கிறார்கள்.

## 7

இன்னொரு விஷயம் நாம் கூர்ந்து கவனிக்க வேண்டும். அப்பரிடமும் சம்பந்தரிடமும் இறைவர் distance keep செய்கிறார். சுந்தரர் தோழர் ஆனதால் பலமுறைகள் தானே வருகிறார். திருவொற்றியூரிலும் திருவாரூரிலும் இறைவர் தாம் ஆம் தன்மையிலேயே தோன்றி சுந்தரரிடம் தேரில் உரையாடுகிறார். ஒரு தடவை கூட அப்பரிடமோ சம்பந்தரிடமோ தாமாம் தன்மையில் நேரில் உரையாடியதாகப் பெரிய புராணத்தில் இல்லை. தோழமை மார்க்கம் என்ற சக மார்க்கத்தின் தனிச்சிறப்பு இது எனத் தோன்றுகிறது.

## 8

திருஞானசம்பந்தப் பெருமான் புத்திர மார்க்கத்தில் ஒழுகியவர். தன் மகனுக்கு இக்காலத்தார் தனியாக 'கார்' (Car) வாங்கிக் கொடுப்பது போலத் தன் மகனுக்கு இறைவர் முத்துச்சிவிகை யளித்தருளினார். இது நடந்தது திருநெல்வாயில் அரத்துறை என்னும் தலத்திலாகும். பையன் வெயில்

தாங்கமாட்டான் என்று அவன் அறையை தற்காலத்தில் தந்தையார் (Air Condition)ஏர் கண்டிஷன் செய்வது போலத் திருப்பட்டீச்சரம் என்னும் தலத்தில் முத்துப்பந்தர் அருள் செய்தார். மற்றும் திருஞானசம்பந்தர் உரையைத் தனது உரையாகக் கொண்டார். இது புத்திர மார்க்கத்தின் சிறப்பு என்று தோன்றுகிறது.

## 9

அப்பரடிகளின் தாசமார்க்கம் பற்றி முன்னரும் கூறினேன். திருவீழிமிழலேயில் படிக்காசு பெற்ற வரலாற்றிலும் தாச மார்க்கச் சிறப்பு வெளிப்படுகிறது. திருமாமகனுர் ஆனதால் சம்பந்தர் வாசியுடன் காசு பெற்ருர் என்றும், கைத்தொண்டா கும் அடிமையினுல் வாசியில்லாக் காசுபடி வாகீசர் பெற்ருர் என்றும் கூறப்பட்டது காண்க.

## 10

மாணிக்கவாசகருக்காக இறைவர் அடிபட்டது பற்றிய ஒரு சுவையான சிந்தனே. நானும் என் மனேவியும் ஓரிடத் துக்குப் போனபோது என் மனேவி மீது அடி விழுகிறது. நான் பரிந்து போக என் மீதும் அடி விழுகிறது. நான் வாளா விருந்து விட்டால் எல்லோரும் என்னே ஆண்பிள்ளேயா என்று கேட்பார்கள். அதற்காக நானும் அடி வாங்கிக் கொள்ள வேண்டும். இறைவர் இதுபோல அடிவாங்கிக் கொள்கிருர். இது நாயக-நாயகி பாவம் என்னும் சன்மார்க்கச் சிறப்புப் போலும். இதையும் மறை திருநாவுக்கரசு அவர்களிடம் கூறினேன். மிகுந்த சமத்காரமாகக் கூறுகிருய் என்ருர்.

## 11

சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றியருளிய நால்வர் நான் மணிமாலேக்கு சிதம்பரம் ஈசானியமடம் ராமலிங்க சுவாமிகள் ஒரு அருமையான உரை எழுதியுள்ளார்கள். அதில் அவர் கூறுவது. நால்வர் பெருமக்களுள் வேறுபாடு காணக்கூடாது.

இவர் பெரியவர், அவர் பெரியவர் என்று கூறுவது தவறு. நான் உலகியல் நிலையை வைத்துப் பெருமக்களைப் பற்றிக் கூறும் பொழுது ஈசானிய மடம்சுவாமிகளின் இந்தக் கருத்தை யும் மனதில் வைத்துக் கொண்டேதான் எழுதினேன்.

## 12

ஒரு முறை என் குருநாதர் சொன்னார். "அப்பா வேதத்தைப்பற்றி ஒருவருக்கும் ஒன்றும் தெரியாது" என்று. நம் அறிவு சிற்றறிவு. வேதம் இறைவனின் வாக்கு என்ற நம்பிக்கையுடன் வாதப்பிரதிவாதத்துக்குப் போகாமல் இருக்க வேண்டும். அப்படிப் போனால் நம் நம்பிக்கை குறைந்து விடும். தற்காலம் வேதம் பற்றி வருகிற புத்தகங் களையும் மதிப்புரைகளையும் படித்து நம் மூளையைக் குழப்பிக் கொள்ளக் கூடாது. ஆகவே வேதமோடு ஆகமம் மெய்யாம் இறைவன் நூல் என்ற அருள்வாக்கில் நம்பிக்கை வைத்தால் க்ஷேமமடைவோம். சிவஞானசித்தியார் இது பற்றிக் கூறு வதையும் கைக்கொள்ள வேண்டும்.

சிவம்.

---

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

# கட்டுரையாசிரியர்கள் அறிமுகம்

## தொகுப்பு: பதிப்பாசிரியர்

நமது சிவஞான பூஜாமலருக்கு முதன் முதலாகக் கட்டுரை வழங்கும் பெரியோர்களைப் பற்றிய அறிமுகக் குறிப்புகள் எழுதும் நமது வழக்கத்தினை வாசகர்கள் அறிவார்கள். இவ் வருட மலருக்கு முதன் முதலாகக் கட்டுரை வழங்கியவர்கள்:

1. ஸ்ரீராமகதாரத்னம், புதுக்கோட்டை V. தியாகராஜன், சென்னை-61
2. K. ஸரஸ்வதி, M.A., திருநெல்வேலி-7
3. பிரம்மஸ்ரீ, தர்மக்ஞ மாயூரம் ராமநாத தீக்ஷிதர், சென்னை-28
4. சங்கரனடிமை ஆங்கிரஸ சர்மா, சென்னை-33
5. பண்டிதராஜ பிரம்மஸ்ரீ ஸோம. ஸேதுதீக்ஷிதர், சிதம்பரம்
6. பிரம்மஸ்ரீ S. ராமஸ்வாமி சாஸ்திரிகள், கிருஷ்ணகிரி
7. சைவத்திருவாளர் R. C. கதிர்வேல் முதலியார் கலயம்புத்தூர்

இவர்களில் சிதம்பரம் தீக்ஷிதர் அவர்களைப் பற்றிய அறிமுகம் கட்டுரையின் தொடர்ச்சியாகவே கொடுக்கப்பட்டுள்ளது

மேலும் Sri K. G. மல்லய்யா என்பவர் எழுதிய ஆங்கிலச் சிறு கதையொன்றும் புதிதாக பிரசுரிக்கப்பட்டுள்ளதாயினும், அது பாரதீய வித்யா பவனது BHAVAN'S JOURNAL என்னும் பத்திரிகையிலிருந்து எடுத்துப் பிரசுரிக்கப்பட்டதாகையால், கட்டுரையாசிரியர் பற்றிய குறிப்பு அறிந்து எழுதக்கூடவில்லை. மற்றையோருடைய அறிமுகக் குறிப்புகள் மட்டும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

## 1. ஸ்ரீராமகதா ரத்னம், புதுக்கோட்டை, வே. தியாகராஜன் அவர்கள். சென்னை-86

கோவையில் பிறந்து, மதுரையில் வளர்ந்த காலத்தில் தமிழ்பயின்று, தமிழ்ச்சொற்பொழிவுகள் செய்வதையே தொழிலாக் கொண்டு, சுமார் 25 வருடங்கள் புதுக்கோட்டையில் வாழ்ந்து, தற்சமயம் சென்னையில் வசிக்கிறார் நமது ஸ்ரீராம கதாரத்னம். இவர் சுமார் 16 நூல்கள் எழுதியுள்ளார். அவற்றில் முக்கியமானவை கம்பராமாயண விளக்கம் (ஸ்ரீமத் சம்பூர்ண ராமகதா சாரம்), கந்தரனுபூதி விளக்கம், (வேலும் மயிலும் துணை), திருவிளையாடற் புராண விளக்கம் (மதுரையின் மாண்பு), பெரியபுராண விளக்கம் (அருள் மொழி அமுது) ஆகியவை.

பாரததேசம் முழுமையும் சென்ற நாற்பது ஆண்டுகள் பிரயாணஞ் செய்து கம்பராமாயணத்தையே 343 முறைகள் பிரசங்கம் செய்தவர். சிருங்கேரி ஆஸ்தான வித்வானாக இருப்பதுடன் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீமத் சங்கராசாரிய ஸ்வாமிகளால் ''ஸ்ரீராமகதாப்ராண'' என்ற பட்டம் அனுக்கிரஹம் செய்யப் பெற்றவர். இவ்வாறு இரு பெரும் ஞானபீடங்களின் ஆசி பெற்றவராகிய இவர், தெய்வீகத் தமிழ் நன்கு பரவ வேண்டும் என்ற ஆசையுடன் ஒரே மூச்சாகப் பாடுபட்டு வருகிறார். அனேக மாணவர் களுக்கு இலவசமாகத் தமிழ்க் காவியங்களைப் பாடம் சொல்லி

வருகிருர். யார் கேட்டாலும் கட்டுரைகள் தயாராகத் தருப வர். இவரது சேவையை யாரும் எளிதில் பெறமுடியும். நமது மலரில் சிவப்பிரகாசர் காட்டிய சிவப்பிரகாசம் என்ற கட்டுரை எழுதியுள்ள இந்த ஸ்ரீ ராமகதா ரத்னம், சிவகதா ரத்னமாகவும் பிரகாசிக்கிருர். நம்மைத் தமது உடன் பிற வாச் சஹோதரராக ஏற்றுக் கொண்டுள்ள இவரது முகவரி: 6, மூன்ருவது மெயின் ரோடு, நங்கநல்லூர், சென்னை-600061. Be Aware Of Gods என்ற அறிவிப்புப் பலகையை இவர் வீட்டில் காணலாம்.

## 2. K. ஸரஸ்வதி, M. A., திருநெல்வேலி-7

"திக்கெலாம் புகழுறும் திருநெல்வேலி" என்று திருஞான சம்பந்தப் பெருமானின் அருள்வாக்குப் பெற்ற திருநெல்வேலி யில் வைதிகச் சைவநெறியைச் சார்ந்த திரு. செல்லையா பிள்ளையவர்கட்கும் திருமதி ஸ்வர்ணும்பாள் அம்மையாருக் கும் தல்வியாகப் பிறந்தவர் இந்த நமது மலருக்கு திருஞான சம்பந்தர் என்ற கட்டுரை வழங்கியுள்ள திருவளர் செல்வி K. ஸரஸ்வதி ஆவர். இவர் வீணையில் வல்லவர். மதுரைப் பல்கலைக் கழகத்தில் B. A. பட்டமும், சென்னைப் பல்கலைக் கழகத்தில் M.A. பட்டமும் பெற்றவர். பத்ம பூஷணம் ஸ்ரீமதி ருக்மணி அருண்டேல் அம்மையார் அவர்கள் நடத்துகின்ற கலாக்ஷேத்திரா இசைக் கல்லூரியில் முதுநிலைப்பட்டம் வீணை யில் பெற்றவர். இங்கு பயிலும்போது நமது நாட்டில் மிகச் சிறந்த வீணை வல்லுனர்களில் ஒருவரான ஸ்ரீமதி ராஜேச்வரி பத்மநாபன் அவர்களது திறமையான வழிகாட்டுதலில் இந்தப் பயிற்சியைத் திறம்பட முடித்தவர். தமது பயிற்சியைத் திறம் பட முடித்து அதே கலாக்ஷேத்திரா கல்லூரியில் விரிவுரயாள ராக எட்டு ஆண்டுகள் பணிபுரிந்த பின் தாமே ஒரு இசைப் பள்ளியைத் துவக்கி நடத்த விரும்பினுர். இவரது விருப்பத் தைப் பூர்த்தி செய்யும் வகையில் தென்னிந்தியத் தமிழ்ச்சங்கம் 'நீலாம்பிகை இசைப்பயிற்சிப் பள்ளி'யைத் துவக்கி, இவரை அதன் முதல்வராக நியமித்தது.

K. ஸரஸ்வதி அவர்கள் வானொலியிலும், மற்றும் சபை களிலும் வீணைக்கச்சேரிகள் நிகழ்த்தியுள்ளார். ஆசாரமும் தெய்வ பக்தியும் மிக்க சைவப்பிள்ளைமார் குடும்பத்தைச் சேர்ந்த இவர் தன்னுடைய சொந்த செலவிலேயே திருக் கோயில்களில் வீணை நிகழ்ச்சிகளை நடத்தியுள்ளார். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் ஏழை மாணவிகளுக்காக இசை வகுப்பு களை இலவசமாக நடத்தி வருகிறார்.

இசையின் மூலமாகவே இறைவனையடைய முடியும் என்று உறுதியாக நம்பும் இவர் தமது Ph.D. பட்ட ஆராய்ச் சிக்கு நாளும் நல்லிசையால் நற்றமிழ் பரப்பிய திருஞான சம் பந்த மூர்த்திகளது தேவாரப் பதிகங்களையே தமது ஆய்வுக்கு எடுத்துக் கொண்டது மிகவும் பொருத்தமேயாகும். ஸஹோ தரி ஸரஸ்வதி அவர்களின் இசைப்பணியும், இறை பணியும் இனிது ஓங்க ஸ்ரீகாந்திமதியம்மை உடனுறை நெல்லையப் பரின் திருவடிகளைச் சிந்திக்கின்றோம்.

### 3. தர்மக்ஞ, சிரோமணி, வித்யாவாசஸ்பதி பிரம்மஸ்ரீ மாயூரம் ராமநாத தீக்ஷிதர், சென்னை-28

சைவத்துக்கும் அத்வைத சித்தாந்தத்துக்கும் புத்துயிரளித் தவரும்,ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர்-ஸ்ரீகண்டமத ப்ரதிஷ்டாபனா சார்யர்-சதுரதிக சதகிரந்த கர்த்தா (104 நூல்கள் இயற்றி யவர்) என்றெல்லாம் அவரது காலத்திலேயே போற்றப்பட்ட ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரரின் மரபில் பன்னிரண்டாவது தலைமுறையில் தோன்றியவர். இந்த மலருக்கு சிவபிரானின் ஸம்ஹார க்ருத்ய விளக்கம்'' பற்றிய கட்டுரையும், இறைவனின் இருபெருஞ்செயல்கள் என்ற கட்டுரையும் வழங்கியுள்ள மாயூரம் பிரம்மஸ்ரீ ராமநாத தீக்ஷிதர் அவர்களாவர். தந்தை யார் பிரம்மஸ்ரீ மஹாலிங்க தீக்ஷிதர் அவர்களிடமே வேதம், தர்மசாஸ்த்ரம் முதலியவற்றைக் கற்றார். தந்தையார் சிவபத மடைந்த பிறகு பிரம்மஸ்ரீ தேவங்குடி சிவராமகிருஷ்ண சாஸ்திரிகள் மற்றும் பல பெரியோர்களிடம் காவ்ய, நாடக,

அலங்காரம் முதலிய மற்றக் கலைகளையும் பயின்றார். சிதம்பரத்தில் தலை சிறந்த ஸாமவேத பண்டிதரான பிரம்மஸ்ரீ ராமஸ்வாமி சிரௌதிகளிடம் சிரௌத வித்தை முழுவதையும் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தார். மைசூர் அரசாங்கம் நடத்திய தேர்வுகளில் வெற்றி பெற்று ''ஸாமவேத சிரௌத ஸ்மார்த்த வித்வான்'' என்ற பிருதத்தையும் பெற்றார். திருவானைக்காவிலுள்ள ஜகத்குரு வித்யாஸ்தானத்தில் சாஸ்த்ரரத்னாகரம் பிரம்மஸ்ரீ போலகம் ஸ்ரீராம சாஸ்திரிகளிடம் வேதாந்த நூல்கள் அனைத்தையும் கற்றார். பல பரீக்ஷைகளில் வெற்றி பெற்று சன்மானங்களும் தோடாக்களும் பெற்றுள்ளார்; 194௪ல் காஞ்சி ஆசாரியர்கள் ஏற்பாடு செய்த 'தர்மக்ஞ' பரீட்சையில் தேறி அதற்குரிய சம்பாவனை, சால்வை, தங்க மோதிரம் ஆகிய பரிசுகளையும் பெற்றுள்ளார்.

1966ல் ஸாஹித்யபரிஷத்தில் வித்யாவாசஸ்பதி பட்டமும் சிருங்கேரி சிவகங்கா சமஸ்தானத்தில் வித்யாலங்கார என்ற பட்டமும் தங்கமெடல், சால்வை முதலியவைகளையும் பெற்றுள்ளார். சிருங்கேரி மடம் ஆசாரிய சுவாமிகளும் உத்தம சம்பாவனை வழங்கியுள்ளார். மற்றும் பல சங்கங்கள், ஸ்தாபனங்கள் தேவீகதாம்ருதவர்ஷக, பிரவசன கேசரி முதலிய பல பட்டங்களை வழங்கியுள்ளன.

ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஆசார்யாளுடைய அருளால் பாரத தேசம் முழுவதும் பரவி வருகிற வேத தர்மசாஸ்த்ர பரிபாலன சபையிலும், வேதபாஷ்ய சபையிலும் இவர் பரீக்ஷாதிகாரியாக இருந்து வருகிறார். பாரத ஜனாதிபதியால் அளிக்கப்படும் President Awardம் ஜனாதிபதி ஜைல்சிங் அவர்களால் வழங்கப்பட்டு கௌரவிக்கப்பட்டார்.

பிரம்மஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் பலநூல்களை இயற்றியுள்ளார். அவற்றுள் 'ஸாமவேத ஸர்வஸ்வம்,' 'பாரத ஸ்தல யாத்திரை' போன்றவைகள் மிகவும் குறிப்பிடத் தக்கவை. சமீபத்தில் இவரது சதுர்வர்கசிந்தாமணி மற்றும் சில ஸாமவேத நூல்களை பாரத உபஜனாதிபதி ஸ்ரீ R. வெங்கடராமன்

அவர்கள் வெளியிட்டு, தீக்ஷிதர் அவர்களை மிகவும் பாராட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது.

தம் சிறுவயது முதலே சிவபூஜை செய்து வரும் இப்பெரியவர் தமது குல திலகமான ஸ்ரீ மத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் போலவே சிவோத்கர்ஷத்தில் உறுதி பூண்டு தமது சொற்பொழிவுகளில் ஸ்ரீ மத் தீக்ஷிதர் நூல்களைப் பிரசாரம் செய்து வருவது மிகவும் போற்றத்தக்கது. இப்பெரியவர் மேலும் மேலும் பல்லாண்டுகள் வாழ்ந்து பக்திப் பிரசாரம் செய்யப் பார்வதீசன் பாதங்களில் இறைஞ்சுகின்றோம்.

## 4. ஆங்கீரஸ சர்மா, சென்னை 33

நமது மலரில் நம்மைப்பற்றி நாமே எழுதிக் கொள்வது முறையல்லவாகையால் அதிகம் எழுத விரும்பவில்லை. வில்லிபுத்தூரார் பாரதத்தில் உள்ள சிவபிரான் பெருமைகளைத் தொகுத்துக் கட்டுரை எழுத வேண்டும் என்ற நமது நெடுநாளைய விருப்பம் ஓரளவு பூர்த்தியானதில் பெருமகிழ்ச்சியடைவதுடன் நமது ஆசைகள் பின்வருமாறு என்பதை மட்டும் தெரிவித்துக் கொள்கிறோம்.

1. ஆண்டு தோறும் வெளியிடும் சிவஞான பூஜாமலர்கள் மூலம் சிவோத்கர்ஷம் பரப்புதல்.

2. மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை 108 மாலைகள் வெளியிட்டு அவை மூலம் முதல் ஏழு திருமுறைகளையும் உரையுடன் நேயர்கள் படிக்கச் செய்தல்.

ஒவ்வொரு தமிழ் மாலையையும் சிவபிரானது 108 திருநாமங்கள் ஒவ்வொன்றினுக்கும் சமர்ப்பணம் செய்தல்.

3. வடமொழியில் உள்ள சிவஸஹஸ்ரநாம ஸ்தோத்ரங்கள் அனைத்தையும் தமிழ் உரையுடன் வெளியிடுதல். இதுவரையில் இரண்டு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரங்கள் வெளியிடப்பட்டுள்ளன. இன்னும் எட்டு சிவஸஹஸ்ரநாம ஸ்தோத்ரங்கள் உள்ளன.

4. சிறு நூல்கள் பெருநூல்கள் வாயிலாகச் சிவபுராணங்கள், சிவதத்துவம், சிவஸ்துதிகள் முதலியன பரப்புதல்.

5. ஆண்டு தோறும் வெளியிடும் ஸ்ரீ சங்கரஜயந்தி மலர்கள் மூலம் வடமொழியில் உள்ள சிவஸ்தோத்ரங்களை தமிழ் உரையுடன் வெளியிடுதல்.

6. பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், ஸ்காந்த புராணம், திருமுறைகள், அபிராமி அந்தாதி, மற்றும் சைவ நூல்களைச் சொற்பொழிவுகள் மூலம் பிரசாரம் செய்தல். சிவ புராணங்கள் ஒவ்வொன்றையும் முழுமையாகப் பிரசங்கம் செய்து முடித்தால் ஒரு சிவபுராண ஞானபூசையாகக் கொண்டு சிவபிரானின் 108 திருநாமங்களில் ஒவ்வொன்றுக்கும் ஒரு ஞானபூஜையாக சமர்ப்பித்தல். இதுவரை 76 சிவபுராண ஞான பூஜைகள் நடைபெற்றுள்ளன.

7. மற்றும் சிவாலய கூட்டு வழிபாடு, சைவப்பிரசாரம் ஆகியவற்றை மற்ற ஸ்தாபனங்கள் அன்பர்களோடு இணைந்து செய்தல்.

சேலம் ஸ்கந்தாச்ரமம் ஸத்குரு ஸ்ரீமத் சாந்தானந்த ஸ்வாமிகளவர்களின் அருளாக்ஞைப்படி ஸ்கந்தாச்ரமம் செல்லும் ஒரு வாய்ப்பு கிடைத்தது. ஸ்கந்தாச்ரம தரிசனம் பற்றி நாமெழுதியுள்ள கட்டுரையினையும் படித்துப் பயனடையுமாறு வாசகர்களைக் கேட்டுக்கொள்கிறோம்.

நமது ஆசைகள் அனைத்தும் நிறைவேறத் திருவருள் துணை செய்ய வேண்டும்.

## 5. பிரம்மஸ்ரீ S. ராமஸ்வாமி சாஸ்திரிகள் M.A., L.T., கிருஷ்ணகிரி

வடாற்காடு மாவட்டம் செய்யாறு தாலுகாவைச் சேர்ந்த பிரம்மதேசம் என்னும் கிராமத்தில் பிறந்தவர் 'சிவஸ்துதி' என்னும் துதியை உரையுடன் நம் மலருக்கு வழங்கியருளிய பிரம்மஸ்ரீ S. ராமஸ்வாமி சாஸ்திரிகள். இவரது தந்தையார்

கல்பட்டு ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் காஞ்சீபுரத்தில் பெரிய வட மொழிப்புலவராகவும் அங்குக் கிறிஸ்தவப் பள்ளியில் ஆசிரிய ராகவும் பணியாற்றியவர். கல்பட்டு என்பது தென்னுற்காடு ஜில்லாவில் திருக்கோவலூர் அருகேயுள்ளது. வேத சாஸ்திர பண்டிதர்கள் சிறப்புடன் விளங்கிய ஊர். கல்பட்டு ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் தம் தந்தையாரிடமே வியாகரணம் பயின்று சிறந்த வடமொழிப் புலமை பெற்றுர். காஞ்சியில் வேத பாட சாலேயிலும் பண்டிதராகச் சேவை செய்தவர். ஸ்ரீ ஏகாம்ப ரேச்வரர், காமாக்ஷி தேவி இவர்களிடம் தீவிரதரமான பக்தி உள்ளவர். ஆசுகவியாகவும் விளங்கியவர்.

இத்தகைய சிறப்புகள் பொருந்திய கல்பட்டு ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளின் இரண்டாவது குமாரராகப் பிறந்தவரே நம் ஸ்ரீ ராமஸ்வாமி சாஸ்திரிகள். பள்ளியிறுதிப் படிப்பு வரையில் தந்தையாரையே வடமொழி ஆசிரியராகக் கொண்டு அவ ரிடம் மொழிமட்டுமல்லாது வேதமந்திரங்கள், நீதி சாஸ்திரங் கள் ஆகியவற்றையும் பயின்ருர். பிறகு சென்னே கிறித்தவக் கல்லூரியில் B. A. பட்டப்படிப்பு படித்த சமயம் பண்டித வேங்கடகிருஷ்ணராவ் என்ற வடமொழி ஆசிரியர் இவருக்கு பேரார்வத்துடன் அக்கல்வியைப் போதித்தார் என்று தன் ஆசிரியரை மறவாது போற்றுகிருர் இந்தப் பெரியவர். அதற்கு மேல் M.A, ஆசிரியப் பயிற்சி L.T. ஆகிய பெற்று திருவள்ளூரில் உயர்நிலேப்பள்ளியில் கணித, ஆங்கில ஆசிரிய ராக 30 ஆண்டுகள் பணியாற்றி ஓய்வு பெற்றபின் வடமொழி கவிதைகள் புனேவதில் அதிக ஈடுபாட்டுடன் தனது காலத்தைத் தெய்வ சிந்தனேயுடன் கழித்து வருகின்ருர். ஆங்கிலத்திலும் மாணவ, ஆசிரியர்களின் கடமைகள் பற்றிக் கட்டுரைகள் எழுதியுள்ளார். இவரது ஒரே மகன் ஸ்ரீ ஹரி ஹரன் என்பவருடன் பெங்களூரில் வாஸம் செய்கிருர். சில சமயம் கிருஷ்ணகிரியில் உள்ள இவரது அடுத்த இளேய ஸஹோதரர் Dr. S. வெங்கடேசன் அவர்களது இல்லத்திலும் தங்குவார்.

Dr. S. வெங்கடேசன் அவர்கள் மிகுந்த பரோபகாரி. காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகளின் ஆக்ஞைப்படியும் அருளுடனும் கிருஷ்ணகிரி யில் இலவச மருத்துவ முகாம் அமைத்து அரிய சமூகப்பணி செய்து வருகிறார். நாம் கிருஷ்ணகிரியில் 1983ம் வருஷம் கந்தர் ஷஷ்டியை முன்னிட்டு ஸ்காந்த புராணம் பிரவசனம் செய்யச் சென்றபோது அந்த ஆறு நாட்களிலும் உண வளித்து விருந்தோம்புதல் செய்தார். அந்த சமயம் தான் டாக்டருடைய இல்லத்தில் அப்பொழுது தங்கியிருந்த பிரம்மஸ்ரீ சாஸ்திரிகளின் பரிச்சயம் ஏற்பட்டு, அது நண்பாகி மலர்ந்து, நமது மலர்களுக்குக் கட்டுரைகள் கவிதைகள் அளிக்க முற்பட்டுள்ளார். பிரம்மஸ்ரீ சாஸ்திரிகளும், ஸஹோதரர் Dr. S. வெங்கடேசன் அவர்களும் நீடூழி வாழ்ந்து, பரோபகாரப் பணிகளைப் பரமாசார்யாள் பேரருள் வழி செய்து, பெரும் புகழும் புண்ணியமும் அடையப் பரமன் அடிகளில் இறைஞ்சுகின்றோம்.

## 6. சைவத்திருவாளர் R.C. கதிர்வேல் முதலியார், B A , கலயம்புத்தூர்.

தமது சமயச்சிந்தனைகளை நேயர்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்பி நமக்கனுப்பிய சைவத்திருவாளர் R.C. கதிர் வேல் முதலியார் அவர்களைப் பற்றி நமது மூவர் தமிழ் மாலை 17ல் முன்னமே விரிவாக எழுதியுள்ளோம். ஈண்டு சுருக்க மாகக் கொடுப்போம். பழநி தேவஸ்தானம் அறங்காவலர் குழுத்தலைவராகப் பணியாற்றிய திரு. V.V.C R. முருகேச முதலியார் அவர்களின் மூத்த ஸஹோதரர் V. V. C. R. சின்னப்பா முதலியார் அவர்களின் குமாரராக 17-6-1926ம் ஆண்டு பிறந்தவர் நம் கதிர்வேல் முதலியார். இவரது சிறிய தந்தையார் அக்காலம் திரைப்படத் தொழிலில் மிகப்புகழுடன் விளங்கிய மாடர்ன் தியேட்டர்ஸ் T.R. சுந்தரம், B.A.B.Sc., (LEEDS) ஆவர். இளமையில் தமக்குத் திரு T.R. சுந்தரம் அவர்கள் செய்த உதவிகளை நினைந்து மனமுருகும் செய்ந்

நன்றி மறவாக்கதிர்வேலர், தம் சிறிய தந்தையின் நினைவாக நமது மூவர் தமிழ்மாலை-17 பிரசுரச் செலவு முழுமையும் நன் கொடையாக நமக்களித்தார் என்பதை நாமும் நன்றியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

தவத்திரு மறைமலையடிகளார், அவரது குமாரர் மறை. திருநாவுக்கரசு, தமிழ்த்தென்றல் திரு.வி.க, சைவப்பாதிரி யார் திரு. சச்சிதானந்தம் பிள்ளை, சித்தாந்த சிகாமணி க. வஜ்ரவேல் முதலியார், மற்றும் சைவப்பெரியார்களுடன் கலந்து பழகும் வாய்ப்பினை மிக இளமையிலேயே பெற்ற நலத்தால் சைவசமய உறைப்புடன் விளங்குகின்றார்.

பழநி காலஞ் சென்ற சிவஸ்ரீ ஈசான சிவாசாரிய ஸ்வாமி களின் மாணவராகி அவர்களிடம் பல அரிய கருத்துக்களைக் கேட்டறிந்து, ஒவ்வொரு சமயமும் தம் குருநாதரை நினைந்து நினைந்து உருகுகிறார் திரு. கதிர்வேலர். குருநாதரின் குடும்பத் தின் மீது மிகுந்த பக்தி பூண்டு, குருநாதர் மறைவுக்குப் பின் னரும் தமது காணிக்கையைக் குருபத்தினியாரிடம் சமர்ப்பித்து வருகிறார். இத்தகைய மாணவர்களைக் காணல் இக்காலத்தே அரிதன்றோ?

திருமுறைகளில் அளவிட முடியாத, அசைக்கமுடியாத நம்பிக்கை கொண்ட இவர், தமது வாழ்க்கையில் திருஞான சம்பந்தப் பெருமான் எப்படிப் பதிந்துள்ளார் என்பதைப் பல அனுபவங்கள் மூலம் உணர்ந்துள்ளார். அந்த அனுபவங்களை நம் மூவர் தமிழ் மாலை-17ல் பிரசுரித்துள்ளோம். அந்த திரு ஞானசம்பந்தர் மீது கொண்ட பக்தியே நம் தமிழ் மாலைக்கு இவரை உதவச் செய்தது என்றால் மிகையாகாது.

செந்தமிழ்ப்பற்று மிக்கவுடைய இவர் வடமொழியை வெறுப்பதில்லை. ஆதிசங்கரரின் ஏகான்மவாதக் கொள்கை இவர்க்கு உடன்பாடு இன்றேனும் அவர் அருளிய சிவ ஸ்தோத்ரங்களைப் படிக்கும் போது கண்ணில் நீர் வருகிறது என்கிறார். பக்தி எதைத்தான் செய்யாது? பரம்பரையாகப் பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவராயினும், தற்சமயம் பழநி

கலயம்புத்தூர் விஜயகுமார் மில்லில் அலுவலராகப் பணி யாற்றி வருகிறார்.

திரு. கதிர்வேலர் செய்ந்நன்றி மறவாக்கதிர்வேலர் என்பதுடன் கைராசிக்காரக் கதிர்வேலராகவும் திகழ்கிறார். முதன் முதலாக மாலை வெளியீட்டுக்கு இவர் நன்கொடை கொடுத்ததும் தொடர்ந்து 18, 19, 20, 21, 22 மாலைகள் வரையில் நன்கொடைகள் கிடைத்துவிட்டன என்பதை நோக்குமிடத்து இவர் கைராசிக்காரர் என்பது தேற்றமாகின்றதல்லவா?

கைராசிக்காரக் கதிர்வேலர் பல்லாண்டுகள் வாழ்ந்து சமயப்பணிகள் புரியவும், தமது குடும்ப வாழ்விலும் பல நலங்களைப் பெற்று பரம சௌக்கியமாக வாழவும் அவரது வழிபடு தெய்வமான பழநி ஞான தண்டாயுதபாணியின் பாதமலர்களில் பணிந்து பிரார்த்தித்துக் கொள்கின்றேன்.

---

## சோ கா மா ஏ வா தா

(194ம் பக்கத்தில் உள்ள காளமேகப் புலவரின் பாடலுக்கு விளக்கம்)

சோ, கா, மா, ஏ, வா, தா என்ற ஒவ்வொன்றோடும் 'மனை' என்ற சொல்லைக் கூட்டி, அவற்றுடன் முறையே, 'தரித்தார்' 'எரித்தார்' 'தறித்தார்' 'உதைத்தார்,' 'உரித்தார்' ஊர்க்குக் கணைபடைத்தார்' என்பதைச் சேர்த்தால், உமையம்மையார் ஒரு பக்கத்தில் அமரப்பெற்ற தில்லைப் பரமேச்வரர் செய்த அரிய வீரச்செயல்கள் புலப்படும். அதாவது, சோமனைத் (சந்திரனை) தரித்தார், காமனை (மன்மதனை) எரித்தார், மாமனை (தக்ஷனை) யாகத்தில் வெட்டித் தள்ளினார், ஏமனை (இயமனை) உதைத்துத் தள்ளினார், வாமனை (யானைவடிவினனாகிய கஜாசுரனை) உரித்துத் தோலைப் போர்த்திக் கொண்டார், தாமனை (திருமாலை) முப்புரம் எரிக்கக் கணையாகக் கொண்டார் என்ற ஆறு வீரச் செய்கைகள் இவ்வொரு பாடலிலேயே நயம் பெறக் கூறப்பட்டது கண்டு இன்புறுக.

சிவம்

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

சைவ நூல் அறிமுகம்

# சிவபிரானின் முழு முதன்மை

(ஆசிரியர்: நக்கீரன் வழியடிமை, புலவர்
பி. மா. சோமசுந்தரனார், 4, லோகல் பண்டு சாலை,
(பிஞ்சி கிராமம்) இராணிப்பேட்டை-632401,
236+VIII பக்கங்கள், விலை: ரூ. 16-00).

தேவரும் மூவரும் தேடியுங் காணாத சிவபெருமானையும், சிவனடியார்களையும் இழித்துரைக்கும் நிந்தை மொழிகளைத் தன்னகங்கொண்டு சுதரிசனம் என்னும் திங்களேடு வருதல் சைவ மெய்யன்பர்கள் பலர் அறிவார்கள். அப்பத்திரிகை ஆசிரியருக்கு நமது ஆப்தர், புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனார் அவர்கள், இவ்விழிசெயலினின்றும் நீங்கும்படி அறிவுரை கூறியும் அவ்வாசிரியர் அச்செயலினின்றும் நீங்காது மேலும் வசைகளிலேயே இறங்குவாராயினர்.

எனவே, நமது திரு. பி. மா. சோ அவர்கள் இகழுரை போக்கும் தகவுரை, சங்ககாலத் தமிழர் சமயம் போன்ற நூல்களை வெளியிட்டு அவற்றின் மூலம் சுதரிசனம் ஆசியர்க்கு அறிவுறுத்தியும், அந்த நூல்களை மறுக்கும் ஆற்றலற்றவராய் மேலும் ஏசுவதையே மறுப்பாக்கியுள்ளதுடன், வைஷ்ணவமத விஜயம் என்ற நூலை வெளியிட்டு சிவநிந்தை செய்வதே தம் பிறவிப் பயன் என்று கருதும் நீர்மையராகிய அவ்வாசிரியர்

கூற்றுக்களையெல்லாம் தக்க சான்றுகளுடன் மறுத்துச் சிவ பிரானின் முழுமுதன்மையை இந்த நூலில் நிலை நாட்டியுள் ளார். இவரது சமய இலக்கிய நூல்களின் பயிற்சித் திறனும், ஆராய்ச்சித் திறனும் இந்த நூலில் போட்டி போடுகின்றன என்ருல் மிகையாகாது. வைணவ மதக்கோட்பாடுகளின் சிறு மைகளையெல்லாம் அவர்களது நூல்களிலிருந்தும், அவர்களது குருமார்களது மொழிகளிலிருந்துமே எடுத்துக் காட்டுவது இவர்க்கே உரிய தனிச்சிறப்பாகும்.

தனித்தமிழ் இயக்கங்கண்ட தவத்திரு மறைமலை அடிக ளாருக்குப் பிறகு அவ்வினிய, தூய, தனித்தமிழில் சுவைபட எழுதுவதிலும் நமது திரு. பி.மா. சோ அவர்கள் வல்லுனர் என்பதையும் இந்த நூலும் இவரதுஏனைய நூல்களும் எடுத்துக் காட்டுன்றன.

சைவ மெய்யன்பர்கள் ஒவ்வொருவரும் இந்த நூலைப் படித்துச் சிவபிரானின் முழு முதன்மை பற்றி நமது திரு. பி. மா. சோ அவர்கள் எடுத்துக்காட்டியுள்ள அசைக்க முடி யாத சான்றுகளை அறிந்து இன்புறுமாறு வேண்டுகின்ருேம்.

—வாசஸ்பதி

சிவம்

---

ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர்
திவ்ய சரித ஸங்க்ரஹம்

சுமார் 400 ஆண்டுகளுக்கு முன் நம் தொண்டை நன்னுடு அடையப்பலத்தில் அவதரித்து தமது உயிருக்கு ஆபத்து என்றும் பாராது வைணவத் தாதாசாரியார் என்பவரின் கொடுமைகளை எதிர்த்துப் போராடி சிவோத்கர்ஷம் நிலை நாட்டிய மகானின் வரலாறு. பிரம்மஸ்ரீ மஞ்சக்குடி K. ராஜ கோபால சாஸ்திரிகளால் எழுதப்பட்டது. 96 பக்கங்கள் விலை ரூ. 4–00.

பதிப்பாசிரியர்: ஆங்கிரஸ S. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேல மாம்பலம், சென்னை–6000033

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

ஆங்கிரஸ சர்மாவின்

# சிவபுராண ஞானபூஜை

என்னை நன்கு படைத்தனன் இறைவன்
தன்னை ஞான பூசைசெய் திடவே

ஆசிரியர் ஆங்கிரஸ சர்மாவின் 67வது சிவபுராண ஞான பூஜை வரையில் 1982வது ஆண்டுமலரில் கொடுத்திருந்தோம். அதற்கு மேல் 76வது ஞானபூஜை வரையில் உள்ள விவரங்களை இங்குப் பிரசுரிக்கின்றோம். தனித்தலைப்புகளில் செய்யப் பெற்ற சொற்பொழிவுகள் பல ஆகையால் இடமின்மை கருதி அவைகளின் விவரங்களைப் பிரசுரிக்கவில்லை.

## 1. ஸ்ரீ பங்கஜாம்பிகை ஸமேத ஸ்ரீ கங்காதரேசுவரர் கோயில், புரசைவாக்கம், சென்னை-84.

சென்னையில் நாள்தோறும் தொடர்ந்து சொற்பொழிவு கள் நடைபெறும் மிகச்சில இடங்களுள் புரசைவாக்கம் ஸ்ரீ பங்கஜாம்பிகை ஸமேத ஸ்ரீ கங்காதரேசுவரர் ஆலயம் ஒன்று கும். திருமுறைத் திருநெறி மன்றத்தார் இச்சொற்பொழிவு களை ஏற்பாடு செய்து நடத்தி வருகின்றனர். இந்த ஆலயத் தில் நமது ஆசிரியருக்கு 11-4-1983 முதல் 6-5-1983 வரையில் பெரியபுராணம் சொற்பொழிவு செய்யும் வாய்ப்பு கிடைத்தது. இது ஆசிரியரது 68வது ஞானபூஜையாகும்,

## 2. ஸ்ரீ பிரசன்ன பார்வதி ஸமேத ஸ்ரீ சந்திரமௌளீச்வரஸ்வாமி ஆலயம் புதுப்பேட்டை, கிருஷ்ணகிரி

நமது மதிப்புக்குரிய பேராசிரியர் திரு. P. K. வரத ராசஞர் அவர்களது நன்முயற்சியாலும் ஆதரவாலும் மேற்படி ஆலயத்தில் 10-11-1983 முதல் 15-11-1983 வரை ஆறு தினங்கள் கந்தர்ஷஷ்டி விழாவை முன்னிட்டு ஆசிரியரின் கந்தபுராணச் சொற்பொழிவு நடைபெற்றது. கிருஷ்ணகிரி இந்து சமயமன்றக் காரியதரிசி V.R. சுந்தரராமன் அவர்களுடைய சீரிய ஒத்துழைப்பிஞல் நிகழ்ச்சிகள் இனிது நிறைவுற்றன. இந்த ஆறு நாட்களிலும் ஆசிரியருக்கு அன்புடன் உணவளித்து உபசரித்த கிருஷ்ணகிரி டாக்டர் S. வேங்கடேசன் அவர்களது அன்பினையும் பாராட்டுகிறேம். இது ஆசிரியரது 69வது ஞானபூசையாகும்.

## 3. ஸ்ரீ தியாகராஜஸ்வாமி ஆலயம் திருவொற்றியூர்

மாசிமகப் பெருவிழாவை முன்னிட்டு மேற்படி ஆலயத்தில் ஆசிரியரது பெரியபுராணச் சொற்பொழிவு 23-2-1984 முதல் 9-3-1684 வரை 13 தினங்கள் நடைபெற்றது. ஸ்ரீ வடிவுடையம்மன் வரம் பெறும் திருக்கூட்டத்தினரின் பூரண ஆதரவால் நிகழ்ச்சி சிறப்புற நடைபெற்றது. பெரியபுராணம் முழுமையும் சொல்ல இயலாதாகி விட்டதால் இந்த நிகழ்ச்சி ஆசிரியரின் சிவஞானபூசைக் கணக்கில் சேர்க்கப்படவில்லை.

## 4. திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அறக்கட்டளைச் சொற்பொழிவு – மதுரை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அறக்கட்டளை மதுரைத் திருவிளையாடற் புராணப் பிரசங்கம் செய்யும் வாய்ப்பு இவ் வருடம் ஆசிரியருக்குக் கிடைத்தது. 2-5-84 முதல் 17-5-85

வரையில் இப்பிரவசனத் தொடர் ஸ்ரீமீனாக்ஷி சுந்தரேச்வர சுவாமி ஆலயம் தெற்காடி வீதியில் உள்ள பன்னிரு திருமுறை மன்றத்தில் நடைபெற்றது.

திருவாளர்கள் வித்துவான் தா. குருசாமி தேசிகர் அவர்களும் பன்னிரு திருமுறை மன்றச் செயலாளர் வித்துவான் ந. சீ. சுந்தர ராமன் அவர்களும் முன்னின்று சிறப்புற நடத்தி வைத்தனர். இது ஆசிரியரின் 70 வது ஞான பூஜையாகும். பன்னிரு திருமுறை மன்ற ஆதரவில் மறுநாள் 18-5-85 திருஞானசம்பந்தர் குரு பூஜைவிழாச் சொற்பொழிவும் ஆசிரியரால் செய்யப்பட்டது.

## 5. ஸ்ரீ அங்காள பரமேச்வரி ஆலயம் இராயபுரம், சென்னை-13

இராயபுரம் இந்து சமய மன்றத்தின் ஆதரவில் மேற்படி ஆலயத்தில் 30-7-1984 முதல் 4-8-1984 வரை ஆறு நாட்கள் அபிராமி அந்தாதி பிரவசனம். இது சிவபுராண ஞானபூஜையில் சேராத நிகழ்ச்சியாகும்.

## 6. திருத்தருமையாதீன சென்னைப் பிரசார நிலையம், தியாகராயநகர் சென்னை-17

திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமஹா சந்நிதானம் அவர்களின் அருளாலும், சென்னைப் பிரசார நிலையத்தலைவர் வித்துவான் ஸ்ரீமத் சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகளின் அருளாலும், மேற்படி ஆதீன சென்னைப் பிரசார நிலையத்தில் நவராத்திரி விழாவை முன்னிட்டு 25-9-1984 முதல் 4-10-1984 வரை 10 தினங்கள் அபிராமி அந்தாதி சொற்பொழிவு நிகழ்த்தும் வாய்ப்பு ஆசிரியருக்குக் கிடைத்தது. இதுவும் 108 சிவபுராண ஞானபூஜைக் கணக்கில் சேராததாகும்.

## 7. இந்து சமய மன்றம், ஜவஹர்நகர், சென்னை-82

சென்னை பெரம்பூரையடுத்த ஜவகர் நகரில் முன் மறை. திருநாவுக்கரசு அவர்களின் ஆதரவுடன் தொடங்கப் பெற்ற

இந்து சமய மன்றத்தின் ஆதரவில் ஸ்ரீமான்கள் ராமநாதய்யர் S. நடராஜய்யர், மற்றும் பலரது ஆதரவுடன் 16-10-1983 விஜயதசமி நன்னாள் முதல் பிரதி ஞாயிற்றுக்கிழமையும் ஆசிரியரது திருவிளையாடற்புராணச் சொற்பொழிவு நடை பெற்று வந்து 7-10-1984 ஞாயிறு நிறைவுற்றது. அகரம் சிந்தாமணி விநாயகர் கோவிலில் அமைந்துள்ள சிவலிங்கப் பெருமானுக்கு விசேடமான அபிஷேக ஆராதனைகள் நடத்தி அதைத் தொடர்ந்து பிரவசன பூர்த்தியும் நடைபெற்றது. பல அன்பர்கள் திரளாக வந்து விழாவைச் சிறப்பித்தனர். திரு. நடராஜ முதலியார் ஆசிரியருக்குப் பாராட்டுப் பத்திரம் வாசித்தளித்தார். இது ஆசிரியரது 71வது ஞானபூஜை யாகும்.

## 8. திருத்தருமையாதீன சென்னைப் பிரசார நிலயம், தியாகராயநகர், சென்னை-17

திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமஹா சந்நிதானம் அவர்களது பரிபூரண அனுக்கிரஹத் துடனும், சென்னைப் பிரசார நிலையத் தலைவர் வித்துவான் ஸ்ரீமத் சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகளின் ஆசியுடனும் கந்தர் ஷஷ்டியை முன்னிட்டு 24-10-1984 முதல் 29-10-1984 வரை ஆறு தினங்கள் ஆசிரியரது கந்தபுராணப் பிரவசனம் சென்னைப் பிரசார நிலையத்தில் நடைபெற்றது. இது ஆசிரி யர்து 72வது சிவபுராண ஞான பூஜையாகும்.

## 9. ஸ்ரீ பங்கஜாம்பிகை ஸமேத ஸ்ரீ கங்காத- ரேசுவரர் ஆலயம், புரசைவாக்கம், சென்னை-84

1. திருமுறைத் திருநெறி மன்றத்தின் ஆதரவில் மேற் படி ஆலயத்தில் 26-11-1984 முதல் 15-12-1984 வரையில் (இடையில் ஞாயிற்றுக் கிழமைகள் நீங்கலாக) கந்தபுராணச் சொற்பொழிவு நடைபெற்றது. இது ஆசிரியரின் 73வது சிவ புராண ஞானபூஜையாகும்.

2. மேற்படி ஆலயத்திலேயே மேற்படி மன்றத்தின் ஆதரவில் 17-12-1984 முதல் 27-12-1984 வரையிலும், பிறகு 7-1-1985 முதல் 13-1-1985 வரையிலும் திருவிளையாடற் புராண உபன்யாசம் நடைபெற்றது. இது ஆசிரியரின் 74வது சிவபுராண ஞானபூஜையாகும். இடையில் உள்ள நாட்களில் திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி சொற்பொழிவு ஆசிரியராலேயே நிகழ்த்தப்பட்டது.

## 10. ஸ்ரீசௌந்தராம்பிகா ஸமேத ஸ்ரீ கச்சபேசுவரர் ஆலயம், சென்னை-1

சென்னையிலுள்ள பிரபலமான ஆலயங்களில் ஒன்றான ஸ்ரீ கச்சபேசுவரர் ஆலயத்தில் இவ்வருட பிரம்மோத்சவத்தைத் தொடர்ந்து நடைபெற்ற விடாயாற்றி உத்சவத்தில் 6-5-1985 முதல் 18-5-1985 வரையில் ஆசிரியரது திருவிளையாடற் புராணப் பிரவசனம் 75 வது சிவபுராண ஞானபூஜையாக நடைபெற்றது.

## 11. ஸ்ரீ அங்காளபரமேச்வரி ஆலயம், இராயபுரம், சென்னை-13

இராயபுரம் இந்து சமயமன்றத்தின் ஆதரவில் அதன் தலைவரும் ஸ்ரீ அங்காள பரமேச்வரி ஆலய தலைமை அர்ச்சகரு மான சிவஸ்ரீ V. S. வாசீச்வர சிவாசாரியார் அவர்களின் சிறந்த முயற்சியால் ஆடிச் சுவாதி சுந்தரமூர்த்தி நாயனுர் குருபூசையை முன்னிட்டு 4-7-1985 முதல் 10-7-1985 வரையில் சுந்தரமூர்த்தி நாயனுர் புராணம் உபன்யாசம் ஆசிரியரால் நிகழ்த்தப்பட்டது. இதுவும் 108 சிவபுராண ஞானபூஜையில் சேர்க்கப்படவில்லை.

## 12 ஸ்ரீ பங்கஜாம்பிகை ஸமேத ஸ்ரீ கங்காத-ரேசுவரர் ஆலயம், புரசைவாக்கம், சென்னை-84

திருமுறைத் திருநெறி மன்றத்தின் சார்பில் மேற்படி ஆலயத்தில் 14-10-1985 முதல் 1-11-1985 வரையில் (இடை

யில் ஞாயிற்றுக்கிழமைகள் நீங்கலாக) நவராத்திரி விழாவை முன்னிட்டு அபிராமி அந்தாதி பிரவசனம் நடைபெற்றது. இதுவும் 108 சிவபுராணக்கணக்கில் சேர்க்கப்படாததாகும்.

## 13. மஹான் ஸ்ரீ ஒடுக்கத்தூர் சுவாமிகள் திருமடம், பெங்களூர்-42

இவ்வருடத்திய கந்தர்ஷஷ்டியை முன்னிட்டு பெங்களூர் 13, கங்காதர செட்டி சாலையில் அமைந்துள்ள மஹான் ஸ்ரீ ஒடுக்கத்தூர் சுவாமிகள் திருமடத்தில் 13-11-1985 முதல் 22-11-1985 வரை 10 தினங்கள் கந்தபுராணப் பிரவசனம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இந்த மஹானின் வரலாறு தனியாக வேறு இடத்தே பிரசுரிக்கப்பட்டுள்ளது. நிர்வாகி களால் மடம் நன்கு பராமரிக்கப்பட்டு வருகிறது. நிர்வாகிகள் திருவாளர்கள் நீலகண்ட முதலியார், Lt. Col. A.R. ஏகாம்பர முதலியார், உபதலைவர் V. லோகநாத முதலியார், காரியதரிசி சிவகுரு, முன்னாட்காரியதரிசி புருஷோத்தமன், துணைக்காரிய தரிசி குப்புசாமி முதலியார் முதலியவர்கள் இந்த சொற்பொழி வின் போது நமக்கு மிகவும் அறிமுகமாகி ஆதரவு அளித்தார் கள். இந்த 10 நாட்களிலும் தங்க இடம் அளித்த திரு. A.R. ஏகாம்பர முதலியார் அவர்களையும், உணவளித்த திரு. S. கோபாலகிருஷ்ணன் அவர்களையும் மற்றும் பலவகையில் மிகுந்த ஆதரவு நல்கிய டாக்டர் A.N. ஆறுமுகம் அவர்களை யும் மிகவும் பாராட்டிப் போற்றுகின்றோம்.

இத்திருமடத்தில் நடைபெற்ற கந்தபுராணப் பிரவசனம் ஆசிரியரது 76வது சிவபுராண ஞானபூஜையாகும்.

எஞ்சியுள்ள 32 ஞானபூஜைகளும் விரைவில் முடிவுற எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றோம்.

சிவம்.

## சிவஞான பூஜா மலர்கள்
## 1981, 1982, 1983-84

மேற்படி மூன்று ஆண்டு சிவஞான மலர்களும் இன்னும் பிரதிகள் உள்ளன. தேவையானோர் ரூ. 20.00 மட்டும் M. O. அனுப்பினால், எமது செலவில் தபால் மூலம் அனுப்பிவைக்கப்படும்.

## சிவஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

ருத்ரயாமளம் என்னும் பெருநூலின் பகுதியான சிவஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் தேவநாகரி, தமிழ் இரு எழுத்துக்களிலும் மூலம் அர்ச்சனை நாமாவளியும் பிரம்மஸ்ரீ P. N. நாராயண சாஸ்திரிகளின் தமிழ் உரையுடனும் பிரசுரிக்கப்பட்டுள்ளது.

160 பக்கங்கள் விலை ரூ. 8-50

## சிதம்பரம் ஸ்ரீ நடேசஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

தேவநாகரி, தமிழ் இரு எழுத்துக்களில் மூலமும், அர்ச்சனையும், சிதம்பரம் பிரம்மஸ்ரீ க. மீ. ராஜகணேச தீக்ஷிதர் அவர்களின் தமிழ் உரையுடன் கூடியது.

152 பக்கங்களின் விலை ரூ. 11-00

பிரசுரம் :

ஆங்கிரஸ S. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்டு காலனி குறுக்குத் தெரு,
மேல மாம்பலம், சென்னை-600 033

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

## வாழ்த்து

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே

திருச்சிற்றம்பலம்

திருஞானசம்பந்தர் அருளியது

---

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை



யத்யத் கர்ம கரோமி
தத்ததகிலம்
சம்போ தவாராதனம்

B—3

மதுரை-625 001.

